


கடவுள் துணை.

# திருக்காவலூர்க்கலம்பகம்

மூலமும் - உரையும்.

இந்நூல்

வீரமாமுநிவராலும்

இவ்வுரை

வேலூர்த்தாசில்தார்

ம-௱-௱-ஸ்ரீ-தரங்கன்பாடி

சி. பிள்ளைமுத்துப்பிள்ளையவர்கள்

வேண்டும்பொருளைத்தந்துவிரும்பிக்கேட்டுக்கொண்டபடி

தஞ்சைமாநகரம் பண்டிதர்

முத்துசாமிமுதலியார் குமாரர்

வித்வான்

அருளப்பமுதலியாராலும்

இயற்றப்பட்டுச்

சென்னபட்டணம்

தத்துவபோதினிஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

க௲அஎஉ ஹூ

# பாயிரம்.

உயர்ந்தமலையி னுச்சிமேலேற்றிய - விளக்கம்போல வேதபோதகரு
ஞ் - செந்தமிழ்ப்புலவர் சிரோமணியுமாகிய - வீரமாமுநிவர் திருவாய்மலர்
ந்தினி - தருளிச்செய்த வளவிலாநூல்கள்- வேதப்பயனொடு மேலானபொரு
ளொடும் - விளங்கலெவரு மறிந்ததன்றோ - அவற்றுள்ளுந்திருக்காவலூர்க்
கலம்பகம் - எப்பாக்களாலும் பாவினங்களாலு - மாகியிருத்தலினாலேயிதனை
ப் - படித்துணர்ந்தோர்தமிழ்ப் பிரபந்தமெல்லா - முரியசந்தத்தொடும் படி
த்துணர்தற்கும் - தேவதாய்ப்பெருமை தெரிந்து வணங்கி - வேதநெறி
யொழுகி மேற்கதிபெறுதற்கும் - கருவிநூலாயிருத்தலாலே - சேதுபதியின்
சமஸ்தானத்தில் - மகாமேன்மைபெற்ற வகீஇலாகிய-தரங்கன்பாடிப் பிள்ளை
முத்துப் பிள்ளையின்பேரரும் பென்ஷனுபீசின் - மானேஜராக வீற்றிருந்த-
சின்னப்பாப்பிள்ளை செல்வக்குமாரரும்-ராயவேலூர்த்தாசில்தாருமாகிய-பிள்
ளைமுத்துப்பிள்ளையவர்கள் - கல்வியுந்தேவபத்தியுமன்பு - மிரக்கமுமிவைமுத
லியவையுமாகிய - நல்லொழுக்கமெல்லா மிகுந்தோ ராதலால் - என்னையொ
ருபொருளாக வெண்ணி - யிந்நூற்குரைநீயெழுதுகவென்றுரை - யெழுது த
ற்கு மச்சிடுதற்கு - மளவிலாப்பொரு ளுதவிசெய்தனர் - உரைகளெழுதும் வ
ல்லமைபெற்றோர் - பலரிருந்தாலு மிந்நாளளவு - மெவருமெழுதாதிருத்தலி
னாலே - தேவதாய்திருவடிகளைச்சிந்தைசெய்து - தேவவூழியஞ் செய்தல் மு
றையேயென் - றாசைகாரணத்தா லறிவில்லாதநான் - கையுங்காலும்வழங்கா
முடவன் - பெரியவொருசமுத்திரத்தைநீந்திக் - கடந்து செல்லக் கருதியது
போல - இந்நூலுக்குரையெழுதப்புகுந்தேன் - ஆயினுமிதுவுரையெனத்தகுவ
தன்று - இவ்வுரைக் காசையே காரணமாதலிற் - கல்விகேள்வியுமாராய்ச்சியு
முடைய-பெரியோர்சிறிதுங் குற்றங்கூறார் - குற்றந்தீர்த்தெனை மேன்மைப் ப
டுத்துவார் - கல்விகேள்விமுதலியவில்லாச் - சிறியோர்குற்றஞ்சொல்லவல்ல
வரோ - சொல்லினு மவர்சொற்கொள்பவர்யாவர் - ஆகையாலியாவருமங்கீக
ரிப்பா - ரிதையென்றுநம்பியிருக்கின்றேனே.

இது - உரைச்சூத்திரம்.

## APPROBATIONS.

Ayant confié l'examen de cet ouvrage intitulé திருக்காவலூர்க் கலம்பகம் மூலமும் உரையும் au Révérend Père DAVIDNADER, qui après l'avoir examiné, m'assure qu'il ne contient pas d'erreur contre la foi, ni de chose contre les mœurs, espérant d'ailleurs que cet ouvrage sera très utile en rendant plus facile l'étude de l'œuvre célèbre du Révérend Père BESCHI, j'en approuve l'impression.

† Signé : JOS. ISI. GODELLE EV. DES THERMOPYLES.

திருக்காவலூர்க் கலம்பகம், மூலமும் உரையும் என்கிற பிரபந்தத்தைப் பரிசோதித்துப் பார்க்கும்படி சங்கைக்குரிய தாவீதுநாத ஸ்வாமியாரிடத்தில் கொடுக்க, அவரதைப் பார்வையிட்டுப் பரிசோதித்தபின் னதில் விசுவாசத்துக்கும் நல்லொழுக்கத்துக்கும் விரோதமான குற்றங் குறை யொன்றுமில்லையென்று நமக்கு நம்பிக்கை தந்தபடியினாலும், வீரமாமுனிவரால் இயற்றிய இவ்வரும் பிரபந்தத்தை யாவரு மெளிதில் கண்டுணர்வதற்கு, இவ்வுரை மிகவும் பிரயோசனமா யிருக்குமென்று நாமெண்ணினபடியாலும், இதை யச்சிட்டுப்பிரசித்தப்படுத்துவதற்கு உத்தரவளித்தோம்.

† தெர்மோப்பில் பட்டணத்தின் மேற்றிராணியாராகிய
குசைஇசிதோர்கொதேல்.

Ce que j'ai vu de ce livre m'ayant grandement plu, je pense qu'il pourra être très utile au public. En conséquence je désire beaucoup qu'il soit imprimé et publié bientôt.

Pondichéry, le 13 Septembre 1866. Signé : L. DUPUIS PROV. AP.

இப்பிரபந்தத்தில் யாங்கண்டது நமக்குவெகுமகிழ்வானதால் இஃது யாவர்க்கும் நல்லுபயோகமாகுமென்றெண்ணிச் சீக்கிரத்தில் அச்சிறப்பதிப்பித்து வெளிப்படும்படி மிகவுங்கோருகின்றோம்.

புதுவை ௧௮௬௬ ௵ செப்தெம்பர் ௴ ௧௩ ௳

N'ayant pas eu le temps d'examiner l'ouvrage entier, je ne puis guère donner mon opinion là dessus ; mais d'après les certificats que je vois, je pense que l'ouvrage sera assez apprecié.

Pondichéry, le 10 Octobre 1867. Signé : H. G. DE LINARES S. J.

# சாத்றுகவிகள்.

———o*ஸ்ரீ*o———

புதுவைச்சென்மராக்கினிமாதாகோயிலில்

எழுந்தருளியிருக்குங்குரு

## சங். தாவீதுநாதஸ்வாமிகள்

இயற்றியருளிய-ஆசிரியவிருத்தம்.

சத்தியவேதமேவேதமாதலெனத்திருக்காவற் றனியூர்மேவும்
கத்தனைக்கெழில்வீரமாமுனிசொல்கலம்பகமே கலம்பகஞ்சேர்
இத்தலஞ்சொலிக்கலம்பகத்தினுக்குத்தஞ்சையருளப்பனென்னும்
உத்தமநாவலனுலகுமதித்தேத்தவுரையுரையேயுரையாமன்றே.

புதுவைவிகாரியாவைச்சேர்ந்த

மறைக்காணத்திலெழுந்தருளியிராகின்றகுரு

## சங். சா. அந்தோனிநாத ஸ்வாமிகளால்

இயற்றியருளப்பட்ட

பதினன்குசீரடியிரட்டையாசிரியவிருத்தம்.

செயமுற்றிலங்குமெய்க்குருவீரமாமுனிவர்செய்தபற்பலநூல்களிற்
செந்தமிழிலக்கணவழக்கினுலுற்றபொருடெரிவரியவண்ணமொன்றுந்
திருக்காவலூர்க்கலம்பகம்வெண்கலிப்பாதிருந்தைக்கலமாலைசீர்
திகழனையழுங்கலந்தாதியெனவோதுஞ்சிறந்துற்றநூல்களுன்கும்
நயமுற்றதேவனன்னையர்புகழ்மைசேர்வேதநவில்கருத்தார்தலாலே
நவநித்திலங்களுறுபாற்கடலையேய்க்குமிந்நலமருவுநூல்களுக்கு
நன்னூலறிந்தவன்முன்னூறெளிந்துளோருவலர்கள்போற்றுநிபுண
ருதனருண்மடிமீதுறங்குநற்சீடனதுநாமந்தரித்தபுருடன்
வயமுற்றகடவுளருளாற்சொன்னவுரையர்தவாரிமுத்துக்களையெல்லாம்
வாரியுயர்தங்கத்தமைத்தபணிபோலுமணி மாக்கடல்குளித்தலெளிதோ
வனநித்திலப்பணிகள்விலைதந்துகொண்டணிவர்மானிடர்களென்னிலிந்த
வணமணிப்பணியையெவ்வளவாசையாற்கொள மனங்கொள்ளவேண்டுமுண [ர்வீர்
பயமுற்றுமூவுலகுமேத்துமெய்க்கடவுளைப்பரிசுத்ததேவதாயைப்
பத்தியுறநாளுமேதொழுதுய்யவெண்ணியிப்பனுவல்செய்முனிவர்வாழி
பாங்காகவிவ்வுரைசெயருளப்பன்வாழியிப் பண்புரைசெயற்குதவிசெய்
பகர்பிள்ளைமுத்துமால்வாழியிந்நூலோது பத்தரெல்லாம்வாழியே.

பணிக்கன்குப்பத்திலெழுந்தருளியிருக்குங்குரு

**சங். ஞா. மரியப்பிரகாசநாத ஸ்வாமிகள்**

இயற்றியருளியபதினறுசீரடியாசிரியவிருத்தம்.

வீரமாமுனிவனொனுமுலகேத்தும் விருக்கமீபலவகைக்கனியுள்
வியன்றிருக்காவலூர்க்கலம்பகமாம்விளங்கியவருக்கையங்கனியைக்
கூரதுபொருந்துமுரையெனுங்கருவிகொண்டதன்பொருட்கடினமதாங்
கூர்த்ததோல்விலக்கிவேதசாரமதுகொழிக்குறூற்பொருட்சுளையெடுத்துப்
பாரொலாமருந்திப்பேரின்பமடையப் பரிந்தினிதுதவினன்சீர்த்த
பாரகாவியமும்பஞ்சலக்ஷணமும் பகர்திரிபையமின்றுணர்ந்த
பேருலாவியசீரருளப்பப்புலவன் பேசுமிப்புலவனுமிவனிப்
பெற்றியையியற்றமிகுபொருளுதவும் பிள்ளைமுத்தரசும்வாழியவே.

---

சென்னபட்டணம் அர்ச். சவரியார்கோயில்விசாரணைக் குரு

**சங். சா. சாமிநாத ஸ்வாமிகள்**

இயற்றியருளிய-ஆசிரியவிருத்தம்.

சீர்வீரமாமுனிவருரைகாவற்கலம்பகமுந்திகழிதற்கு
நேர்மேவுமுவுரையுமவ்வுரையையினிதெழுதுநிபுணனுன
ஏர்மேவுமருளப்பநாவலனுமிவ்வுரையையியற்றுவித்த
வார்மேவுமுலகுவக்கும்பிள்ளைமுத்துவள்ளலொடும்வாழிமன்னே.

---

சென்னைத்துரைத்தனவித்தியாசாலையில்

**தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய**

இயற்றமிழாசிரியர் - ம-ள-ள-ஸ்ரீ

**தி. விசாகப்பெருமாளையரவர்களால்**

இயற்றப்பட்ட நிலைமண்டில வாசிரியப்பா.

திருக்கிளர்வான்றெடு செம்பொற்குடுமிப்
பொருப்பின்மேலேற்றிய விளக்கம்போல
நித்திலங்கொழிக்கு நெடுந்திரைக்கடல்சூ
ழித்தலத்தெவரு மறியவிளங்கு
மாரியர்மெய்ம்மறை யுணர்த்துமாரியர்
வீரமாமுனிவர் விண்ணிறைபயந்த
வுடுமுடிபொறுத்த வும்பர்நாயகியைப்
படுபலபாவாற் பழிச்சவுரைத்த
கவிஞர்புகழ்திருக் காவலூர்க்கலம்பகம்
புவியினிகரிலாப் பொருளமைதியதாய்த்

துளங்கலினதன்பொருள் வளங்கெழுமுலகின்
விளங்கெவர்களுமோர்ந் துளங்களிகூரவும்
தேவதாய்பழிச்சிச் செந்நெறியொழுகித்
தூவவளருள்வர மேவவுமுன்னி
யிரங்குநீர்த்தரங்க வெழின்மலர்த்தடமார்
தரங்கன்பாடி யெனுந்தகையூரினன்
மாதுபதியென வாழுரநரபதி
சேதுபதியிடைத் திகழ்வகிலானுேன்
வள்ளியொத்த வள்ளர்நயவைப்
பிள்ளைமுத்துப் பிள்ளைபெயரன்
பென்ஷனுபீசிற் பிறங்குமானேஜர்
சின்னப்பாவேள் செழுந்தவத்துதித்தோன்
அங்கமதன னடுத்தோருளமறிந்
திங்கிதத்துதவு மிருஞ்சீர்க்கற்பகம்
நீதியுங்கருணையு நிறைபொறையடக்க
மாதிநலமுறு லறிவுமுடையோன்
வேதியர்பெரியோர் விறன்மன்னவர்க
ளோதியுவக்க வுயர்பெரும்புகழோன்
இத்தலம்புகழு மியல்தாசிலாதி
யுத்தியோக முற்றமேன்மையோன்
புள்ளினமொய்க்கும் பூங்குவளைத்தார்ப்
பிள்ளைமுத்துப் பெருந்தகையுவப்பா
யிந்நூற்குரைநீ யியற்றித்தருகென
வெந்நாவலரு முளம்வியந்தேத்த
வுரைசெய்தற்குமவ் வுரையச்சிடற்கும்
பொருளளவின்றிப் பொழிந்தனனுக
விரவியபதவுரை பொழிப்புரைவிசேட
வுரையுலகுவக்க வியற்றியருளினன்
மஞ்சுநிமிர்ந்த மாடநிரைசேர்
தஞ்சையென்னுந் தகைத்தொன்னகரினன்
வண்டிவர்செங்கு வளைத்தார்மார்பன்
பண்டிதன்முத்து சாமிமால்பயந்தோன்
ஐந்திலக்கணமொ டளவில்ப்ரபந்த
மைந்துறுசாத்ரமு மற்றுமுணர்ந்தோன்
உரைபாற்கரனென வுலகொளிபரப்பும்
அருநாற்கவியரு ளப்பநாவலனே.

---

ம-ா-ா-ஸ்ரீ. புரசை - அஷ்டாவதானம்

## சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றிய நேரிசையாசிரியப்பா.

தமிழெனுமளப்பரு மளக்கரையளந்த
கமையுறுகுணத்து வீரமாமுனிவன்
கலம்பகமெனப்பல கவிமணிமாலையை
யிலங்குகாவலூர் நலங்கொள்சேசுவி
னன்னைக்கியல்புற வணிந்தனனதற்குக்
கன்னலினஞ்சுவைக் கடைசியரார்ப்பொடு
கறங்குகாவிரிமரு தரங்கமாபுரியிற்
பிறங்குசீர்ப்பிள்ளைமுத்துப்பெருந்தகை
யெத்திறத்தவரு மெளிதுணர்ந்துட்கொள
வித்தகப்பதவுரைபொழிப்புரைவிசேட
வுரையுரையென்ன வுரைத்தனனாகப்
பண்ணார்மொழியார் பற்பலருலவும்
விண்ணுறநெடுத்த மேதகுதஞ்சைப்
பொன்னகர்வாழ்செங் குமுதத்தாரினன்
பன்னலமுத்து சாமிமால்பயந்தோ
னிலக்கணவிலக்கிய மினிதுணர்செம்மல்
விலக்கரும்பெரும்புகழ் விரவியசிரோமணி
வாய்ந்தவிற்பனவண்மை
யாய்ந்தசற்குணவருளப்பநாவலனே.

---

சித்தூர்ஜில்லாஸ்கூல்தமிழ்த்தலைமைப்புலவர்

ம-ா-ா-ஸ்ரீ. தில்லையம்பூர்ச்

## சந்திரசேகரகவிராஜபண்டிதரவர்களால்

இயற்றப்பட்ட - நேரிசையாசிரியப்பாவும்

சென்னை நார்மல்ஸ்கூல்தமிழ்த்தலைமைப்புலவர் ம-ா-ா- ஸ்ரீ. கோமளபுரம்

## இராஜகோபாலபிள்ளையவர்களால்

இயற்றப்பட்ட நேரிசைவெண்பாவும்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தமும்.

நேரிசைவெண்பா.

திருக்காவலூர்க்கலம்ப கத்தினுரைசெய்தான்
திருக்காவலூர்குவளைத் திண்டோள் - தருக்காண்
அருளப்பன்னூனமிலா வங்கவிஞன்யாரும்
தெருளப்பன்னூனயத்தைத்தேர்ந்து.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

வானுறுமொருமுதல்வ னெருமதியின்முளைத்தொருவான் மதிமீத்தோன்றித்
தேனுறுதண்ணருள்பூத் தக்கனியின்விளைதீமை தெறுவான்ஞானக்
கானுறுகனிபழுத்த பூங்கொடிவாழ்காவனலூர்க் கலம்பகத்தை
மேனுறுசீரருளப்பப்புலவன்பொருள்விளக்கி விரித்திட்டானே.

(நேரிசையாசிரியப்பா.)

சீர்பெறுதமிழிற் பேர்பெறுமறிஞர்
அறமுதனன்கா முறுதிசேர்பொருளிணை
மோக்கமுறும்பன் மாக்கடமக்கே
பாவினுமினத்தினுந் தாவினூல்பகர்ந்தனர்
அப்பெரும்பொருளைத் தப்பறவோர்ந்தே
இப்புவியோர்க ணற்பயனடைவான்
இணக்கமுற்ற துணைக்காரணமாய்
அக்கரமுறைச்சது ரகராதியெனவொரு
தக்கநூறன்னைச் சாற்றினன்பின்னும்
எழுத்துச்சொற்பொரு ளியாப்பணியைந்தையும்
வழுத்துகின்றபன் னூல்களைச்சுருக்கி
எந்நூல்களிலிஃதியாவரும்விரும்பும்
தொன்னூலெனவொரு நூலைச்சொற்றனன்
தேம்பாநிகர்சுவைத் தேம்பாவணிநூல்
வான்பொழிவதுபோல் வகுத்தனன்பெஸ்கி
எனுமியற்பெயரொ டெழில்வீரமாமுனி
என்னுஞ்சிறப்பபி தானமியைந்தோன்
பெருமிதமுற்ற மறுபுலத்துதித்தோன்
கூறுசீர்த்திருக் காவலூர்க்கலம்பகத்
தூறுதேன்றன்னை யுலகினர்செவிவழி
உண்டுகளிக்கத் தண்டமிழ்க்குறையுளாம்
நனைமிகுசோலைப் புனனாடதனின்
தரங்கத்துததிசேர் தரங்காபுரம்வாழ்
எப்புவிபுகழ்சின்னப்பாவென்னும்
வளமிகுகின்ற வளகைக்கதிபன்
மாதவத்துதித்த சீதபங்கயநிகர்
ஆனனமுடையோன் மானவர்திலகன்
பிள்ளைமுத்துப்பிள்ளையென் றுலாக்கும்
வள்ளன்மனத்தின் மகிழுடனோர்ந்தே
உரைசெயெனப்பன் னுரைசெய்ய
மஞ்சுவளஞ்செறி தஞ்சைமாநகர்வாழ்
அலகறுகல்விப் புலவர்கள்புகழும்
முத்துசாமியா முத்தமிழ்க்கவிஞன்
நற்றவத்தால்வரு குற்றமில்குணத்தோன்

குசையினுமிக்க கூர்நுதிமதியினன்
வசையறுமிலக்கண வரம்பறிந்திடுவோன்
பஞ்சகாவியமுதற் பன்னூல்களுமறி
எஞ்சலில்கீர்த்தி யெழில்பெறுபுலவன்
அருளப்பனென்றே யனைவரும்புகழும்
அருளப்பனென்னு மபிதானமுற்றோன்
கற்றவர்மற்றவ ரெத்திறத்தோர்க்கும்
முற்றவர்நூற்பொருண் முடிவுதோன்றிடவே
தள்ளரும்வன்மை வெள்ளுரைசெய்தே
எழுதாவெழுத்தி னியற்றி
முழுதுலகறிய முடித்தனன்மாதோ.

---

இராயபுரம். அர்ச். இராயப்பர்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் குரு

சங். தே. மரி. ஞானப்பிரகாசநாத ஸ்வாமிகள்

இயற்றியருளிய நேரிசைவெண்பா.

தேனுரினிமையுறத் திண்வீரமாமுனிவன்
பாருடையாட்குப் பாடிவைத்த - நூனேர்
கலம்பகத்துக்கொண்பொருளைக் காட்டினுன்கற்றோர்
திலகனருளப்பன் றேர்ந்து.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பாரிலுள்ளோர்திலக் கணவிலக்கியமெனும் பரவைகளைகண்டவங்கம்
வேரினியவித்தாகி விண்ணுமண் ணுந்தரும் வித்தகனையேத்துநல்லோன்
நேரிலங்கியவீரமாமுனிப்பாடற்கு நீதவுரைசெய்தபுலவன்
பாரிலங்கியகீர்த்தி யுற்றிவன்மண்மீது பல்லாண்டுவாழிமன்னே.

---

புதுவைப்பிரபு - ம - ா - ா - ஸ்ரீ.

பிள்ளையப்பாவுமுதலியாரவர்க ளிஷ்டவித்வான்

கொந்தமூர். இராகவாசாரியாரவர்களியற்றிய

ఆర్యావృత్తం.

తిరుక్కావలూరిదేవ్యై, వీరమునిర్వ్యా వృత్తసుమకదంబమదాత్।
తస్యార్థపరిమళంస్ఫుట, మకరోత్సా_రుణ్యజనకసుకవీంద్రః॥

(అస్యార్థః.—இதன்பொருள்.)

திருக்காவలూరిదేవ్యై - திருக்காவலூரி லெழுந்தருளிய தேவமாதாவுக்கு - వీరమునిః - வீரமாமுனிவர் - వృత్తసుమకదంబం - பல்வகைப் பாக்கலம்பகமாகிற பலவகைப் புஷ்பங்கள்கலந்த மாலையை - అదా

ஜீ - ஸ்மர்ப்பித்தனர் - ஞாருஷ்மஜகர ஸுகவீம்ந்ரஃ - அருளப்பனென்கிற ம
துரகவீந்திரர் - தஸ்ய- அந்தமாலையினது - அர்த்தபரிமளம்- பொருளாகிற
மணத்தை - ஸ்புடம் - பரிமளிக்கும்படி - அகரோத் - செய்தனர் எ-று.

---

வேதத்திநும் வித்வத்திநுந்தேர்ந்த விற்பனரான
சென்னை ம - ௱ - ௱ - ஸ்ரீ
ச. த. பங்காருரெட்டியா ரவர்களியற்றிய
ஆசிரியவிருத்தங்கள்.

---

வீரமாமுனிவர்விண்ணுலகிவறி வீற்றுவாழ்கையிற்றமதரிய
சீர்கலம்பகக்கின்னுரைசெய்துவிக்கத் தேவனையிரந்திமண்ணுலகில்
நேரினன்குணரோர்புலவனைவிடுத்தார் நேர்ந்தவன்னுரைதைமுடித்தான்
ஆரொனிற்சென்னைவந்திடுந்தஞ்சை யருளப்பநாமகேசரியே.

மெய்க்கடவுடீட்டியருண்மெய்வேதகுருமுனிவன் விளம்பிந்நூலாம்
இக்குமிழ்செந்தமிழ்க்கலம்பகப்பொருளுக்கினியவுரை யியற்றினன்பூத்
திக்கனைத்தும்புகழ்தஞ்சைக்ஷேத்ரமுத்துசாமியரு ளருளப்பன்கவ்
கைக்குலதிலகன்றமிழாங்கடனீந்திவிளையாடுங்கவிவல்லோனே.

கவிஞர்களிற்சீர்சிறந்தசிலரிருந்துமக்காலே கவியாவிட்டார்
அவியுடையரிற்சிலரோவீவடைந்தும்நோவடைந்து மகலநின்றார்
புவிவிளங்கிப்புலவனிக்காற்றிருக்காவலூரனைதாட் போற்றிப்புக்குக்
கவிஞர்திரள்சற்குருக்கள்கையேற்றுக்களிக்கஜயங் கைக்கொண்டானல்.

---

இராயபுரம் இராயப்பர்கோயில் உபாத்தியாயராகிய ௱-௱-ஸ்ரீ.
பு. அ. சவரிநாதமுதலியாரவர்களால்
இயற்றப்பட்ட நிலைமண்டிலவாசிரியப்பா.

---

சந்திரன்சுமந்த சரோருகத்தாட்கென
மந்திரவீர மாமுனிதருதிருக்
காவலூரினிய கலம்பகநுண்பொருள்
யாவருமுணர்வா னணியுரைபுனைந்து
அச்சிட்டருள்கென வணிதிகழ்வேலூர்
உச்சிதத்தாசி லுயரதிகாரமும்
மெச்சியமுனிசிபல் கமிஷனர்மேன்மையும்
தங்கியவிதரணன் றரங்கன்பாடிமன்
செங்குவளைத்தார் செறிபுயன்வேதப்
பத்துறைதவரூப் பக்திமானரிய
வித்துவஜனர்க்கும் வேதவேதியர்க்கும்
உத்தமநேய வொப்பிலாவள்ளல்
அமலன்றிருவடி யமர்ந்தசிந்தையன்

கமலவானனன் கனிந்தமொழியினன்
பிள்ளைமுத்தென்னும் பிரபலன்கேட்பக்
கொங்குமிழ்பொங்கரிற் குலவியகோகிலம்
அங்குறையமுதர்க ளணிவேய்ங்குழல்பொரக்
கூவவானிறை குவியும்வளமலி
காவணிதஞ்சை யூரனற்கங்கைக்
குலத்தருளப்பக் கோதிலாநாவலன்
நலந்தருமாறு நயப்பவியற்றினன்
இன்னவன்றிறத்தை யியம்பீராயிரம்
மன்னுநாச்சேடனும் வழுத்திடலரிதே.

---

புதுவையிராஜாங்கக்கல்விச்சங்கத்துத்
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும் ஶ-ஶ-ஸ்ரீ.
## மலையப்பப்பிள்ளையவர்களியற்றிய
ஆசிரியவிருத்தங்கள்.

கடல்படிந்தொளிருமணியெடுத்துலகங் களிப்புறவளிப்பவர்கடுப்ப
மடனறுபுலமைநிறைதருவீரமாமுனிகலம்பகப்பொருளைத்
தடமலிதஞ்சையருளப்பப்புலவன் றந்தருளினனுலகுவப்ப
இடனகன்மகிமற்றிவற்குமம்முனிக்கு மென்செயும்வாழ்த்துதலன்றி.

மருக்காவேகாவாகப்புடைமருவுகாவிரியின்வடதடத்தேய்
திருக்காவலூரணையின்கலம்பகநீயுரைத்தநயந்தெரிக்கவாவென்
றுருக்காதபொன்னிலத்தாருவந்தழைக்கவீரமுனியுவப்பாய்ப்பின்னர்
செருக்காதலருளப்பனிங்குரைப்பானென்றுங்குசென்றான்போலும்.

பவக்கோடையாலுலர்ந்தபாவிகளாம்பயிர்செழிக்கப்பரிந்துநீண்ட
சவக்கோடையைத்தடுக்குங்குருசடுக்கன்மிசையேறித்தன்செம்பாலாம்
சிவக்கோடைநீர்பொழிந்தபரன்முகிற்குத்தாயானசீலிநூலைத்
துவக்கோடையம்மறவேயருளப்பனுரையெழுதித்துலங்கச்செய்தான்.

சிலம்பகத்துப்புல்லணையில்விரல்சுவைத்துக்கண்வளருஞ்சேயைநோக்கிப்
புலம்பகத்துச்சாந்திநமைப்புரக்கும்வகையிதுவென்றுபுகழ்தாயென்றன்
கலம்பகத்துக்குரையருளப்பாவென்றேயாசிசெய்துகருத்திற்றூண்டக்
குலம்பகத்துவிழுமியனுந்தஞ்சையருளப்பனன்குரையிற்றினனே.

துப்பாகத்திக்காரஞ்சொல்லமுத்துசாமியெனுஞ்சுகுணமேரு
நப்பாகாவண்ணங்கணவின்றிடவந்தோனிகுட்டிநாவலோன்மற்
றெப்பாவுமினமும்வழுவாதியற்றவீரமுனியிவர்நூற்கெல்லாந்
தப்பாமலுரையெழுதவருளப்பப்புலவனன்றிச்சாற்றவுண்டோ.

---

புதுவையில் வீரப்பெருமாட்பிள்ளை யவர்கள்
கல்விச்சங்கத்துத் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்தும், ம-ா-ா ஸ்ரீ
## சாமி பொன்னு உபாத்தியாயரவர்களால்
இயற்றப்பட்ட ஆசிரியவிருத்தம்.

திருக்காவலூர்க்கெழுந்தவரசியின்சீர்க்கலம்பகத்தைச்செவ்விதாகப்
பெருக்காவலாருளவருரையியற்றித்தருகவெனப்பெட்பக்கேட்டுத்
தருக்காவலரியனையரன்புலவர்புகழருளப்பசற்குணன்சொற்
சுருக்காவலகலவுரையெழுத்தணியாப்பிழுக்காமற்சொற்றிட்டானே.

புதுவைத் தருமக் கல்விச்சங்கம்
## சுப்பராய்வுபாத்தியாய ரவர்கள்
இயற்றிய ஆசிரியவிருத்தம்.

வலம்பகத்தின்பயோதரம்போற்றமிழ்த்திரைமாந்திக்கவியாமாரிபெய்யும்
பலம்பகத்தின்பானவருளப்பவளன்முன்னூலாம்பரிதிகாண்பான்
சொலம்பகத்தின்மணியாகத்திருக்காவலூர்க்கிறைவிதூயசீரார்
கலம்பகத்திற்குரைபுனைந்தானதற்கதிகநிகருலகிற்கண்டிலேமால்.

வித்வப்ரபு, ம-ா-ா-ஸ்ரீ
## தீவான் நயினுத்தைஅப்பாகாமுதலியாரவர்கள்
இயற்றிய ஆசிரியவிருத்தம்.

திருக்காவலூர்க்கலம்பகமெனுஞ்செய்யுளிச் செகமீதுவாழ்பல்லறிஞர்க்
குருக்காலமைந்தசூரத்திரைநிகர்த்தலா லுறுபொருளுணர்ந்திலரொன
அருக்காதவன்பிறைலருளப்பநாவல னருந்தமிழ்க்கடல்வாவிஞேன்
திருக்காவதொன்றுமின்முன்றோர்வியக்கவுரை செய்தச்சிலேற்றினனரோ.

புதுவைப்பிரபு, ம-ா-ா-ஸ்ரீ
## பிள்ளையப்பாவுமுதலியாரவர்கள்
இயற்றிய - நேரிசையாசிரியப்பா.

திருவளரிந்தத் தேயமறிவு
மருவவுரோமை யொரீஇவந்த
வாரியவொனவிப் பாரொலாம்புகழும்
வீரமாமுனிவர் மேன்மையினுரைத்த
வொருதிருக்காவலூர்க்கலம்பகத்துக்
குரைமுன்றெழுதி யோர்புகழ்கொண்டான்
பொன்னைத்துலாத்திற் குன்றிபொருவ

லென்னத்தன்னை யேனைப்புலவர்
பொருவவோங்கிய புலவன்
அருநூன்மழைபொழி யருளப்பமுகிலே.

---

வேதத்துங்கல்வியினுஞ் சிறந்தவிற்பன்னராகிய-ம-ா-ா-ஸ்ரீ.

## பு. கனகராயமுதலியாரவர்கள்

இயற்றிய ஆசிரியவிருத்தம்.

பூவுலகும்யாவுலகும் புகழ்வீரமாமுனிவர்புகன்றளித்த
காவனலூர்க்கலம்பகத்துக்குரையெழுதலரியதென்றுகைவிட்டார்கள்
மாவலமையோடிருந்தபுலவரொலாமென்றுரைத்தான்மகிமதிக்க
மூவுரைசெய்யருளப்பநாவலன்சீர்நாமெடுத்துமொழிதற்பாற்றே.

---

## பு. சவராயலுநாய்கரால்

இயற்றப்பட்டஆசிரியவிருத்தங்கள்.

தெருளப்பார்கடலுலகிற்சிறந்தமாவீரமுநிசெய்தவேதப்
பொருளப்பார்கலம்பகத்திற்புதைபொருள்யாதென்றொருவர்புகன்றுல்வாணர்
மருளப்பாமுடியாதென்றிசைப்பதைக்கண்டுரையதற்குவழுவிலாமல்
அருளப்பாவருளப்பாவென்றமலனிவனையிவணனுப்பினனே.

பார்மணக்கும்புலவர்பிரானெனும்வீரமாமுனிவர்பகர்ந்தவேதச்
சீர்மணக்குங்கலம்பகத்துக்கிலங்குமலங்காரவுரைசெய்தான்வாசத்
தார்மணக்குந்திண்புயனந்தஞ்சையருளப்பனெனுந்தமிழ்ப்பாவாணன்
ஏர்மணக்கும்பிள்ளைமுத்துப்பிள்ளைமானஃதையச்சிலேற்றினனே.

---

தஞ்சை - ம - ா - ா - ஸ்ரீ

## சின்னசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றிய கலிவிருத்தம்.

வேதநூன்முழுதுந்தெரிமேன்மையன்
நாவலன்னருளப்பவேளுக்கொரு
காவலூரின்கலம்பகத்திற்குரை
மேவவாற்றிடல்மெத்தவருத்தமோ.

---

கடவுள் துணை.

# திருக்காவலூர்க்கலம்பகம்

## மூலமும் உரையும்.

---

### காப்பு.

---

(கட்டளைக்கலித்துறை.)

பாற்கடற்கன்னிச்சங்கிங்கணரிதிற்பயந்தளித்த
மேற்கடற்றேவதிருமுத்தம்[1]பூண்டுவிரிதமிழ்ப்பா
நாற்கடற்[2]றொல்லந்துறைசேர்ந்துகாவலூர்[3]நங்கையெனு
நூற்கடற்றேவமுதள்ளிநுகர்வா[4]னுவன்றிடவே.

(பதவுரை.)

விரி - விரிந்த—தமிழ் - தமிழிலுள்ள—நால் - நால்வகைப்பட்ட—பா - பாக்களாகிய—கடல் - கடலினது—தொல் - பழைய—அம் - அழகிய—துறைசேர்ந்து - (ஒரு) துறையைச்சேர்ந்து—நூல்கடல் - (வேத) நூலாகிய கடலிடத்துவிளங்கும்—காவலூர்நங்கையெனும் - திருக்காவலூரிலெழுந்தருளிய மாதரசியென்கிற—தேவமுது - தேவாமிர்தத்தை—அள்ளி - (மனமாகிய கரத்தால்) அள்ளி—நுகர்வான் - (அறிவாகியவாயினால்) உண்ணும்படி—நுவன்றிட - (நான் ஒரு கலம்பகத்தைச்) சொல்ல—பால்கடல் - (நற்) குணமென்னுங் கடலிடத்து உள்ள—கன்னிசங்கு - (அம்மாதரசியாகிய) கன்னி மரியாயியென்னுஞ் சங்கானது—இங்கண் - இவ்வுலகத்தில்—அரிதில் - அரிதாக—பயந்து அளித்த - பெற்றருளிய—மேல்கடல் - மேலாகிய கடலில் விளங்கும்—தேவதிருமுத்தம் - தேவசுதனாகிய திருமுத்தினை—பூண்டு - (என்னுடைய மனோவாக்குக்காயங்களிற்) புனைந்தேன் என்றவாறு. ஏகாரம் - ஈற்றசை.

(பொழிப்புரை.)

விரிந்ததமிழிலுள்ள நால்வகைப்பட்ட பாக்களாகிய கடலினது ஓர் அழகிய பழந்துறையைச்சேர்ந்து * வேதநூற்கடலிடத்து விளங்குந் திருக்காவலூர் நங்கையென்னுந் தேவாமிர்தத்தை மனமாகிய கரத்தாலள்

---

* தேவமாதா வேதநூற் கடலிடத்துவிளங்குதலை அர்ச். லூக்கா என்பவர் எழுதின சுவிசேஷம். ௨ஆ அதிகாரம் ௪௬-ம். வசனமுதல் ஐந்து வசனங்களிலுங் காண்க.

ளி யறிவாகிய வாயாலுண்ணும்படி நானொரு கலம்பகத்தைச்சொல்ல அது நன்குமுடிதற்பொருட்டு நன்மையென்னுங் கடலிடத்துள்ள அந்நங்கையாகிய கன்னி மரியாயியென்னுஞ் சங்கானது இவ்வுலகத்திலே யருமையாகப்பெற்ற வானுலகென்னுங் கடலிடத்து விளங்கிய தேவசுதனென்னுந் திருமுத்தை யென்னுடைய மனமொழிமெய்களிற் பூணேந்தேனென்றவாறு.

யான், தோன்றாவெழுவாய். பூண்டு, பயனிலை. முத்தம், செயப்படுபொருள்.

இங்கே "விரிதமிழ்ப்பாநாற்கட" லென்றது வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா வென்னு நான்கு பாக்களோடும் அவற்றினினமாகிய துறை தாழிசை விருத்தங்களின் விரியைஎனவும் "தொல்லந்துறைசேர்ந்து" என்றது பழையமுறைப்படி கலம்பகம் அந்தாதிமுதலாகிய பிரபந்தங்களுள் ஒன்றைச்செய்யப்புகுந்து என்பதை எனவுங் கொள்க.

இவ்வுரையின்படி இக்கட்டளைக்கலித்துறையின் கருத்து, முன்னோர் விதித்தவிதிப்படி நானொரு கலம்பகஞ்சொல்லி அதனால் திருக்காவலூரிலெழுந்தருளிய தேவதாயைத்துதிக்க அது நன்குமுடிதற்பொருட்டு அத்தேவதா யிவ்வுலகில் அற்புதமாகப்பெற்ற வானுலகரசனைத் துதிப்பேனென்பதென்க.

இவ்வுரையினிடத்து வானீற்றெதிர்காலவினையெச்சம், "முதலிறனன்கு மீற்றின்மூன்றும் வினைமுதல்கொள்ளும்" என்ற நன்னூற்சூத்திரவிதிப்படி "நுவன்றிட" வென்னுந் தன் கர்த்தாவின்வினைகொண்டு முடிந்தது.

இவ்வானீற்றெச்சம் "சொற்றிரியினும்பொருடிரியாவினைக்குறை" என்ற விதிப்படி "யான்கொள்வான் பொன்கொடுத்தார்" எனப் பிறகர்த்தாவின் வினைகொண்டும் முடிதலால் இதை யவ்வாறுகொண்டுகூறு மற்றோர்வகையுரை வருமாறு.

(கண்ணழித்துரை.)

விரிதமிழ்ப்பா நாற்கடற்றொல்லந் துறைசேர்ந்து - (யாவரும்) விரிந்த தமிழிலுள்ள நால்வகைப்பட்ட பாக்களாகிய கடலைக்கடந்து பழமையான அழகிய துறையைச்சேர்ந்து—காவலூர் நங்கையெனு நூற்கடற்றேவமுதள்ளி நுகர்வான்-வேதநூற் கடலிடத்துப்போய் அதில் விளங்கும் திருக்காவலூர் நங்கையென்னுந் தேவாமிர்தத்தை (மனமாகிய கரத்தால்) அள்ளி (அறிவாகிய வாயினால்) உண்ணும்படி—நுவன்றிட - நானொரு கலம்பகத்தைச்சொலல—பாற்கடற்கன்னிச்சங்கின் கணரிதிற் பயந்தளித்த மேற்கடற்றேவ திருமுத்தம்பூண்டு - நன்மையென்னுங் கடலிடத்துள்ள அந்நங்கையாகிய கன்னி மரியாயியென்னுஞ் சங்கானது இவ்வுலகத்திலே யருமையாகப்பெற்ற வானுலகென்னுங் கடலிடத்து விளங்கிய தேவசுதனென்னுந் திருமுத்தை யென்மனமொழிமெய்களிற் பூணேந்தேனென்றவாறு.

கரைசேர்ந்து என்னாது "துறைசேர்ந்து" என்றதனால் விரிதமிழ்ப்பா நாற்கடலென்பதனோடு "கடந்து" என்பதையும் "நூற்கட" லென்பதனோடு "போய்" என்பதையும் "விரிதமிழ்ப்பா நாற்கடற்றொல்லந் துறைசேர்ந்து" என்றத

னால் "நுவன்றிட" வென்பதனோடு "ஒரு கலம்பகத்தை" என்பதையும் வருவித்துரைத்தாம்.

இவ்வுரையின்படி இக்கட்டளைக்கலித்துறையின் கருத்து, யாவரும் நான்கு பாக்களாலும் அவற்றினினங்களாலும் ஆக்கப்பட்ட பல பிரபந்தங்களையுஞ் சந்தேக விபரீதமின்றி யோதும்படி முற்றுணரவும் வேதமுணரவும் அவ்வேதத்தில் விளங்குந் தேவதாயை மனத்திற்கொள்ளவும் நானொரு கலம்பகத்தைச் சொல்ல அது நன்குமுடிதற்பொருட்டு அத்தேவதா யிவ்வுலகி லற்புதமாகப்பெற்ற வானுலகரசனைத் துதிப்பேன்என்பதென்க.

1. பூண்டு என்பது தன்மையொருமை யிறந்தகால வினைமுற்று. இதனை நன்னூலிலே "டவ்வொடு" "உகரவும்மை" கழிவும் எ-ம். "குடுதுறுவென்னுங் குன்றியலுகரமோ டல்லனென்னே னாகுமீற்ற விருதிணைமுக்கூற்றொருமைத் தன்மை" எ-ம். கூறியவிதிகளாற் காண்க.

2. தொல்லந்துறையென்றதில் அம்மென்பது விரித்தல்விகாரத்தால் வந்ததெனக்கொள்ளுமமையும். இதைத் தொன்னூல் விளக்கம் - ௩௭ - ம். சூத்திரவுரையிற்காண்க.

3. நங்கையென்பதற்குப் பெண்ணிற் சிறந்தாளென்பது பொருளாதலான் மாதரசியென்றும்.

4. நுவன்றிடவென்னுஞ் செயவெனெச்சம் பூண்டென்னுந் தன் கர்த்தாவின் வினைகொண்டு காரியப்பொருளில் வந்தமையால் எதிர்காலத்தை யுணர்த்திநின்றது.

இதனுட் "பாற்கடற் கன்னிச்சங்கு" "பயந்தளித்த" "தேவதிருமுத்த" மென்பதும், "தமிழ்ப்பாநாற்கடற் றொல்லந்துறை" யென்பதும் "நங்கையென்னு நூற்கடற்றேவமு" தென்பதும் இயைபுருவகவணிகளாம்.

சுதனாகிய சர்வேஸ்வரனை முத்தமாக வுருவகஞ்செய்தமையாற் பூண்டு என்றும், தேவமாதாவை யமுதமென் றுருவகஞ்செய்தமையால் அள்ளிநுகர்வானென்றுங் கூறினர்.

இச்செய்யுள் தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளு முரைத்தமையாலே தற்சிறப்புப்பாயிரம்.

---

# நூல்.

## மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

(நான்கடித்தாவிரண்டு.)

பார்மேவும்பழிநீப்பப்பகர்ந்தடங்காப்பரிவுள்ளிச்
சீர்மேவுந்திருவுளத்தைத்தெளிந்தமரருளம்[1]பனிப்ப
வுருவில்லானுருவாகியுலகிலொருமகனுதிப்பக்
கருவில்லாக்கருத்தாங்கிக்கன்னித்தாயாயினையே.
[2]மண்ணுலகந்துயர்நீங்கமன்னுயிர்கள்சிறந்துவப்ப
விண்ணுலகம்[3]புகழ்ந்தேத்திவியந்[4]தலர்சேவடி[5]வருட
வான்றளங்கள்புறங்காப்பவானரசர்பணிகேட்ப
மீன்றளங்களணிமதிபோல்விண்ணரசாளாயினையே.

(பதவுரை.)

உருவில்லான் - அருவனானகடவுள்—பார் - பூமியிலுள்ளவர்கள்—மேவும்-அடையும்—பழி - பாவப்பழியை—நீப்ப - ஒழிக்க—பகர்ந்து அடங்கா - சொல்லியடங்காத—பரிவு - அன்பினால்—உள்ளி - நினைந்து—அமரர் - சம்மனசுகள்—சீர்மேவும் - சிறப்புப்பொருந்திய—திருவுளத்தை - அத்திருவுளச்செயலை—தெளிந்து - தேர்ந்து—உளம்பனிப்ப - உள்ளம் நடுங்கவும்—உருவாகி - உருவமுள்ளவனாகி—உலகில் - இவ்வுலகத்தின்கண்—ஒருமகன் உதிப்ப - ஒரு குமாரனாகப் பிறக்க—கரு இல்லா - (உலகியலின்படி கொள்ளுங்) கருவின்றி—கருத்தாங்கி - கருப்பங்கொண்டு—கன்னித்தாயாயினை - கன்னிமைகுன்றாத அன்னையாயினை.—மண்ணுலகம் - பூவுலகத்துள்ளார் — துயர் நீங்க - துன்பத்தைவிட்டு நீங்குதற்காகவும்—மன் உயிர்கள் - நிலைபெற்ற பிராணிகள் — சிறந்து உவப்ப - சிறப்புற்றுமகிழ்தற்காகவும்—விண்ணுலகம் - வானவர்கள்—புகழ்ந்து ஏத்தி - புகழ்ந்துதுதித்து—வியந்து - வியப்படைந்து—அலர் - தாமரைமலரையொத்த—சே - செவ்விய, அடி - (உன்)பாதங்களை—வருட - பிடித்துத்தொழவும்—வான்தளங்கள் - வானுலகிலுள்ள சேனைகள்—புறம் - புறத்திலே சூழ்ந்து—காப்ப - காத்துக்கொண்டிருக்கவும்—வான் அரசர் - வான்வீட்டின்கண் அரசராய்வாழ்கின்றவர்கள்—பணிகேட்ப - (நினது) ஏவலைக் கேட்கவும்—மீன்தளங்கள்-நக்ஷத்திரக்கூட்டங்களை—அணி-(தன்னைச்சூழும்படி) யணிந்த—மதிபோல் - சந்திரனைப்போல—விண் அரசாள் ஆயினை - (அவராற்சூழப்பட்ட) மோக்ஷராக்கினியாயினை. ஏகாரம்இரண்டும் ஈற்றசைகள்.

(பொ - ரை.) அருவனான சர்வேஸ்வரன் மனிதர்கொண்ட பாவத்தைப்போக்க மிகுந்தவிரக்கமாகி வானவரெல்லா மத்திருவுளச்செயலுக்குள்ளம்நடுங்கவு மிவ்வுலகத்தி லுருவங்கொண் டொருகுமாரனாகப்பிறக்க வுலகியலின்படிகொள்ளுங்கருவின்றிக் கருப்பங்கொண்டு கன்னி

மைகுன்றாததாயாயினை. மனிதர் துன்பத்தைவிட்டு நீங்குதற்காகவும் நிலைபெற்ற ஜீவகோடிகள் சிறப்புற்று மகிழ்தற்காகவும் சம்மனசுகள் புகழ்ந்து துதித்து வியப்பாயுன் சிவந்த பாதாரவிந்தங்களைப் பிடித்துத் தொழவும் வானுலகிலுள்ளசேனைகள் புறத்திலேசூழ்ந்து காத்துக்கொண்டிருக்கவும் வான்வீட்டின்கண்ணே அரசராய்வாழ்கின்றவர்கள் நின்னேவலைக்கேட்கவும் நக்ஷத்திரக்கூட்டங்களாற் சூழப்பட்ட சந்திரனைப்போல அச் சம்மனசுமுதலியோராற் சூழப்பட்ட மோக்ஷராக்கினியாயினை.

1. சகலபாவங்களையுஞ் சகல சத்துருக்களையுஞ் சகலலோகங்களையு கொடிக்குமுன்னே அழிக்க வல்லமையுள்ள சர்வேஸ்வரன் தன தொப்பற்ற தயையைக் காட்ட மனிதவுருவங்கொண்டு நீசராற் கடினபாடுபட்டு மரிக்க வியைந்த வரியதன்மையைக்கண்ட வமரர்செயலைச் சொல்லுதலா லுளங்களிக்கவென்னுது உளம்பனிப்ப வென்றூர்.

2. துயர்நீங்கவென்றமையாலே மண்ணுலகமென்றது மனிதரையெனவும் சிறந்துவப்பவென்றமையாலே யுயிர்களென்ற தப்போழ்து மகிழ்வின்றிக் கிடந்த மரமுதலிய வோரறிவுயிர்முதல் விலங்கு புள்ளாதி யையறிவுயிர்களாகிய வஃறிணையுயிர்களையெனவும் பெற்றூம். உயிர்களென்ற தஃறிணையுயிர்களையாயின் உயிர்களென்று வாளா கூறாது மன்னுயிர்களென் றடைதந்துகூறியதென்னையோவெனின் அவற்றினுயிர்கள் மக்களுயிர்களைப்போல மோக்ஷத்தையேனு நரகத்தையேனுமிடைவிடா தநுபவித்தற்கெக்காலமு மழியாதுறபகைவயல்லவாயினுந் தொன்றுதொட் டவ்வினங்களிங்கழியாது நிலைபெற்றுவருதலா லவ்வாறுகூறினர் எனக்கொள்க. மண்ணுலகமென்பது அதில் வாழ்வாரையுணர்த்தலால் இடவாகுபெயர். உயிர்கள் என்பது தம்மைவிடாமல் அவ்வுடல்களையு முணர்த்தலால் விடாதவாகுபெயர்.

3. புகழ்ந்தேத்தியென்பது உவகையால்வந்த அடுக்கணி: தொன்னூல் விளக்கம் ருகஎ - ம். சூத்திரத்திற்காண்க.

4. பாதங்கட்குவமையாவது அதுவேயாதலால் அலரொன்றதற்குப் பொருள் தாமரைமலரொன்றும்.

5. வருட என்பது பிடிக்கவென்னும்பொருளில்வருதலை "அடிவருடிப் பின்றூங்கி முன்னெழுந்த பேதையே" யென்பதிற்காண்க.

(நான்கடித்தாழிசை யாறு.)

தண்சுடர்க்[1]கான்மதிக்குழவிதாங்கியபூவடிவிளங்கத்
தெண்சுடர்க்காலுடுவணைந்ததிருமுடிகொள்சிரமிமைப்பப்
பனியுயிர்த்து[2]மனங்குளிர்க்கப்பரிதி[3]யுடுத்துட்டிலங்கத்
[4]தனியுயிர்த்துமரசணியாத்தரிப்பதுநின்விருதாமோ.
கனைபூத்தசோணுட்டுக்காவிரியின்வடகரைமேற்
சினைபூத்தநிழற்பொழில்வாய்சிங்கநெடுங்கொடிநிழற்றுங்

திருக்காவலூரகத்துத்திகழொளிவாய்மணிக்கோயி
லருட்காவலியற்றிநம்மையளிப்பதுநின்றயையாமோ.
உள்ளுருவாக்கவச[5]மென[6]வுத்தரியத்துடன்[7]மருடீர்
தெள்ளுருவாமணிமாலைசிறந்தேந்துங்கைந்நீட்டி
வாய்பொய்யாமறைத்திசையாம்வடதிசையேதனிநோக்கித்
[8]தாய்பொய்யாவடைக்கலமேதருவதுநின்புகழாமோ.
கான்பொதுளும்பூம்புகையுங்கமழ்பூவுமணந்தேங்க
மீன்பொதுளுமொளிமணியார்விமானத்துளெழுந்தருளிப்
பார்பூத்தவினையறநீபயந்தநலத்திவ்வுலகுஞ்
சீர்பூத்தவானெப்பச்செய்வதுநின்சிறப்பாமோ.
தாண்மலரோதலை[9]யரும்பத்தரும்பணிகேட்டுளம்பனிப்பச்
சேண்மல[10]ரோயுன்வரத்தாற்றிருக்கடலூடினிதாழ்ந்து
வானவருங்காணாமனந்[11]தேற்றூப்புன்பாவா
லீனவருள்[12]யானீந்தற்கியைந்ததுநின்றிறமாமோ.
யாழ்குரலேயினிதென்னவீன்றுட்கேதன்மகன்சொற்
றூழ்குரலேயினிதென்றதகைமைத்தாமனதிரங்கித்
[13]துவர்வாய்ப்பொங்கலைமணிபோற்றொடர்புளதாய்நீயென்ற
னுவர்வாய்ப்புன்புகழுரைகொண்டுவப்பதுநின்பரிவாமோ.

(ப-ரை.) தண் - குளிர்ச்சியாகிய—சுடர் - கிரணங்களை—கால்- தருகின்ற—மதி குழவி - பிள்ளைச்சந்திரனனது—தாங்கிய - சுமக்கப்பெற்ற—பூ - (தாமரை) மலரையொத்த—அடி - (நின்) பாதங்கள்—விளங்க - பிரகாசிக்கவும்—தெண்சுடர் - தெளிவுபொருந்தியகிரணங்களை—கால் - வீசுகின்ற—உடு - நக்ஷத்திரங்கள்—அணைந்த - சேர்ந்த—திரு - அழகிய—முடி - கிரீடத்தை—கொள் - கொண்ட—சிரம் - (நின்) சென்னியானது—இமைப்ப - விளங்கவும்—பனி - குளிர்ச்சியை—உயிர்த்து - தந்து—மனம் - (அன்ப) ரிதய (மாகிய தாமரையை)—குளிர்க்க - குளிரச்செய்ய—பரிதி - சூரியனை—உடுத்த - உடையாகவணிந்த—உடல் - (உனதுதிரு) மேனி—இலங்க - ஒளிரவும்—தனி - ஒப்பில்லாத கடவுளை—உயிர்த்தும் - (நீ) யீன்றும்—அரசணியா - யரசுக்குரிய வணிகளாக—தரிப்பது - (அச்சந்திரன் முதலியவைகளை) அணிந்துகொள்ளுதல்—நின்விருதாமோ - நின் விருதாயிருக்கின்றதோ.—சோணாட்டு - சோழநாட்டின்கண்—கனைபூத்த - ஒலிதங்கிய—காவிரியின் - காவேரியாற்றிற்கு—வடகரைமேல் - வடக்கின்கணுள்ள கரையில் விளங்காநின்ற—சினைபூத்த - கிளைகள் புட்பித்திருக்கப்பெற்ற—நிழல் - குளிர்ச்சிபொருந்திய—பொழில் - பூஞ்சோலைகளும்—வாய் - (உனக்குரிமையாகப்) பொருந்திய—சிங்கநெடுங்கொடி - பெரிய சிங்கக்கொடியும்—நிழற்றும் - நிழலைச்செய்கின்ற—திருக்காவலூரகத்து - திருக்காவலூரினிடத்து — திகழ் - விளங்கிய—ஒளிவாய் - ஒளிபொருந்திய—மணி - அழகிய—கோயில் - ஆலயத்தில் வீற்றிருந்து—அருள்- கிருபையினால்—நம்மை - எங்களை—காவல்இயற்றி - காப்பாற்றி—அளிப்பது - ர

கூறிப்பது—நின்தயையாமோ - நினதுகருணையாயிருக்கின்றதோ.—வாய் - சொற்கள்—பொய்யா - பொய்யாகாத—மறை - வேதத்தையுடைய—திசையாம் - திக்காகிய—வடதிசையே - வடதிக்கினையே—தனி - ஒப்பற—நோக்கி - நோக்கியிருந்து—உள் - உள்ளே—உருவா - (குண்டுகள்) உருவிச்செல்ல வியலாத—கவசமென - மெய்ச்சீராவென்று சொல்லத்தக்க — உத்தரியத்துடன் - உத்தரீயத்துடனே —மருள் - பேயின்வலிமை—தீர் - நீங்குதற்கேதுவாகிய — தெள் உரு ஆம் - தெளிந்த வடிவம்பொருந்திய—மணிமாலை - ரத்நஜபமாலையையும்—சிறந்து - சிறப்புற்று—ஏந்தும் - ஏந்திய — கைந்நீட்டி - (உன்) கையை நீட்டி—தாய் - அன்னையைப்போல—பொய்யா - தவறாத—அடைக்கலமேதருவது - அடைக்கலமே கொடுப்பது — நின்புகழாமோ - நினது புகழாயிருக்கின்றதோ.—கான் - வாசனை—பொதுளும் - நிறைந்த—பூ - பொலிவார்ந்த—புகையும் - தூபமும்—கமழ்பூவும்-பரிமளிக்குமலர்களும்—மணம்தேங்க - வாசனைதந்து நிறைய—மீன் - நக்ஷத்திரங்களைப்போல—பொதுளும்-நெருங்கிய—ஒளி - பிரகாசத்தைத் தருகின்ற—மணி ஆர் - மணிகள் நிறையப்பெற்ற—விமானத்துள் - தேரின்மேல்—எழுந்தருளி - புறப்பாடாகி — பார்பூத்த - பூமியிலுள்ளோர்க்குண்டான—வினை - தீவினைகளெல்லாம்—அற - ஒழியும்படி—நீபயந்த - நீ (கடவுளைப்) பெற்ற—நலத்து - நன்மையைக்கொண்டு—இவ்வுலகும் - இவ்வுலகமும்—சீர்பூத்த - (அழியாத) செல்வம் பொருந்திய—வான் - வானுலகத்தை—ஒப்ப - நிகர்க்க—செய்வது - (நீ) செய்தல்—நின்சிறப்பாமோ - உனது சிறப்பாயிருக்கின்றதோ.—வானவரும் - சம்மனசுகளும்—தாண்மலர் - (உன்) பாதங்களாகிய (தாமரை) மலர்கள்—தலை - (தங்களுடைய) தலையிலே—அரும்ப - தோன்றவணிந்து — தரும் - நீகொடுத்தருளும்—பணி - வேலைகளை—கேட்டு - (தாங்கள்) கேட்டு—உளம்பனிப்ப - மன நடுங்கும்படி—சேண் - வானத்திலேயுள்ள—மலர் - புஷ்பங்களைப்போல—ஏய் - உன்னிடத்துப்பொருந்திய—உன்வரத்தால் - உன் வரங்களினால்—திருக்கடலூடு - (உன்) சிறப்பாகிய கடலினுள்ளே—இனிது - இன்பமாக—ஆழ்ந்து - அழுந்தி—கரைகாணு-கரையைக்காணுதிருக்க—மனந்தேற்ரு - (அதனை) மனத்திற்றெளியாமல்—ஈனவருள் - குறைபாடுள்ள மனிதர்களுக்குள்ளே—யான் - (மிகவும் அற்பனாகிய) நான் —புன் - அற்பத்தன்மைபொருந்திய—பாவால் - (என்) பாக்களைக்கொண்டு—நீந்தற்கு - (அக்கடலை) நீந்திக் கரைகாணுதற்கு—இயைந்தது - இசைந்தது—நின்திறமாமோ - உன் திறமாயிருக்கின்றதோ. — யாழ்குரலே - வீணையின் (மதுரமான) இசையையே—இனிதென்று - இன்பமுள்ளதென்று கொள்ளாத—ஈன்றுட்கே - தாய்க்கே—தன்மகன் - தன்னுடைய குமாரனது—சொல் - சொல்லாகிய—தாழ்-இழிவுபொருந்திய—குரலே - மழலைமொழிக்குரலே—இனிது என்ற - இன்பமுள்ளதென்று (உலகஞ்) சொல்லிய—தகைமைத்தா - தன்மையதாக—தொடர்பு உள - (ஞான) உறவுள்ள—தாய்நீ - தாயாகியநீ—மனது இரங்கி - என்மேல் மனவிரக்கங்கொண்டு—என் - என்னுடைய—வாய் - வாயிலிருந்துவரும்—உவர் - (யாவராலும்) வெறுக்கத்தக்க—புன்புகழ் - அற்பப்புகழாகிய—உரை - சொற்களை—துவர் - பவளம்—வாய் - தன்னிடத்தே—பொங்கு - விளங்கப்பெற்ற—அலை - கடலிடத்துத்தோன்றிய—மணிபோல் - முத்தைப்போல—கொண்டு - ஏற்

றுக்கொண்டு—உவப்பது - களிப்பது—நின்பரிவுஆமோ - நினது அன்பாயிருக்கின்றதோ. "என்றன்" என்பதன்கணுள்ள தன் என்பதும் "தாண்மலரே" என்பதிலுள்ள வேகாரமும் அசைகள்.

(பொ-ஊ.) * குளிர்ந்தகிரணங்களைத்தரு மிளஞ்சந்திரன் தாங்கிய உன் பாதாரவிந்தங்களுந், தெளிந்த கிரணங்களைத்தரும் நக்ஷத்திர கிரீடத்தைக்கொண்டநின்சிரசும், அன்பரிதயதாமரைகளைக்குளிர்க்கச் சூரியனை யுடையாகவணிந்த நின்திருமேனியும்விளங்க நீ கடவுளையேபெற்றும் மேற்கூறிய சந்திரன்முதலியவைகளை யுன்னரசுக்குரிய வணிகளாகத் தரித்துக்கொள்ளுதல், நின் விருதாயிருக்கின்றதோ. சோழநாட்டிற் காவேரியாற்றிற்கு வடகரையிலே பூஞ்சோலைகளாலும் உனக்குரிய சிங்கக்கொடியினாலும் நிழல் செய்யப்படுகின்ற திருக்காவலூரில் விளங்கு மழகிய தேவாலயத்திலேவீற்றிருந்து கிருபையினா லெங்களைக் காப்பாற்றி யிரக்ஷிப்பது நின்னிடத்து நிக ழுங் கருணையாயிருக்கின்றதோ. சத்தியவேதம்விளங்கிய வடதிசையையே நோக்கியிருந்து † குண்டுகளுருவிச்செல்ல வியலாத மெய்ச்சீராவென்று சொல்லும்படியான உத்தரீயத்தையும் பேயின் வலியு நீங்குதற்கேதுவான ரத்நஜபமாலையையு மேந்திய உன்கையை நீட்டி யாவர்க்குந் தாய்போலத் தப்பாத அடைக்கலமே கொடுப்பது நினது புகழாயிருக்கின்றதோ. வாசனைதழைத்த நறும்புகையும் பரிமளமலர்களும் வாசனையைத்தந்துநிறைய நக்ஷத்திரங்களைப் போலநெருங்கிவிளங்குமணிகள்பதித்த விமானத்திலே யெழுந்தருளிப் பூமியிலுள்ளோர்க்குண்டான பல தீவினைகளு மொழிந்துபோகும்படி நீ கடவுளைப்பெற்ற நன்மையைக்கொண் டிவ்வுலகத்தையும் வானுலகத்தைப்போலாக்குவது நீசெய்யுஞ்சிறப்பாயிருக்கின்றதோ. (மேலானவரங்களைப்பெற்ற) சம்மனசுகளும் உன்பாதாரவிந்தங்களைத் தந்தலைமேல்வைத்துப்பணிந்து உன்னேவலைத்தாங்கேட்டு நடுங்கும்படி வானுலகமலனைப்போலுன்னிடத்துள்ள வரங்களாலே நீகொண்டசிறப்பாகிய கடலிலே யழுந்திக் கரைகாணுதிருக்க அதனையுணராமற் குறைபாடுள்ள மனிதர்க்குள்ளே மிகவும் அற்பனாகியநா னற்பத்தன்மைபொருந்திய என்பாக்களை

---

* சந்திரன்முதலியவைகளைத் தேவமாதா பாதாதிகளிற்கொண்டதை அர்ச். அருளப்பருக்கு வெளிப்படுத்தின சுவிசேஷம் - கஉ - ம் - அதி. ௲ வசனத்திற் காண்க.

† உத்தரீயம் உள்ளுருவாக் கவசமாயிருத்தலையும் மணிமாலைபேயின்வலி தீர்தற்குக் கருவியாயிருத்தலையும் "தேவமாதா வணக்கமாத" மென்னுஞ் செபபுத்தகத்தில் இருபத்தைந்தாந்தேதிய ஜபத்தின்முடிவிற் கூறப்பட்ட புதுமைகளிற் காண்க.

க்கொண்டு அக்கடலைநீந்திக் கரைகாணுதற்கிசைந்த துனது நிறத்ததாயிரு க்கின்றதோ. வீணையின் மதுரமான இசையையே யின்பமுள்ளதென்று கொள்ளாத தாயானவட்குத் தன்குமாரன்சொல்லிய விழிவுள்ளமழ லைச் சொற்குரலே யின்பமுள்ளதென் றுயர்ந்தோர்சொல்லிய தன்மைய தாக ஞானவுறவுள்ளதாயாகியநீ யென்மேலிரக்கங்கொண் டென்வாயிலி ருந்து புறப்படும் வெறுக்கத்தக்க வற்பப்புகழ்ச்சொற்களைப் பவளம் வி ளங்குங் கடலிற்றோன்றிய முத்தைப்போல வேற்றுக்கொண்டு மகிழ்வது நின்னிடத்துநிகழு மன்பாயிருக்கின்றதோ.

இவ் வாறுதாழிசைக்கு மீற்றிலுள்ள வோகாரங்களாறும் வினாப்பொருளில் வந்தன. இவற்றை அசைநிலைப்பொருளிற் கொளினும் அமையும்; எதிர்மறைப் பொருளினவாக்கி யிவை நின்மேன்மைக்கு விருதுமுதலியவையாகாவெனப் பொ ருள்கொள்ளுதலு மொன்று.

1. கால் என்பது இலக்கணை. 9 "அரும்ப" வென்பதுமது. இவற்றிற்கு வே றிலக்கணம் "மீனேதலையரும்ப" வென்றுதொடங்கிய இரண்டாம்பாட்டுரையிற் காண்க.

2. மனமென்பதற்கு அன்பரது நெஞ்சமாகிய தாமரைமலரையென்றும்; இதனைக்கித்தேரியம்மாளம்மானை மலையடைகாதை - ௩௧-ம். தொடையிற்காண்க. மனமாகிய தாமரைமலரை எனத்தாழிசையிற் கூறுமையால் இது ஏகதேசவுரு வகம்.

3. உடுத்த வென்பதில் அகரம் விகாரத்தாற்றொக்கது.

4. "தனி" என்பதும் 7 "மருள்" என்பதும் ஆகுபெயர்கள். "தனியுயி ர்த்துமரசணியாத்தரிப்பதுநின்விருதாமோ" என்பதற்கு அரசணியாக வொப் பில்லாத கடவுளையே நீபெற்றும் மேற்கூறிய சந்திரன் முதலியவைகளைத்தரித் துக்கொள்வதுநின்விருதாயிருக்கின்றதோ எனப்பொருள்கொளினும் அமையும்.

5. "என" வென்னுமிடைச்சொல் "அமுக்காறெனவொருபாவி" யென் பதிற்போல இங்கே பெயரோடியைந்து வந்தது.

6. உத்தரீயம் என்னுமொழியில் ரகரவீகாரம் இங்கே குறுக்கல் விகாரம்பெ ற்றுவந்தது.

8. தாய் என்பதற்குத் தாயேயெனவிளிப்பொருள்கோடலுமொன்று.

10. ஏய் என்னும் வினைத்தொகை வரமென்னும்பெயரோடுமுடிந்தது. இந் நூலாசிரியர் வரத்திற்குமலரையுபமானமாகக்கொள்ளுதலைக் கித்தேரியம்மாளம் மானையிற் கொய்சிரத்தெழுச்சிக்காதையில் - ௧௦எ - ம். தொடையிலே "பல்வர மேகொண்டதெனப்பன்னிறப்பூமேற்பரப்பி" யென்றதனாலறிக.

11. "நட்பாடறேற்றுதவர்" "தேற்றுவொழுக்க மொருவன்கணுண்டாயின்" என்பவைபோலத் தேற்றுவென்ப திங்கே தன்வினைப்பொருளில் வந்தது.

12. "யானீந்தற்கியைந்ததுநின்றிறமாமோ" என்றதற்கு நானியையும்படி யெனக்குத் துணிவைத்தந்தது நின்வல்லமையோ என்பதுகருத்து.

13. பவளங் கடலிலேபிறத்தலை "முந்நீர்பிறந்த பவளத்தொடு சங்குமுத்து மந்நீருவர்க்குமெனில்யாரவை நீக்குகிற்பார்" "செய்ப்பட்ட வானுலகும் வான் மீன்றிங்கள் செஞ்சுடரு, மொய்ப்பட்டநீருலகுநீரிற்றுப்புமுத்தணியும்" என்பவ ற்றிற்காண்க.

(நாற்சீரோரடியராகம் எட்டு.)

உயருலகடிதொழவுயிரினுமுவகையை.
துயருலகுளியுள்துகளொழியுறுதியை.
யுலகினையருளியவொருவனையருளினை.
யலகினையறுவரமமைதனியரசினை.
வினையிடுமிருளறவெயிலிடுமறையினை.
முனையிடு[1]பகையறமுயலிடுமுடலினை.
மறையருளிறைவனைமறை[2]விலவருளினை.
யிறை[3]யருள்கதியினையினிதருடுணையினை.

(ப-ரை.) உயர் உலகு - உயர்ந்த வானுலகத்தார்—அடிதொழ - பாதங்களைத் தொழும்படி—உயிரினும் - அங்குள்ள பரிசுத்தாத்மாக்களது மகிழ்ச்சியினும்—உவகையை - நீ (மிக்க) மகிழ்ச்சியை யுடையவளாயிருக்கின்றனை.—துயர் உலகுளி- துன்பம்பொருந்திய இவ்வுலகின்கண் — உள - உள்ள — துகள் - குற்றங்களை— ஒழி - ஒழிக்கும்—உறுதியை - வல்லமையையுடையவளா யிருக்கின்றனை.—உலகினை - உலகங்களை—அருளிய - உண்டாக்கியருளிய—ஒருவனை - ஒப்பற்றகடவுளை —அருளினை - நீபெற்றருளினை.—அலகினை - கணக்கினை—அறு - நீங்கிய—வரம்- வரங்கள் — அமை - பொருந்திய—தனி - ஒப்பற்ற—அரசினை - அரசாட்சியையு டையவளா யிருக்கின்றனை.—வினை - தீவினையை—இடும் - தருகின்ற — இருள் - அஞ்ஞானவிருளானது—அற - ஒழிய—வெயில் - (ஞான) ப்ரகாசத்தை—இடு - தருகின்ற—மறையினை - வேதவடிவாயிருக்கின்றனை. — முனை - பகையை—இடு- தருகின்ற—பகை - சத்துருக்கள்—அற - ஒழிய — முயல் இடும் - போராப்பூணு ம்—உடலினை - தேகத்தையுடையவளா யிருக்கின்றனை.—மறை - சத்தியவேதத் தை—அருள் - தந்த—இறைவனை - நாதனை — மறைவு இல - மறைவில்லாமற் (க ண்ணுக்குப்புலப்பட)—அருளினை - தந்தாய்.—இறை - கடவுளால்—அருள் - கொ டுக்கப்படும்—கதியினை - மோக்ஷத்தை—இனிது - இன்பமாக—அருள் - எமக்குக் கொடுக்கும்—துணையினை - துணையாயிருக்கின்றனை.

(பொ-ரை.) வானுலகத்தா ருன்னுடைய திருப்பாதங்களை வணங்கு ம்படி அங்குள்ள பரிசுத்தாத்மாக்களினு நீ மிக்க மகிழ்ச்சியையுடையவ ளா யிருக்கின்றாய். துன்பம்பொருந்திய விவ்வுலகிலுள்ள பலகுற்றங்களை யுமொழிக்கும் வல்லமையுடையவளா யிருக்கின்றாய். எவ்வுலகங்களை யும் படைத்தருளிய * கடவுளை நீபெற்றருளினை. கணக்கில்லாத வரங்

---

* தேவமாதா கடவுளைப்பெற்றருளியதை அர்ச். மத்தேயு என்பவர் எழுதி னசுவிசேஷம், ௧ அதிகாரம் ௧௬ - ம், வசனத்திற்காண்க.

களைப்பெற்ற வொப்பில்லாத வோரிராசக்கினியாயிருக்கின்றாய். தீவினையைத்தருகின்ற வஞ்ஞான விருளொழிந்துபோக ஞானவொளியைப் பரப்புஞ் சத்தியவேதவடிவாயிருக்கின்றாய். விரோதத்தையுண்டாக்கும் பகைவரொழியும்படி ஞானப்போரையணிந்த தேகத்தையுடையவளாயிருக்கின்றாய். சத்தியவேதத்தைத்தந்நாதனை யாவர்கண்ணுக்குந் தோன்றும்படி தந்தாய். கடவுளாற்கொடுக்கப்படுமோக்ஷத்தை யின்பத்துடனெமக்குக் கொடுக்குந்துணையாயிருக்கின்றாய்.

1. பகையென்பது, பண்பாகுபெயர்.

2. இலாது என்னுங் குறிப்புவினைவினையெச்சம் இலாவென விகாரப்பட்டு வருவதுபோ லிங்கே இலது என்னுங் குறிப்புவினைவினையெச்சமும் விகாரப்பட்டு இலவெனவந்ததெனக்கொள்க. இதனை இவ்வாறு விகாரச்சொல்லாகக்கொள்ளாது "நன்றாட்டணியான் சிலவல்லநடத்தலுற்றேன்" "அளவல்லநட்டாலு நண்பல்லார்நண்பல்லர்" என்பவைபோலக் குறிப்புமுற்று வினையெச்சப்பொருளில் வந்ததென்று லமையாதோவெனின், மறைவுகளில்லனவாக மறையருளிறைவனையெனப் பொருள்கொள்ள விங்கே யமையுமேனும் இவ்வாசிரியர் தேம்பாவணியுள் "கருவியொன்றிலகன்னிபயந்தினும்" எ-ம். "பின்னையொன்றில பிற்பகல்பேரொழி லன்னையின்றிருவானனம்வாடல்காண்" எ-ம். இன்றுதன்றே யொன்றிலவாழ்ந்தேயினிதுண்டார்" எ-ம். "கறித்துண்பைம்புல்லொன்றிலகாய்தல்" எ-ம். கூறியவற்றிற் கிலக்கணமின்றாய் முடியுமாதலி னிவ்வாறுகூறப்பட்டதெனவறிக; எனவே இலவென்பதை "மறைவிலவருளினை" "முடிவிலதொழுபவர்" என்றற்றொடக்கத்தனவற்றுள் வருங்கால் இலது என்பதின் விகாரமென்றேனுங் குறிப்புமுற்றுவினையெச்சமென்றேனுங் கொள்கவெனவும் "இன்றுதன்றேயொன்றிலவாழ்ந்தே" என்றற்றொடக்கத்தனவற்றுள்வருங்கால் இலது என்பதின் விகாரமேயெனக்கொள்கவெனவுங் கூறியதாயிற்று.

3. அருள்என்ப திங்கே செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது. இதனை இலக்கணக்கொத்து வினையியல் கச - ம். சூத்திரத்தில் "செயப்பாட்டுவினையைச் செப்புங்காலை" "முதனிலைத்தொழிற்பெயர் முற்றீரெச்சம் – வினைமுதல்செயப்படுபொருளேழாதியுட் – படுசொல்லற்றே படுபொருளாயும்" "இன்னும்பலவாயியலுமென்ப" என்பதனாலறிக.

(ஈரடித்தாழிசையாறு.)

[1]ஆதியிலாவந்தமிலாவனைத்துயிர்க்குங்காரணற்கே
யோதிலெலாநிகர்கடந்தவுற்பத்தியாயினை நீ.
பூவாதிமூவுலகின்புலத்தடங்காவரையொழிக்குந்
தேவாதிதேவனைநின்றிருவயிற்றிலடக்கினை நீ.
[2]வானவர்க்குந்தெளியாதவடிவொளியான்வினையிருணீத்
[3]தீனவர்க்குந்தெளிவதற்கேயென்னுருவொன்றாக்கினை நீ.

மூவுலகு[4]மூவிரலான்முகந்தேந்துமுதலோனைத்
தேவுலகும்வியந்திறைஞ்சச்செங்கரமேலேந்தினைநீ.
பொருள்சுரந்தீனுயிர்க்கெல்லாம்பொழிந்தூட்டிவளர்த்தோனை
[5]யருள்சுரந்ததிருக்கொங்கையமுதூட்டிவளர்த்தனைநீ.
[6]அனைத்துலகுமேவலைக்கொண்டசைத்ததனியாணையினு
னினைத்துலகும்வியப்புறவிந்நிலத்தேவல்கொண்டனைநீ.

(ப-ரை.) ஆதியிலா - தொடக்கமில்லாத—அந்தமிலா - முடிவில்லாத—அனைத்துயிர்க்குங்காரணற்கே - எல்லாவுயிர்க்குங் காரணனாகிய கடவுளுக்கே—ஓதில்-சொல்லப்புகின்—எல்லாம் - எல்லாவற்றையும் — நிகர்கடந்த - ஒப்பிற்கடந்த—உற்பத்தியாயினைநீ - உற்பத்தி ஸ்தானமாயினைநீ.—பூ ஆதி - பூவுலகமுதலாகிய—மூவுலகின் - மூன்றுலகங்களின்—புலத்து - இடத்திலும்—அடங்கா - அடங்காமல்—வரையொழிக்கும் - அளவைக்கடந்த — தேவஆதிதேவனை - தெய்வமென்று சொல்லப்படுவார்க்கெல்லா முதற்கடவுளை—நின் - உனது—திரு - மேன்மைபொருந்திய—வயிற்றில் - கருப்பத்தில்—அடக்கினைநீ - அடங்கச்செய்தாய்நீ.—வானவர்க்கும் - சம்மனசுகளாலும்—தெளியாத - துணியப்படாத—வடிவு ஒளியான் - ஜோதிஸ்வரூபன்—ஈனவர்க்கும் - குறைபாடுள்ள மனிதர்களாலும் — வினையிருள் நீத்து - பாவவிருளை நீங்கி—தெளிவதற்கு - தெளிந்துணரப்படுதற்கு — என்னுரு ஒன்று - என்னையொத்த மனிதவுருவமொன்று—ஆக்கினைநீ - (அவனுக்கு) உண்டாகச்செய்தாய் நீ.—மூவுலகும் - மூன்றுலகங்களையும்—மூவிரலால் - (தன்) மூன்று விரல்களினால், முகந்து - எடுத்து—ஏந்தும் - தாங்கும்—முதலோனை - ஆதிபரனை—தேவுலகும் - தேவவுலகத்திலுள்ள சம்மனசுகளும் — வியந்து - துதித்து—இறைஞ்ச - வணங்க—செங்கரமேல் - செவ்விய கையின்கண்—ஏந்தினைநீ - தாங்கினைநீ.—ஈன் உயிர்க்கெல்லாம் - சிருட்டிக்கப்பட்ட வுயிர்களுக்கெல்லாம்—பொருள்சுரந்து - (உண்பன குடிப்பனவாகிய) பொருள்களுண்டாகச்செய்து — பொழிந்து - சொரிந்து—ஊட்டி - (அவற்றை) யுண்பித்து—வளர்த்தோனை - வளர்த்தகடவுளை—அருள்சுரந்த - அன்பினாற்சுரந்த—திரு - தெய்வீகமான—கொங்கையமுது - முலைப்பாலை—ஊட்டி - உண்பித்து—வளர்த்தனைநீ - வளர்த்தாய்நீ.—அனைத்து உலகும் - எல்லா வுலகங்களையும் — ஏவலைக்கொண்டு - ஏவுதலைக்கொண்டு—அசைத்த - ஆட்டிய—தனி - ஒப்பற்ற—ஆணையினான் - ஆக்ஞாசக்கரத்தை யுடையவனை—உலகும் - உயர்ந்தோரும்—நினைத்து - கருதி—வியப்பு உற - அதிசயப்படும்படி—இந்நிலத்து - இப்பூமியின்கண்—ஏவல்கொண்டனைநீ - ஏவுதல்கொண்டாய் நீ. "தெளிவதற்கே" யென்பதில் ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) சர்வஜீவ கோடிகளாகிய காரியங்களும் பிறத்தற்குக்காரணனாகித் தொடக்கமுமுடிவுமில்லாத சர்வேஸ்வரனுக்கேயுற்பத்திஸ்தானமாயிருக்கின்றாய்நீ. பூமிமுதலிய மூவுலகிடத்துமடங்காமலளவெல்லாங்கடந்த *தேவாதிதேவனையுனதுதிருக்கர்ப்பத்திலடக்கிக்கொண்டாய்நீ

* சர்வேஸ்வரனைத் தேவாதிதேவன் என்றது தானியேலின் தீர்க்கதரிசனம் உ - வது. அதி. சஎ-ம். வசனத்திற்காண்க.

சம்மனசுகளாலுந் தெளிந் துணரப்படாத ஜோதிஸ்வரூபனே மனிதரும் பாவவிருளைநீங்கித்தெளிந்துணர்வதற் கென்னேயொத்த மனிதவுருவமொன்றை யவனுக்குண்டாக்கினைநீ. (பரலோகபூலோக பாதாளலோக மென்கிற) மூன்றுலகங்களையுந் தன் மூன்றுவிரல்களாலேதாங்கிய தலைவனை வானுலகத்தாருந் துதித்து வணங்கும்படி யுன்செந்தாமரை மலர்க்கையிலே தாங்கினைநீ. சிருட்டிக்கப்பட்ட வுயிர்களுக்கெல்லா முண்பனகுடிப்பனவாகியபொருள்களுண்டாகச்செய்துகொடுத்து அவற்றையுண்பித்து வளர்த்தநாதனை யன்பினாற்சுரந்த திருமுலைப்பாலூட்டிவளர்த்தாய்நீ. எல்லாவுலகங்களையு மேவலைக்கொண்டசைத்த வொப்பில்லாத வாக்நாசக்கரத்தையுடையவனை யுயர்ந்தோருநினைந் ததிசயப்படும்படி யிப்பூமியினிடத்தே யேவுதல்கொண்டாய்நீ.

1. ஆதியும் அந்தமுமில்லாத வென்னுது "ஆதியிலாவந்தமிலா" வென்ற தவற்றை வலியுறுத்தற் கெனக்கொள்க. இலாவென்னு மெதிர்மறைப்பெயரெச்சவடுக்குக் காரணனென்னுந் தன்னெச்சங்கொண்டது.

2. "வானவர்க்கும்" 3. "ஈனவர்க்கு" மென்பவை யுருபுமயக்கம் பெற்றன. ஈனவர்க்குந் தெளிவதற்கெனவாளா கூறாது "வினையிருணீத் தீனவர்க்குந் தெளிவதற்" கென்றார் மனிதர் கடவுளதுருவந்தெரிதற்பொருட்டன்று வினையிருணீத்தற் பொருட்டே கடவுளுக்கு மனிதவுருவமொன் றுண்டாக்கினதென் றுணர்த்தற்கெனக்கொள்க.

3. "மூவிரல்க"ளென்றது திறம், நீதி, ஞானம் என்பவற்றை. இதனைத் தேம்பாவணிக்குணுங்குமந்திரப்படலம் எகூ-ம். பாட்டுரையிற்றிற் காண்க.

4. "அருள்சுரந்த" வென்பதற்குப்பொருள் அன்பினாற்சுரந்த வென்பதைத் தேம்பாவணி மகவருள்படலம். கஉக - ம். பாட்டில் "அருள்சுரந்தமு தாய்தரநுங்கினான்" என்பதின்பொருளினாற்காண்க.

5. "அனைத்துலகு மேவலைக்கொண்டு" என்பதை அனைத்துலகும் மேவலைக்கொண்டு எனப்பிரித்து அதற்கு எல்லாவுலகங்களினுஞ்சென்று எனப்பொருள்கோடலுமொன்று.

(அம்போதரங்கம்.)

(பேரெண்.)

உந்தையையீன்றுநீயொருவற்கீங்கரும்
வந்தையோடன்னையுமகளுமாயினை.
[1]கனியரும்பயனெடுகெலந்தபூவிணைத்
தனியருட்கன்னியுந்தாயுமாயினை.

(நான்கடியிடையெண்.)

தொற்பழியுரகமிதித்தனை.
துகட்பழியுலகிறுடைத்தனை.

கற்பழியலகையடக்கினை.
கதிக்கதவகலவியக்கினை.

(எட்டடிச்சிற்றெண்.)

விண்டிறந்தனை. யெண்டிறந்தனை.
பானணிந்தனை. மீனணிந்தனை.
மதிபதத்தினை. கதிபதத்தினை.
யருள்வலத்தினை. பொருளிடத்தினை.

(ப - ரை.) உந்தையை - உன்தந்தையாகியகடவுளை—ஈன்றுநீ - நீபெற்று—ஒருவற்கு - அவ்வொருவனுக்கே—ஈங்கு - இவ்வுலகத்தில்—அரும்வந்தையோடு-அருமையாகிய பெருமையோடு—அன்னையு மகளுமாயினை - தாயும்புதல்வியுமாயினை.—கனி - பழத்தினை—அரும்பயனொடு - அருமையானபிரயோசனத்துடனே—கலந்த-கூடிய—பூஇணை - ஒருமலரைப்போல—தனி-ஒப்பற்ற—அருள் - கிருபையையுடைய—கன்னியுந் தாயுமாயினை - கந்யாஸ்த்ரீயு மீன்றாளுமாயினை.—தொல் - பழமையாகிய—பழி - பழியையாக்கிய—உரகம் - பாம்பை—மிதித்தனை-மிதித்தாய்.—துள்பழி - பாவப்பழியை—உலகில் - பூமியின்கண்—துடைத்தனை - ஒழித்தாய்.—கற்புஅழி - கற்பையழிக்கும்—அலகை - பிசாசத்தை—அடக்கினை - அடங்கச்செய்தாய்.—கதிக்கதவு - மோக்ஷத்தின்கபாடமானது—அகல - திறக்கப்பட—இயக்கினை - நடத்தினை.—விண்டு - மேகத்திலேறி—இறந்தனை - (மோக்ஷத்திற்குச்) சென்றாய்.—எண் - (மூன்றென்னும்பரத்துவத்தின்) இலக்கத்தை—திறந்தனை - வெளிப்படுத்தினை.—பானு - சூரியனை—அணிந்தனை-(உடையாக) உடுத்திக்கொண்டாய்.—மீன் - நக்ஷத்திரங்களை—அணிந்தனை - (முடியாகக்) கவித்துக்கொண்டாய்.—மதி-சந்திரனைமிதித்த—பதத்தினை - பாதத்தையுடையவளாயிருக்கின்றாய்.—கதி-மோக்ஷமாகிய—பதத்தினை - இடத்தை யுடையவளாயிருக்கின்றாய்.—அருள் - கொடுக்கும்—வலத்தினை - வல்லமையையுடையவளா யிருக்கின்றாய்.—பொருள் - தலைமையான—இடத்தினை - இடத்தையுடையவளா யிருக்கின்றாய்.

(பொ - ரை.) உன் தந்தையாகியகடவுளை நீபெற்றுஅவ்வொருவனுக்கே மிக்கபெருமைபொருந்திய தாயுமகளுமா யிருக்கின்றாய். பழத்துடன்கூடிய வோர்மலரைப்போலவொப்பில்லாதகன்னியுந்தாயுமாயிருக்கின்றாய். பழம்பழிக்குக்காரணமாகிய பாம்பின்தலையைமிதித்தாய். பூமியின்கண்ணுள்ளபழியையொழித்தாய். கற்பழிக்கும்பிசாசையடக்கினை. மோக்ஷவாசலைத்திறந்தனை. மேகத்திலேறி மோக்ஷத்திற்குச்சென்றாய். திரீத்வத்தை வெளிப்படுத்திக்காட்டினை. சூரியனை யுடையாகவணிந்தாய். நக்ஷத்திரங்களை முடியாகத்தரித்தாய். சந்திரனை மிதியடியாகக்கொண்டாய். மோக்ஷஸ்தலத்தை யுடையவளாயிருக்கின்றாய். (அடியார்விரும்பு மனைத்தையும்) கொடுக்கும் வல்லமையுடையவளா யிருக்கின்றாய். (சகலமோக்ஷவாசிகட்கும்) மேலாமிடத்தை யுடையவளாயிருக்கின்றாய்.

1. கனியரும்பயனொடு என்று தொடங்கிய இவ்வம்போசரங்க வுறுப்பின் பொருளிதுவேயென்பதைத் தேம்பாவணி மகனேர்ந்தபடலத்திற்கூறப்படும் "சென்னியாருடுமுடிவேய்ந்தநாயகி கன்னியாய்மகற்பெறு மாட்சிகாட்டுமே" என்னும் கூo - ம். பாட்டாற்காண்க.

(தனிச்சொல்லும் அகவற்சுரிதகமும்.)

எனவாங்கு,

தண்டிருக்காவலூர்தடம்வளர்ந்தொளிபெற
மண்டிருமலரடிவைத்தனையெங்கணும்
வினையிராப்[1]பரந்துவிளைந்தவவாவிரு
டனைபிறமறையொளிதருந்திருப்பகலோன்
வந்துயிர்விளக்கவருநாளிதுவென
நந்துயிருய்யநகைக்கதிர்பரப்பிக்
கொதித்தனைத்திருளினைக் கொய்தீங்
குதித்[2]தனைநீயோருதயமீனே.

(ப - ரை.) என - என்றனைவரும்புகழ—ஆங்கு - அவ்விடத்தில்—தண் - குளிர்ச்சிபொருந்திய — திருக்காவலூர் - திருக்காவலூரானது—தடம்வளர்ந்து - பெருமைமிகுந்து—ஒளிபெற - ஒளியை யடையும்படி—மண் - அலங்கரிக்கும்—திரு - சிறப்புப்பொருந்திய—மலர் - (தாமரை) மலரையொத்த—அடி - நின்பாதங்களை—வைத்தனை - வைத்தாய்,—எங்கணும் - எவ்விடத்தும்—வினையிரா - பாவமாகிய இராத்திரியோடும்—பரந்துவிளைந்த - (அதன்காரணமாகப்) பரவியுண்டான—அவா - ஆசையாகிய — இருள்தனை - அந்தகாரத்தையும் — இறு - வெட்டும் — அ - அந்த—மறையொளி - வேதமாகிய பிரகாசத்தை—தரும் - கொடுக்கும்—திரு - சிறப்புப்பொருந்திய—பகலோன் - (கடவுளாகிய) சூரியன்—வந்து - (இவ்வுலகமாகிய ஆகாசத்திலே) வந்து—உயிர் - உயிர்களை—விளக்க - விளங்கச்செய்ய—வருநாள் - (கர்ப்பமென்னுமுதயகிரியில்) வருங்காலம்—இதுவென - இதுவென்றுணரவும்—நந்து - அழியும்—உயிர் - உயிர்கள்—உய்ய - பிழைக்கவும்—நகை - இன்பமென்னும்—கதிர் - கிரணங்களை—பரப்பி - பரவச்செய்து—அனைத்து இருளினை (துன்பமென்னும்) இருளையெல்லாம்—கொதித்து - காய்ந்து—கொய்து - அறுத்து—ஈங்கு - இவ்வுலகத்தில்—உதித்து - தோன்றி—ஓர் - ஒரு—உதயமீன் - விடிய னக்ஷத்திரத்தை—அன்னநீ - ஒத்தாயாகியநீ எ-று. ஏகாரம்-இற்றசை.

(பொ - ரை.) என்றனைவரும் புகழக் குளிர்ந்ததிருக்காவலூரானது மேன்மைமிகுந்து விளங்கும்படி நின்பாதங்களை யங்கேவைத்தாய், பாவமென்னுமிராத்திரியோ டதற்குக்காரணமாகவெங்கும்பரவியுண்டான வாசையென்னுமிருளையு மறுத்தொழிக்குஞ் சத்தியவேதமாகிய வெயிலைவிரிக்குங் கடவுளாகியசூரியன் இவ்வுலகமாகிய வாகாயத்தில்வந் துயிர்களை விளக்கக் கர்ப்பமென்னுமுதயகிரியி லுதிக்குங்கால மிதுவென்றுணரவும் கேடுபொருந்துமுயிரெல்லாம் பிழைக்கவும் இன்பமென்னுங்கிரணங்களை

ப்பரப்பித் துன்பமென்னுமிருளேயெல்லாமறுத் திவ்வுலகத்திற்றோன்றி யோர்விடியனக்ஷத்திரத்தையொத்தவளாகியநீ எ-று.

இம் மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாமுழுவதற்கும் எழுவாய்முதலியன இவ்வகவற்சுரிதகத்திலுள்ளன; அவற்றுள் எழுவாய், நீ: பயனிலே, வைத்தனே. செயப்படுபொருள், அடி.

1. பரந்து, என்பது வினையெச்சத்திரியு.

2. அன்னேயென்னு முன்னிலேக்குறிப்புவினையாலணையும்பெய ரிங்கே தொகுத்தல்விகாரம்பெற்றுவந்தது. (க)

(நேரிசைவெண்பா.)

மீனேதலே[1]யரும்பவெண்மதியேதாளரும்பப்
பானேயுடலரும்பப்பாங்குருவைத் - தானே
ருடைத்தாடிருக்காவலூரகத்துவைத்தா
டுடைத்தாள்வினைத்துயரைத்தொக்கு.

(ப - ரை.) மீன் - நக்ஷத்திரங்கள் — தலே அரும்ப - தலேயில்விளங்கவும்—வெள் - வெண்மையாகிய—மதி - நிலாவானது—தாள் - திருவடியின்கீழ்—அரும்ப - ஒளிரவும்—பானு - சூரியன்—உடல் - திருமேனியின்கண் — அரும்ப - பிரகாசிக்கவும்—பாங்கு - அழகிய—உருவை - (தனது) திருவுருவத்தை—தான் - தான்—நேர் உடைத்து - ஒப்பிகந்து—ஆள் - ஆள்கின்ற—திருக்காவலூரகத்து - திருக்காவலூரினிடத்து—வைத்தாள் - வைத்த தேவதாய் — வினைத்துயரை - பாவத்துன்பத்தை—தொக்கு - தொகுத்து—துடைத்தாள் - நீக்கினுள் எ - று. ஏகாரங்கள் - ஈற்றசைகள்.

(பொ - ரை.) நக்ஷத்திரங்கள் தலேயிலே முடியாகவிளங்கவும் சந்திரனது திருவடிகளின்கிழ்ப் பாதகுறடாகத்தாங்கவும் சூரியனது திருமேனியிலே யுடையாகப்பொருந்தவும் தனது திருவுருவத்தைத் திருக்காவலூரினிடத்துவைத்த தேவமாதா, பாவத்துன்பத்தையெல்லாந் துடைத்தாள் எ-று.

1. இங்கே அரும்பவென்னுமொழிகள்மூன்றும் நிகழ்காலவினையெச்சங்கள்; இவ்வாறன்றி முதலடியிலுள்ளவைகளேமாத்திரம் வினையெச்சங்களாகவும் இரண்டாமடியிலுள்ளதை வினைத்தொகையாகவுஞ் சுட்டெழுத்தாகவுங்கொண்டு மீன்களேயு மதியையும் பானுவையு முருவுக்கு விசேடணமாக்கி நக்ஷத்திரங்கள் சிரசிலே முடியாகவிளங்கச் சந்திரன் றிருவடிகளிலே பாதகுறடாகத்தங்கச் சூரியனுடலிலே யுடையாகப்பொருந்து மத்திருவுருவத்தையெனப் பொருள்கொள்ளுதலுமொன்று. இவ்விருதிறத்தானும்பொருள்கூறுமிடத்து வைத்தாளென்னுமெழுவாய் வினையாலணையும்பெயர். துடைத்தாளென்னும்பயனிலேவினைமுற்று. துடைத்தாளென்பதை வினையாலணையும்பெயராக்கி யெழுவாயாகவும் வைத்தாளென்பதை வினைமுற்றாக்கிப் பயனிலேயாகவுங்கொளினுமிழுக்காது. வைத்தாளென்னுமெழுவாயும் துடைத்தாளென்னும்பயனிலேயும் வினையாலணையும்பெயர்களெனக்கொண்டு தன

து திருவுருவத்தைத் திருக்காவலூரினிடத்துவைத்தவள் பாவத்துன்பத்தைத் து டைத்த தேவமாதாவெனப்பொருள்கொளினும் பொருந்தும்.

1- இங்கே "அரும்ப வென்பது" "தென்னன்றமிழினுடன்பிறந்த சிறுகாலரும் பத் தீயரும்புந் - தேமாநிழற்கண்டுஞ்சு" என்பதிற்போல - மற்றொரு சொல்லின து பண்பையுரைத்தலாற் பண்பாகுபெயர். தொன்னூல் விளக்கம் - சகூ-ம்-சூத் திரத்திற் காண்க. சமாதியணியின்பாற்பட்டு வந்ததெனக்கொளினு மமையும். மற் றவிடத்துமிப்படியே. (உ)

(கட்டளைக்கலித்துறை)

தொக்கநலமெலாம்பெய்திடியாதருடோய்முகிலாப்
புக்க[1]நிழல்கொண்டிருள்புகவில்[2]பொழில்பொங்கலைநீ
ரொக்கவளையா[3]வரங்கொண்டுவரில[4]வோர்நிலையா
வக்கமகிழக்கண்டேன்[5]திருக்காவலூரங்கனையே.

(ப-ரை.) திருக்காவலூர் - திருக்காவலூரினிடத்து—அங்கனை - ஒரு நங்கை யை—தொக்கநலமெலாம் - சேர்ந்த நன்மைகளனைத்தையும்—இடியாதுபெய்து - இடித்தலைச் செய்யாமற்பெய்து— அருள் - கிருபை — தோய் - சேரப்பெற்ற— முகிலா - (ஒரு) மேகமாகவும்—நிழல் - நிழலை —புக்க கொண்டு - (தன்னிடத்தே வந்து) புகக்கொண்டு—இருள் - இருளை—புக - (தன்னிடத்துவந்து) புக—(கொ ண்டு) இல - கொண்டிலாத—பொழில் - (ஒரு) சோலையாகவும்— பொங்கு அலை - பொங்கிய சமுத்திரத்தினது—நீர்ஒக்க - ஜலத்தைப்போல — வளையா - இவ்வள வென்று வளையக்கூடாத—வரங்கொண்டு - வரத்தைக்கொண்டு — உவர் (கொண் டு) இல - உவர்ப்பைக்கொண்டில்லாத — ஓர் நிலையா - ஒரு நிலைக்கடலாகவும்— அக்கம் - (என்னுடைய) கண்கள்—மகிழ - சந்தோஷிக்கும்படி—கண்டேன் - (நா ன்) பார்த்தேன் எ-று.

(பொ-ரை.) இடியாமல் நன்மைகளனைத்தையும் பெய்து தயையை க்கொண்ட வோர் மேகமாகவும், நிழலைத் தன்னிடத்திற்கொண் டிருளைக் கொள்ளாத வொரு சோலையாகவும், கடல் நீரைப்போல வளவிடக்கூடா த வரத்தைக்கொண் டுவர்ப்பில்லாத வோர் நிலைக்கடலாகவும் ஒரு நங் கையைத் திருக்காவலூரி னிடத்தே நா னென்கண்களிக்கக் கண்டேனெ ன்றவாறு.

1. "நிழல்கொண்" டென்பதிலுள்ள - கொண்டு-என்பதை "இருள்புகவில்" என்பதிலுள்ள - இல்லென்பதன் முன்னும் 3. "வரங்கொண்" டென்பதிலுள்ள- கொண்டு - என்பதை "உவரில" என்பதிலுள்ள இலவென்பதன்முன்னுங் கூட்டி க்கொள்க.

2. "கல்வியேகற்புடைப் பெண்டிரப்பெண்டிர்க்குச் செல்வப்புதல்வனேயீர் ங்கவியா" என்பதிற்போலப் - பொழிலென்பதில் ஆகவென்னு மாட்டேற்றுச் சொல் தொக்கும் ஏனையவிடத்து விரிந்தும் வந்தமையால், இது தொகைவிரி யுருவகவணி.

4. ஓர்நிலை என்பது, அன்மொழித்தொகை.

5. "திருக்காவலூரங்கனை" என்பதற்குத் திருக்காவலூரி லெழுந்தருளிய நங்கையை யெனப் பொருள்கோடலுமொன்று. அதற்கிவ்வாறெல்லாம் பொருள்கொள்ளாமல் திருக்காவலூராகிய வவ்விடத்தில் அன்னையையெனப் பொருள் கொள்ளலாகாதோ? அங்கனை யென்பதினும் அன்னை யென்பது சிறந்ததன்றோ? வெனில் - அங்கனை யென்பதினால் இவள் பிசாசின் தலையை மிதிப்பவளாக வாதி காலத்திற் கடவுளா லுரைக்கப்பட்டவ ளென்பது தோன்றுதலானும் இது வேதக்கருத்தெனக் காட்டற் கிந்நூலாசிரிய ரிந்நூலிலேதானே தேவமாதாவை "அணங்கு" எ-ம் "பாவை" எ-ம் "காந்தை" எ-ம் "மாது" எ-ம் "நாரி" எ-ம் "சுந்தரி" எ-ம் "மடந்தை" எ-ம் "கோதை" எ-ம் ஆங்காங்குக் கூறியிருக்கின்றமையானும்- அஃது தவர்கருத்தன்றெனக்கொள்க. (ரு)

(பதின்மூன்றுசீரடியாசிரியச்சந்தவிருத்தம்.)

அங்கனைவருமருமறையறையயிர்வனவிளியுளமுயிருண [ங்தே
வையை[1]யியக்கினைபொய்யை[2]விலக்கினைமெய்யை[3]விளக்கினை யொளி[4]வே
இங்கனைவருமருமிடிமடிவிழிவெழுதுயரயர்வொழிகுப
வின்பமுயிர்த்தனைதுன்பமொழித்தனையிம்பர்களித்தனை யுயிரீடாய்ச்
[5]சங்கனையனநினகரமிகுவனவினமணியணிகுவரவர்
தாவருநோயறமேவருமானுறயாவருநேரிற வாழ்வாராற்
[6]பங்கனையனநினவிருதிருவடிசிரமடியனமணியிய
பாவிகளண்டினைகாவலிலொன்றினைமேவியுமுன்றனைக் காட்டாயோ.

(ப-ரை.) அனைவரும் - யாவர்க்கும்—அரும் - அருமையான — மறை - சத்தியவேதத்தால் — அறை - சொல்லப்படும் — அயிர் - (பேரின்பமாகிய) சருக்கரையை—வனம் - மிகுதியாகிய—இளி - இழிவை—உளம் - உடையேமாகியவெம்முடைய—உயிர் - உயிர்கள்—அங்கு - வானுலகத்தில் — உண - உண்ண—ஐயை-கடவுளை—இயக்கினை - (எம்மிடத்து) அனுப்பினவளே—பொய்யை - பொய்ம்மையை—விலக்கினை - நீக்கினவளே—மெய்யை - மெய்ம்மையை—விளக்கினை - விளங்கச்செய்தவளே—ஒளி - இவ்வொளியைச்செய்கின்ற— வேந்தே - சூரியனே— இங்கு - இவ்வுலகத்தில்—அனைவரும் - யாவர்க்கும் — அரும் - (ஒழித்தற்கு) அருமையான—மிடி - வறுமையும்—மடிவு - சாவும்—இழிவு - தாழ்வும்—எழு - (பலவகையாக) எழும் — துயர் - துன்பங்களும்—அயர்வு - தளர்ச்சியும் — ஒழிகுப-(எங்களை) நீங்க — இன்பம்உயிர்த்தனை - மகிழ்ச்சியை (யெமக்குத்) தந்தவளே—துன்பம்ஒழித்தனை - துன்பத்தைப் போக்கினவளே — இம்பர் - இவ்வுலகத்தில்—களித்தனை - பேரின்பமகிழ்ச்சியை யடைந்தவளே—நின - உன்னுடைய — சங்கு அனையன - சங்கையொத்த—கரம் - கையிலுள்ள —மிகு வனம் - மிக்கவழகினையுடைய—இனமணி - ஓரினமாயுள்ள முத்துச்செபமாலையை—உயிர்ஈடாய் -(தம்) உயிரைநேராக—அணிகுவர் - அணிபவர்கள்—அவர் - தம்முடைய—தாவு - பகையும்—அருநோய் - கொடும்பிணியும்—அற - நீங்கிப்போகவும்—மேவுஅரும் - பெ

றுதற்கரிய—மான்உற - உருவத்தைப்பெறவும்—யாவரும் - எவரும் — நேர்இற - (தமக்கு) நிகராகாமற்போகவும்—வாழ்வாரால் - வாழ்குவராதலால்—பங்கம்நை - குற்றம்நைந்த—அனம் - அன்னமாகிய—நின - உன்னுடைய—இருதிருவடி - இரண்டுதிருப்பாதங்களையும்—அடியனம் - (உன்)னடியாராகிய நாங்கள்—சிரம் - சிரசின்மேல்—அணியிய - தரித்துக்கொள்ள—பாவிகள் - பாவிகளாகிய வெங்களை—அண்டினை - நெருங்கினையாகி — காவலில் - திருக்காவலூரின்கண் — ஒன்றினை - தங்கினை.—மேவியும்- (இவ்விடத்தே) வந்தபின்னரும்—உன்றனை - உன்னை—காட்டாயோ - (எனக்குக்) காட்டமாட்டாயோ எ-று. உன்றனை என்பதில் தன் என்பது, அசை.

(பொ-ள்.) எவர்க்கு மருமையுள்ள சத்தியவேதத்திற் சொல்லும் பேரின்பமாகிய சர்க்கரையை மிக்கவிழிவுகொண்ட வெங்களுயிர்கள் வானுலகத்திலுண்ணும்படி கடவுளை யெம்மிடத்தி லனுப்பினவளே! பொய்யைவிலக்கிமெய்யை விளக்கற்கேதுவான பிரகாசத்தைத் தருஞ் சூரியனே! இவ்வுலகத்தி லெவராலு மொழிக்கக்கூடாத வறுமை சாவு இழிவு துன்பந் தளர்வு முதலியவை யெம்மை நீங்க மகிழ்ச்சியை யெமக்குத் தந்தவளே! துன்பங்களை நீங்கிப் பேரின்பமகிழ்ச்சியை யிவ்வுலகத்திற்கொண்டவளே! சங்கினையொத்த நின்கையிலுள்ள ஜபமணிமாலையைத் தம்முயிர்போற் கருதி யணிபவர் தம்பகைமையையுங் கொடும்பிணிகளையும் நீங்கவும் பெறுதற்கரிய வுருவம்பெறவுந் தமக்கொருவரு நிகரில்லாமலிருக்கவும் வாழ்வார்களாதலால் மாசில்லாத வன்னம்போன்ற வுன்னிரண்டு திருவடித் தாமரைகளையு முன்னடியார்களாகிய நாங்கள் தலைமேற்றரித்துக்கொள்ளப் பாவிகளாகிய வெங்களை நெருங்கித் திருக்காவலூரிடத்துத் தங்கினை. நீயிவ்விடத்தே வந்தபின்னரும் உன்னை யெனக்குக் காட்டமாட்டாயோ? வென்றவாறு.

இப்பாட்டில் 1. "இயக்கினை" 2. "விலக்கினை" 3. "விளக்கினை" யென்பவை முதலியவை, முன்னிலைவினையாலணையும்பெயர்கள்; இவற்றின் பொருள் எளிதின் விளங்கவேண்டி விளிப்பொருளைப்போல வுரையிற் கூறினுமெனவறிக.

4. வேந்தனென்பது விளிப்பொருளின்கண் வேந்தேயெனத் திரிக்கப்பட்டது.

5. சங்கென்னு முபமானத்திற்குபமேயங் கரமெனவும் இது பயனுவமை யென்னும்பாலதெனவுமறிக.

6. பங்கரை என்பதில் வந்த பொதுவெழுத்து நகரம் - "ஆராதனஞ்செய்து கண்டன்" "கண்டகனுவின் புறக்கண்டு" "புந்தினைவேத்திய முகந்தேத்தினர்" என்பவற்றில் யமகநோக்கித் திரிந்ததுபோலத் தலையாகெதுகைநோக்கித் தமிழிற்குச் சிறப்பெழுத்து னகரமாகத் திரிந்ததெனக்கொள்க. (௪)

(பதினான்குசீரடியாசிரியவிருத்தம்.)

தனைக்காட்டத்தன்றிறஞ்சீர்தயைஞான[1]மற்றருந்தன்றகுதிகாட்டத்
தகும்வழியாற்றகாச்செல்வோனுனைப்படைப்பக்கருதிப்பின்றரணியெங்
[2]முனைக்காட்டவிரவிமதியுடுவினங்கணவமணி[3]மற்றொளியின்சால்பு [கு
முரிமண[4]மூவகைமலர்ப்பூவொண்கனிதேனமுதினிமையுகுத்தயாவு
மினைக்காட்டப்பெய்தமுகில்வியன்கடனீரிவ்வழகுவேய்ந்தவெல்லாம்
விண்ணிடத்துமண்ணிடத்தும்விருப்பங்கொண்டுனையுள்ளிவிதித்தானன் [[5]றே
நினைக்காட்டவெழில்காட்டுமிவைகண்டுன்னடிதொழுநானிறையவாழ
நினைக்காட்டாயோமரியேதிருக்[6]காவலூர்நிலையேநிமலத்தாயே.

(ப-ரை.) மரியே - மரியாயே — திருக்காவலூர்நிலையே - திருக்காவலூரிடத்தே நிலையையுடையவளே—நிமலம்தாயே - பரிசுத்ததேவமாதாவே—தகா - (தனக்கு எவ்வுவமையுந்) தகாமல் — செல்வோன் - (யாவற்றையுங் கடந்து) செல்பவனாகிய கடவுள்—தனை காட்ட - தன்னை (யுலகத்திற்குக்) காட்டவும்—தன் - தன்னுடைய — திறம் - வல்லமையையும் — சீர் - சிறப்பினையும்—தயை - அருளினையும் — ஞானம் - ஆற்றலையும் — மற்று - மற்றுமான — தன் அரும் தகுதி - தன்னுடைய அரிய தகுதியையும் — காட்ட - காட்டவும் — தகும்வழியால் - தக்கமுறையோடு— உனைப்படைப்ப - உன்னைச்சிருட்டிக்க — கருதி - (முன்னே) நினைத்து—பின் - அதன்பின்னர் — உனே - உன்னுயர்ச்சியை — தரணியெங்கும் - பூமியினெவ்விடத்திலும்—காட்ட - காண்பிக்க—விருப்பங்கொண்டு - பிரியங்கொண்டு—உனே உள்ளி-உன்னைநினைந்து (உன்னிமித்தமாக)—இரவி - சூரியனும்—மதி- சந்திரனும் — உடுஇனங்கள் - நக்ஷத்திரக்கூட்டங்களும் — நவமணி - நவரத்நங்களும்—மற்று ஒளியின்சால்பும் - ஒளியின் தன்மைபொருந்திய மற்றைப்பொருள்களும்—உரிமணம் - தக்கவாசனையையுடைய — மூவகைமலர் பூ - மூன்றுவகைப்பட்டமலர்களாகக் கூறப்பட்ட(பல)புட்பங்களும்—ஒண்கனிதேன்அமுது-நன்மைபொருந்திய கனிகள் தேன் அமிர்தமுதலிய — இனிமைஉகுத்தயாவும் - இனிமையைத் தந்தயாவும்—மினைக்காட்டு - மின்னலைக்காட்டுகின்ற — அப்புஎய்து - நீரையடையும்—அம் முகில்- அழகியமேகமும்—வியன்கடல்நீர் - கடலென்னும்விரிந்தநீருமாகிய—அழகுவேய்ந்த - அழகுபொருந்திய—இவ்எல்லாம் - இவைகளெல்லாவற்றையும்—விண்ணிடத்தும் - வானத்தினிடத்தும்—மண்ணிடத்தும் - பூமியிடத்தும்—அன்று - ஆதிகாலத்து—விதித்தான் - படைத்தான் — நினைக்காட்ட - உன்னைக்காட்ட—எழில்காட்டும் - (உன்) வண்ணத்தைக்காட்டுகின்ற — இவைகண்டு - இவற்றைக்கண்டு—உன் அடிதொழு - உன்பாதங்களைத்தொழுகின்ற — நான் - யான்—நிறையவாழ - (நன்மையால்) நிரம்பவும் வாழ்வடையவும்—ஓ நினைக்காட்டாயோ - ஓ உன்னைக்காட்டாயோ—எ-று.

(பொ-ரை.) மரியாயே! திருக்காவலூரில் நிலையாயுள்ளவளே! பரிசுத்ததேவமாதாவே! உவமையெல்லாங் கடந்த சர்வேஸ்வரன் தன்னையும் தன்வல்லமை சிறப்புத் தயை ஞானமுதலான தன்னரிய தகுதி

யையு முலகத்திற்குக் காட்டத் தகுமுறையோடுன்னைப் படைக்க முன்னே நினைத்து அதன்பின் உன் தகுதியைப் பூமியினெவ்விடத்திலுங் காட்டப் பிரியத்துட னுன்னை நினைந்து உன்னிமித்தமாகச் சூரியனுஞ் சந்திரனு நக்ஷத்திரங்களும் நவரத்நங்களும் ஒளிபொருந்திய மற்றைப் பொருள்களும் நல்ல வாசனைபொருந்திய மூவகை மலர்களும் கனி தேன் அமிர்த முதலிய வினியபொருள்களும் மின்னுவதும் நீரைப்பெறுவதுமான வழகிய மேகமுங் கடலுமாகிய விவைகளெல்லாவற்றையும் வானிலும் பூமியிலும் அன்று படைத்துவைத்தார். உன்னைக்காட்ட வுன் வண்ணத்தைக் காட்டுகின்ற விவற்றைக்கண் டுன்னுடைய பாதங்களைத் தொழுகின்ற நான் நன்மையால் நிறையவும் வாழவும் அந்தோ வுன்னைக் காட்டமாட்டாயோ ? எ-று.

1. 3. மற்றென்பவையிரண்டும், பிறிது என்னும் பொருளில் வந்தன.

2. உன்னையென்பது, உன்னுயர்ச்சியை யென்னும் பொருள்படுதலால் ஆகுபெயர்.

4. "மெல்லிய கொடிப்பூக்கோட்டில் விளங்குபூ நீர்ப்பூவேறு - புல்லியபுதற் பூவென்னப் பொருந்துநால் வகையிற்பூவும்" என்று சொல்லியபடி - கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூவெனப் பூவின்வகை நான்காயினும் "வேறு புல்லிய புதற்பூ" வென்றதனுற் புதற்பூ சிறப்பினதன்றென் றதனையொழித்து வீரமாமுனிவர் மூவகை மலர்ப்பூவென்முர். "மூவகைமலரும்பூத்துவண்டுளேமுழங்க" என முற்றும்மையுடன் பிறருங்கூறியது காண்க.

5. ஓகாரம் கழிவுப்பொருளில்வந்தது. அசைநிலையெனக் கொளினுமமையும்.

6. "காவலூர்நிலை" என்பது, அன்மொழித்தொகை. (ரு)

(கட்டளைக்கலித்துறை.)

தாயுனைக்கொண்டானனைத்தும்படைத்தவோர்தந்தையன்னுன்
[1]காயெனப்பூவெனத்தந்தருமாட்சியைக்காட்டுவபோற்
சேயுனைக்காட்டலினிவ்வளவுன்புகழ்செப்புவரா
[2]ரோயிலகாவலிறைவிபொறுயென்னுரைவெளிறே.

(ப-ரை.) ஓய்இல - (செல்வம்) ஒழிதலில்லாத—காவல் - திருக்காவலூரிலெழுந்தருளிய—இறைவி - இராக்கினியே—அனைத்தும் - யாவற்றையும்—படைத்த - சிருட்டித்த—ஓர்தந்தையன்னுன் - ஒருதந்தையையொத்த கடவுள்—தாய் - (தனக்குத்)தாயாக—உனை கொண்டான் - உன்னைத் (தெரிந்து) கொண்டான்—சேய் - (அப்படிப்பட்டவுன்) மகன்—காய்எனபூஎன - காய்களுமலர்களும்—தம்தரு - தம்முடைய மரத்தினது—மாட்சியை - பெருமையை—காட்டுவபோல் - காண்பிப்பனபோல—உனை - உன்பெருமையை—காட்டலின் - காட்டுதலால் — இவ்வளம் - இம்மாட்சியையுடைய—உன்புகழ் - நினதுபுகழை—செப்புவர் - எடுத்துச்சொல்லவல்லவர்—ஆர் - எவர்—என் - (ஆசையாற் சொல்லத்துணிந்த) என்னுடைய—

*வெளிறு - அறியாமையைக் காட்டும்—உரை - சொற்களை — பொறுய் - பொறுப்பாய்—எ-று. ஏகாரம், கட்டளைக்கலித்துறைக்குரிய ஈற்றசை.*

(பொ-ரை.) அழிவில்லாத திருக்காவலூரி லெழுந்தருளிய இராக்கினியே! சர்வத்தையும் படைத்த தந்தையாகிய கடவுள் தமக்குத் தாயாக வுன்னைத் தெரிந்துகொண்டார்; அப்படிப்பட்ட வுன்பிள்ளையானவர் * காய்களு மலர்களுந் தம்மை யீன்ற மரத்தினது பெருமையைக் காட்டுதலைப்போல வுன்பெருமையைக் காட்டுதலா லிம்மாட்சியைக் கொண்டவுனது புகழையெல்லா மெடுத்துச் சொல்ல வல்லவருண்டோ? ஆசையாற் சொல்லத்துணிந்த வென் னறியாமையைக் காட்டுஞ் சொற்களைப் பொறுப்பாயாக எ-று.

1. "காயெனப் பூவென வென்பதன்கணுள்ள" எனஇரண்டும், எண்ணுப்பொருளில் வந்தன.

2. ஓய் என்னுஞ்சொல் முதனிலைத் தொழிற்பெயர். (சு)

புயவகுப்பு.

(ஆசிரியவண்ணவிருத்தம்.)

[1]வெளிமதிகதிருடுக்குல மணிநிதியொளிமுகத்தவை மலர்கனியமுதுமற்றைய [2]பலவுலகுளவனைத்தையு மீறிலாதெங்கணு மருளிப்பயந்தன-வெளியமைசுரர்முதற்பல வினையமைநரரினத்தொடு விரிபலவுலகனைத்தினு முளபலவுயிரனைத்தையு நாளுமாறின்றிய ரிதுயிர்த்தமைந்தன-வினைவிளைபுவி[3]பகைத்தன [4]முழுதுளதுகடுடைத்திட விரிமுகிலிடியிடித்தரிதுயர்மலைமுடியொளித்திட மாரிமாறுன்றியிவ்வுலகிற் [5]பொழிந்தன - [6]விரவியவிரகமுற்றிய வினையொடுவெகுளிபற்றிய வழலெழு முகிலியற்றிய சுடுமெரியுலகழற்றிய மாரியாலைம்புர மெரியச்சினந்தன,

தெளிமறையவர்செலப்பிரி கடலிருமதிலெனக்கடி திருபுடையெழநிறுத்தின நிலையெழுதிரைகவிழ்த்தெதிர் நேரலார்நைந்துயி ரொழியக்கடிந்தன - திகிரியதுயர்குவட்டிழி திரைநிலைபுறநிறுத்துபு மலைமிசைமலையடுக்கென வலைமிசையலையடுக்குபு யோருதானுந்திரு டைதடுத்துயர்ந்தன-செருமிகுசெறுநர்மொய்த்துறை முகிறவழரண்மதிற்சுவர் பொடியெழுவடிபெயர்த்தொரு படையிலநகர்தகர்த்திரு ஞாலமேயஞ்சமி குகதத்தெதிர்ந்தன - சிதவழிசிதைசினக்கர னரசுடனுயிரறப்பல கரிபரியலதுமுப்படி யுறழவுமபயர்முற்றறு நூறுநூறன்றெழி யவதைத்தெறிந்தன,

* அர்ச். மத்தேயு என்பவர் எழுதின சுவிசேஷம் எ-வது அதி. கஎ-ம் வசனத்திலும் கஉ-ம் அதி. ௩௩-ம் வசனத்திலுங் காண்க.

[7]ஒளியெழமுருணடத்தின நிலையுறவுருண்டிறுத்தின பிறகுறவுருளிழுத்தன பகலிடையுருளொளித்தன மாயிரா[8]வென்றுல கிருளக்கரந்தன– உயரியவரைமுகட்டிடை யழலெழவிடிமுழக்குட னதிர்வனவுலகுவப்புற விருசிலைமிசை[9]திருத்திய வேதநூலன்புட னெழுதிப்பரந்தன– உலகுயிர் கனியவொத்துரு வுடலுறியடைசயக்கொடி யெனவொருசிலுவைநட்டிட வுயர்மலைமுகடுபெற்றுளிவானுளோ[10]ரஞ்சிவெ ருவுறச்சிவந்தன– வொருவிலபடையெனப்பொறை யொருபொழுதெமதுயிர்ப்பகை யெனமுடிவிலவுடற்றிய வெறியினமுழுதடக்கிய வாகையேகொண்டிட ருலகிற்பரிந்தன.

களியறவுட்லுணக்கிய பிணியறமிடிபெருக்கிய துயரறவினையியற்றிய குறையறவரிதியக்கிய வீரவாயுண்டபு துமையிற்சிறந்தன – கடிதெழுவளியடக்கின பகமலைபுவிநடுக்கின பகலிடைவெளியிருட்டின கனல்குளிரிடநிலைத்தன நீருமாயைந்தையு மரிதிற்புரந்தன – கதிபெறுமறை[11]யுரத்தொடு கொடையருடவலத்தொடு பொறைதுணிவறவயத்தொடு பொருணயநலமனைத்தையு ஞாலமீதெங்கணு மலியப்பயந்தன – கசடிடர்முழுதொழிப்பன வொழிவிலகளியுயிர்ப்பன நரககல்கதவடைப்பன கடையிலகதியிலுய்ப்பன காவலூரங்களை மகனற்புயங்களே.

(ப–ரை.) வெளி - வெண்மையாகிய—மதி - சந்திரனும்—கதிர் - சூரியனும்—உடுக்குலம் - நக்ஷத்திரக்கூட்டங்களும் — மணி - ரத்நங்களும் — நிதி - திரவியமும்—ஒளிமுகத்தவை - பிரகாசமுகத்தோடுங்கூடிய மற்றைப்பொருள்களும் — மலர் - புட்பங்களும்—கனி - பழங்களும்—அமுது - அமிர்தமும்—மற்றைய - மற்றவைகளுமான—பலஉலகுஉள - பலவுலகங்களினுமுள்ள —அனைத்தையும் - (உயிரில்லாதபொருள்களெல்லாவற்றையும்—ஈறுஇலாது - முடிவில்லாமல்—எங்கணும்- (அவ்வவற்றிற்குரிய) இடங்கடோறும் — அருளி பயந்தன - அருளிச்செய்தன.—வெளி - வானுலகில்—அமை - தங்கிய—சுரர்முதல் - வானவர்முதல்—விரி - பரந்த—பல - பலவகைப்பட்ட—உலகு அனைத்தினும் உள - உலகங்களிலெல்லாமுள்ள—பலவினை - பலதொழில்கள்—அமை - பொருந்திய—நரர் இனத்தொடு - மனிதரினத்துடனே—பல - பலவகைப்பட்ட—உயிர் அனைத்தையும்—எல்லா உயிர்களையும்—நாளும் - எப்பொழுதும்—மாறு இன்றி - மாறுதலில்லாமல்—அரிது - அருமையாக—உயிர்த்து - சிருட்டித்து—அமைந்தன - பொருந்தின.—வினை - தீவினைகள்—விளை - விளைந்த — புவி - பூமியை—பகைத்தன - விரோதித்தனவாகி— முழுதுஉள - அதனெவ்விடத்தும் பரந்திருந்த—துகள் - (பாவ) அழுக்கை—துடைத்திட - கழுவித்துடைக்க—விரி - பரந்த—முகில் - மேகங்களானவை—இடி இடித்து - இடியைத்தந்தொலித்து—அரிது உயர் - அரியதாக உயர்ந்த—மலைமுடி - மலையின்சிகரமும்— ஒளித்திட - (நீரினுள்ளே) மறைந்துபோக—மாறுஒன்றி - விரோதங்கொண்டு—மாரி - மழையை—இவ்வுலகில் - இவ்வுலகத்தில் — பொழிந்தன - சொரியச்செய்தன.—விரகம் - காமநோயானது — முற்றிய - முதிர்ந்ததாலுண்

டான—அ - அந்த — வினையொடு - (கொடிய) செய்கையோடு — வெகுளி - சின மும்—விரவி - கலக்கவே—பற்றிய - மூண்ட—அழல் - நெருப்பு—எழு - எழுதற் குரிய—முகில் - மேகங்களால்—இயற்றிய - உண்டாக்கப்பட்ட — சுடும் எரி உல கு - தகிக்கும் நெருப்பையுடைய (நரக) உலகத்தைப்போல—அழற்றிய - சுட்ட— மாரியால் - (நெருப்பு) மழையினால்—ஐம்புரம் - ஐந்துநகரங்கள்—எரிய - எரிந்து போக—சினந்தன - கோபங்கொண்டன.—தெளி - மனந்தெளிந்த — மறையவர்- (சத்திய) வேதத்தைக் கொண்ட யூதர்கள்—செல - நடந்துபோக—பிரி - (தம்மே வலாற்)பிரிந்த—கடல் - சமுத்திரமானது—கடிது - சீக்கிரத்தில்—இருமதிலென- இரண்டுமதில்களைப்போல — இருபுடை - இரண்டுபக்கத்தினும் — எழநிறுத்தின - எழும்பிநிற்கச்செய்தன.—எதிர் - (மேற்சொல்லிய யூதரை) எதிர்த்த—நேரலார்- பகைவர்கள்—நைந்து - வருந்தி—உயிர்ஒழிய - உயிர் நீங்க—நிலையெழு - நிலையா யெழுந்துநின்ற—திரை-(அந்த)அலைநீரை—கவிழ்த்து-மூடிக்கொள்ளும்படிசெய்து —கடிந்தன-அழித்தன.—திகிரியது - (லிபேனனென்னும்) மலையினது — உயர்கு வடு - உயர்ந்தசிகரத்தினின்று—இழி - இழிந்துவரும்—திரை - அலைநீர — நிலை யுற - நிற்றல் பொருந்த—நிறுத்துபு - நிறுத்தி— மலைமிசை - மலையின்மீதுள்ள— மலையடுக்கு என - மலையினது அடுக்கைப்போல—அலைமிசை அலை - அலைகளின்மே ல் அலைகளை—அடுக்குபு - அடுக்கி— யோருதான்உந்தி - யோருதானென்னும் யா ற்றினது—நடைதடுத்து - ஓட்டத்தைத்தடுத்து — உயர்ந்தன - உயர்ச்சிபெற்றன. —செருமிகு - போர்த்தொழில்மிக்க — செறுநர் - பகைவர்—மொய்த்து - நெருங் கி—உறை - தங்கிய—அரண் - கோட்டையினுடைய—முகில் - மேகங்களானவை —தவழ் - ஊரப்பெற்ற—மதில்-மதிலாகிய—சுவர் - சுவர்கள் — பொடி - புழுதி யாக—எழ - எழும்படி—ஒருபடை - ஒருஆயுதமும்— இல - இல்லாமல் — அடி - அடியோடு—பெயர்த்து - (அவைகளைத்) தகர்த்து—ஒரு - ஒப்பற்ற—நகர் - (எரிக் கோப்பட்டணத்தை—தகர்த்து - உடைத்து—இரு-பெரிய—ஞாலமே- பூமிமுழுவ துமே—அஞ்ச - பயங்கொள்ள—மிகுகதத்து - மிக்ககோபத்துடன்—எதிர்ந்தன - (அப்பகைவரை) எதிர்த்தன.—சிதம்வழி - ஞானமுறைமை— சிதை - அழிந்த— சினக்கரன்-சினக்கரனென்பவனுடைய—அரசுஉடன் - அரசாட்சியுடனே—உயிர்- உயிரும்—அற - நீங்கும்படி — பல - அநேகமான — கரிபரிஅலதும் - (அவனு டைய) யானைகுதிரைகளை யல்லாமலும் — முப்படிஉறழவும் - மூன்றனெண்ணுற் பெருக்கவும் உம்மையாற்றமுவிய சிற்றெண்ணுற் பெருக்கவும்—முற்று - முடிந் த—அறுநூறுநூறு - அறுபதினாயிரமாகிய லக்ஷத் தெண்பத்தையாயிரம் —அப யர் - படைவீரரையும்—அன்று - யூதவரசன்மேல் அவன் படையெடுத்தபோது— ஒழிய - அழிய—வதைத்து எறிந்தன - வதைத்துப் போக்கின.—ஒளி - வெயிலா னது — எழும் - (தன்னிலிருந்து) எழப்பெற்ற — உருள் - சக்கரமாகியசூரியனை —நடத்தின - (ஆகாயத்திலே) திரியச்செய்தன.— உருள் - சூரியனை—நிலையுற - ஓரிடத்திலிருந்து விளங்கும்படி—நிறுத்தின - நிறுத்திவைத்தன. — உருள் - சூரி யனை—பிறகுஉற - பின்னே வரும்படி — இழுத்தன - இழுத்துவிட்டன.— பகலி டை - பகற்காலத்தில்—ஒளி தனம் - பிரகாசத்தினது தன்மை—மாய் - மாய்ந்த —இராவென்று - இராத்திரிபோல—உலகு - உலகும்—இருள - இருண்டுபோக—

உருள் - சூரியனை — கரந்தன - மறைத்தன.—உயரிய - உயர்ந்த —வரை - (சீன யி) மலையினது—முகடுஇடை - உச்சியின்கண்—இடிமுழக்குடன் - இடிமுழக்கத் தோடு—அழல் - அக்கினியில்—எழ - தாமெழுந்துவரவே —அதிர் - நடுங்கிய— வனம் - அழகிய—உலகு - உயர்ந்தோர் — உவப்பு உற - சந்தோஷப்படும்படி— இருசிலைமிசை - இரண்டு கல்லின்மேல்—திருத்திய - (எம்மைத்)திருத்தின — வே தநூல் - சத்தியவேதநூலை—அன்புடன் - பக்ஷத்துடனே — எழுதி - வரைந்து— பரந்தன - பரவின.—உலகு - பூமியிலுள்ள—உயிர் - (மக்க)ளுயிர்கள் —கனிய- (ஞானத்திலே) முதிர — ஒத்து - திருவுளமிசைந்து—உரு - அவர்களது உருவமா கிய—உடல் - மனிதவுடம்பை—உறி - பொருந்தி—அடை - (தாம்) பெற்ற — சய ம் கொடி என - வெற்றிக்கொடியாக — ஒரு - ஒப்பில்லாத —சிலுவை - சிலுவை யை—உயர்மலைமுகடு - உயர்ந்த (கபால) மலையினுச்சியில்—நட்டிட - நட — பற் றுளி - தாங்குமிடத்து—வான் - வானுலகத்தில் — உள்ளோர் - உள்ள சம்மனசு கள்—அஞ்சிவெருவுஉற - அஞ்சிப்பயங்கொள்ள—சிவந்தன- சிவப்படைந்தன.— எமது உயிர் - எங்களுயிர்க்கு—பகை என - பகையினவென்று சொல்ல—முடிவு இல - முடிவில்லாமல்—உடற்றிய - வருத்திய — வெறியினம் முழுது - பேயினங் களையெல்லாம்—அடக்கிய - அடக்க—ஒருவுஇல - நீங்குதலில்லாத — படை என- ஆயுதங்களாக — பொறை - பொறுமை — ஒருபொழுது - உபவாசமுதலாகிய— வாகைகொண்டு - தவவொழுக்கத்தைக்கொண்டு — உலகில் - இப்பூமியின்கண்— இடர் - (அப்பேய்களாலெமக்)குள்ளதுன்பங்களை—பரிந்தன- அறுத்துநீக்கின.— களி- களிப்பு—அற - கெடும்படி— உடல் - சரீரத்தை—உணக்கிய - வாட்டிய — பிணி - நோய்கள்—அற -நீங்கவும்—மிடி - தரித்திரமானது—பெருக்கிய-பெருகச் செய்த—துயர் - துன்பங்கள்—அற - ஒழியவும்— வினை - தீவினைகளால்—இயற் றிய - உண்டாக்கப்பட்ட—குறை - குறைகள்—அற - தீரவும்— அரிது - அருமை யாக—இயக்கிய - நடத்திய—ஈரம் - கிருபையினுலுண்டான—ஆயுண்ட - எவரா லும் தெளியப்பட்ட—புதுமையின் - அற்புதங்களால்—சிறந்தன-சிறப்புப்பொருந் தின—கடிது - வேகமாக—எழு - எழுந்த—வளி - காற்றை—அடக்கின - அடங்க ச்செய்தன—மலை - மலைகள்—பக - பிளக்கும்படி—புவி - பூமியை — நடுக்கின - நடுங்கச்செய்தன—பகலிடை - பகற்காலத்தில்— வெளி - ஆகாயத்தை—இருட்டி ன - இருளச்செய்தன —கனல் - நெருப்பானது—குளிரிட - குளிர—நிலைத்தன - அதில்நின்றன - நீரும் ஆய்—(முன்சொல்லப்பட்ட) ஜலத்தோடுங்கூடி ஆராயப் பட்ட — ஐந்தையும் - பஞ்சபூதங்களையும்—அரிதில் - அருமையாக—புரந்தன - அவற்றினிலை பிறழாமற்காத்தன.—கதி - மோக்ஷத்தை—பெறு-(நாம்)பெறுதற்கே துவாகிய—மறையுரத்தொடு-சத்தியவேத ஞானத்தோடு—கொடைஅருள்-ஈகைகா ருண்யங்களையும்—தவநலத்தொடு - தவவின்பத்தோடு— பொறைதுணிவு - பொறு மைதெளிவுகளையும்—அறவயத்தொடு-அறவலியோடு—பொருள் நயம்-வாய்மை நீ திகளையும்—நலம் அனைத்தையும்-மற்றெல்லா நன்மைகளையும்—ஞாலமீது-பூமியின் மேல்—எங்கணும் - எங்கும்—மலிய - நிறைய—பயந்தன - செய்தன.—கசடுஇட ர்முழுது - குற்றங்கள் துன்பங்கள் முழுவதையும் — ஒழிப்பன - நீக்குவன.— ஒழிவுஇல - முடிவில்லாத—களி - இன்பத்தை—உயிர்ப்பன - தருவன — நரகு -

நரகத்தினது — அகல் - அகன்ற — கதவு - கபாடத்தை—அடைப்பன - அடைத்துவிடுவன — கடையில - முடிவில்லாத—கதியில் - மோக்ஷத்தில்—உய்ப்பன - செலுத்துவன —காவலூர் - திருக்காவலூரில் வீற்றிருக்கின்ற—அங்கனை - நங்கையினுடைய—மகன் - புதல்வனுடைய—நல் - நலல—புயங்கள் - தோள்களென்றவாறு. ஏகாரங்கள் ஈற்றசைகள்.

(பொ-ள.) *சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்கள் பொன் முதலான வொளியுள்ள பொருள்களும் மலர்களுங் கனிகளும் அமுதும் மற்றவைகளுமாய்ப் பலவுலகங்களிலுமுள்ள வுயிரில்லாப் பொருள்களனைத்தையுங் கெடாமல் அங்கங்கே யருளிச்செய்தன; வானுலகமுதலெல்லாவுலகங்களிலு முள்ள சம்மனசர் மனிதராதி யெல்லா வுயிர்களையுமெப்போது மாறாம லருமையாகச் சிருட்டித்தன; †பாவம்விளைந்த பூமியைப்பகைத்து அதனெவ்விடத்தும் பரந்த பாவவழுக்கைக் கழுவித்துடைக்க மேகங்களானவை பகைகொண் டிடியைத்தந்து முழங்கிமிகவு முயர்ந்த மலையின் சிகரமும் நீரில் மறைந்துபோகும்படி நாற்பது நாளிரவும் பகலு மிடைவிடாமற் பூமியில் மழை பெய்யச் செய்தன; ‡காமநோய் முற்றியதாலுண்டான கொடியசெய்கையுங் கோபமுஞ் சோதோங் கொமோரா முதலிய ஐந்து நகரங்களிற் கலந்தபோது மேகஞ் சொரிந்த நெருப்பு மழையால் அவ்வைந்து நகரங்களு மெரிந்துபோகச் சினங்கொண்டன; § சத்தியவேதத்தைத் தெளிந்த யூதர்கள் நடந்துபோக வழிவிடுவதற்குச் சமுத்திரம் பிரிந்து இருபக்கமு மிரண்டு மதில்களைப்போல வெழும்பி நிற்கச்செய்தன; ¶ அந்த யூதரைப்பகைத் தவ்வழியாற் பின்தொடர்ந்த எசித்துத் தேசத் தரசனு மவனுடைய சேனையும் வருந்திச்சாக முன் யூதர்க்கு வழிவிட்டு நின்றவவ்வலைகளைக் கவிழ்த்தழித்தன; **லிபேனனென்னு மலையினின் றிழிந்துவரும் அலைநீரைநிறுத்தி மலைகளின்மேலுள்ள மலையடுக்கைப்போல அலைகளின்மே லலைக

---

* மோசேசு என்பவர் எழுதின முதல் ஆகமம் முதலாம் இரண்டாம் மூன்றாம் அதிகாரங்களிற் காண்க.

† மோசேசு என்பவர் எழுதின முதல் ஆகமம் - ஏழாம் அதிகாரம் - கஉ-ம்-வசனமுதல் - உ௩-ம்-வசனம் ஈறாகக் காண்க.

‡ மோசேசு ௸ ஆகமம் - க௯-ம் - அதி. உ௪ - உ௫-ம் வசனம்.

§ மோசேசு இரண்டாம் ஆகமம்-க௪-ம். அதி. உக, உஉ, வசனம்.

¶ மோசேசு - உ-ம்-ஆகமம் - க௪ - அதி. உ௭-ம்-உ௮-ம். வசனம்.

** சோசுவர் ஆகமம்-௩-ம்-அதி. க௫-க௬-க௭-ம்-வசனம்.

ளையடுக்கி யோர்தானென்னு மாற்றினடையைத் தடுத்துயர்ந்தன ; *போ ரையே தொழிலாகக்கொண்ட பகைவர் தங்கியிருந்த கோட்டையின் வா னளாவு மதிற்சுவர்களைப் புழுதியா யெழும்படி யாதோ ராயுதமுமின்றி யடியோடு பெயர்த்து எரிக்கோவென்னு நகரத்தைத் தகர்த்துப் பூமிமு ழுவது மஞ்சும்படி யப்பகைவரை மிக்ககோபத்தோ டெதிர்ந்தன ; †சின க்கரனென்னுமோ ரஞ்ஞான ராஜன் யூதவரசன்மேற் படையெடுத்துப் போனகாலத்தில் அவனரசு முயிருமொழியும்படி யநேக யானைகுதிரை களு மிலக்ஷத்தெண்பத் தையாயிரம் படைவீரர்களுமான வவன் சேனை முழுவதையும் வதைத்தெறிந்தன ; ‡ வெயிலைச்செய்யு முருளாகிய சூரி யனை யெவர்க்கு நன்மையாக வாசாயத்திலே திரியச்செய்தன; § சோ சுவனுக்காக வோரிடத்திலே நிறுத்தின ; ¶எசேக்கியாவென்னு மரச னுக்காகப் பின்னே யிழுத்துவிட்டன ; **இசறயேல் சனங்களையடிமை த்தனத்தினின்று மீட்டற்காகப் பகலிலே யிராவிருள் மூடும்படி மறை த்தன ;†† உயர்ந்த சீனாயிமலையினுச்சியி லிடிமுழக்கத்தோ டக்கினியிலி றங்கியபோது பயந்து நடுங்கிய விசறயேல் ஜனங்கள் மகிழும்படி ‡‡சத் தியவேத நூலை யன்புடனே யிரண்டு கற்பலகையிலெழுதிப் பரந்தன ; §§ பூமியிலுள்ள மனிதர் ஞானத்திலே முதிரத் திருவுளமாகி யவருரு வமாகிய மானிடதேகத்தைக்கொண் டொப்பில்லாத சிலுவையைத் தா ம்பெற்ற வெற்றிக்கொடியாக வுயர்ந்த கபால மலையினுச்சியில் நாட்டச் சுமந்தகாலத்து வானவரஞ்சி நடுங்கும்படியாய்ச் சிவந்தன ; ¶¶ எங்க

---

* சோசுவர் ஆகமம் கூ-ம்-அதிகாரம். உ0-உசு-ம்-வசனம்.

† இராஜாக்களின் - இரண்டாம் ஆகமம்-கக-ம்-அதி. ௩௫-௩௬- ௩எ-ம்-வச னத்திலும், நாளாகமம் இரண்டாம் புத்தகம். ௩உ-ம் - அதி. கூ-ம். வசனமுதல் உக-ம்-வசனமீறான வசனங்களிலும், ஏசேயாவின் தீர்க்கதரிசனம், ௩௬-௩எ-ம் அதிகாரங்களிலுங் காண்க.

‡ மோசேசு-ஆ ஆகமம். ஆ அதி. கரு-ம்-வசனம்.

§ சோசுவர் ஆகமம். ௧0-ம்-அதி. கஉ-௩௩-ம்-வசனம்.

¶ இராஜாக்களின் இரண்டாம் ஆகமம் - உ0-ம்-அதி-கக-ம்-வசனத்திலும்- ஏசாயா தீர்க்கதரிசனம்-௩அ-ம்-அதி. அ-ம்-வசனத்திலுங் காண்க.

** மோசேசு இரண்டாம் ஆகமம் க0-ம் - அதி. உஉ-ம்-வசனம்.

†† மோசேசு இரண்டாம் ஆகமம் கக - ம்-அதி. கஅ-ம்-வசனம்.

‡‡ மோசேசு இரண்டாம் ஆகமம்-௩௪-ம்-அதி. கஅ-ம் - வசனம்.

§§ அர்ச். அருளப்பர் சுவிசேஷம் கூ-ம் அதி. கஎ- ம்-வசனம்.

¶¶ அர்ச். மத்தேயு சுவிசேஷம் கஎ - ம்-அதி. உ0-ம்-வசனம்.

ளுயிர்ப்பகையாகி யெங்களை யெப்போதும் வருத்திய பேயினத்தைய டக்க நீங்காத வாயுதங்களாகப் பொறுமை யுபவாச முதலாகிய தவ வொழுக்கத்தைக் கொண் டிப்பூமியின்கண் அப்பேய்களா லெமக்குள் ளதுன்பங்களை யறுத்து நீக்கின ; [a] சரீரத்தை வாட்டிய நோய்கள் நீங்கவும் [b] தரித்திரம்பெருக்கிய துன்பங்கள் ஒழியவும் [c] தீவினைகளால் வருங் குறைவு தீரவும் அருமைதோன்றக் கருணையாற்செய்த வற்புதங்க ளாற் சிறந்தன ; [d] கடலில் வேகத்தோடெழுந்த காற்றையடக்கின; [e]சிலு வையி லுயிர்விட்டகாலத்தில் மலைகள் பிளக்கும்படி பூமியை நடுக்கின ; [f]பகற்காலத்தி லாகாயமிருளும்படி செய்தன ; [g] நபூக்கன் மூட்டிய சூ ளையினெருப்புச் சாத்திராகு மேஷாகு அபேத்நேகோவென்னு மூன்று யூதர்க்குக் குளிர்ந்திருக்க வதிலேநின்றன ; [h] இருமதிலாக நிறுத்தப்பட் டதெனவும் நடை தடிக்கப்பட்டதெனவும் முன்சொல்லப்பட்ட நீரையு மிவற்றோடு கூட்டவாகு மிவ்வைம்பூதங்களையும் அவ்வாறு வேறுபடுத்தி யதன்றியும் அவ்வந்நிலையில் நிற்கும்படி யருமையாகக் காத்தன ; [i]மோ க்ஷமடைதற்குக் காரணமான சத்தியவேத ஞானத்தோடு [j]ஈகை [k]கா ருண்ணியங்களையும் [l] தவ [m] வின்பத்தோடு [n] பொறுமை [o] தெளிவுக

---

a அர்ச். மத்தேயு சுவிசேஷம்- கஉ-ம் - அதி. கo - கரு-ம் வசனம்.

b தோபியாஸ் ஆகமம் - ௬-ம் அதி. உரு-ம்-வசனத்திலும் கூ-ம்-அதி. கூ-ம்-வசனத்திலும்-கo-அதி-கo-ம்-வசனத்திலுங் காண்க.

c அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-கூ-ம் - அதி. உ-ம்-வசனம்.

d அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-அ-ம்அதி. உசு-ம் - வசனம்.

e அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-உஎ-ம் அதி. ருக-ம்-வசனம்.

f அர்ச். லூக்கா எழுதியருளின சுவிசேஷம்-உரு-ம்-அதி. சச-ம் - வசனம்.

g தானியேல் தீர்க்கதரிசனம்-ரு - ம்-அதி. உரு - உசு - உஎ-ம்-வசனம்.

h கடவுள் ஐம்பூதங்களையு மியல்புகெடுத்ததற்கு உதாரணம். இப்புயவகுப் புள் அங்கங்கே கூறியிருக்கின்றும். அவற்றை மறுபடி பழையபடி யாக்கியதே அவ்வைம்பூதங்களையும் அரிதிற் காத்ததெனக்கொள்க.

i அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம் -௬-ம்-அதி. உரு-ம்-வசனம். கூ-ம்-அதி. உ-ரு-௬-ம்-வச. ககூ-ம்-அதி. உக-ம்-வசனம்.

j அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-ரு-ம்-அதி. சஉ-ம் - வசனம்.

k அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-ரு-ம்-அதி. எ-ம்-வசனம்.

l அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-௬-ம்அதி. கஎ-ம்-வசனம்.

m அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-ரு-ம்-அதி. கக-கஉ-ம்-வச.

n அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-ரு - ம்அதி. ௬ - கூ-ம்-வச.

o அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம் - ரு-ம்-அதி. கஎ - கஅ-ம்-வச.

ளையும் * அறவலியோடு † வாய்மை ‡ நீதிகளையும் § மற்றெல்லா நன்மைகளையும் ¶ பூமியெங்கும் நிறைத்தன ; குற்றங்கள் துன்பங்கள் முழுவதையு நீக்குவன: முடிவில்லாத மோக்ஷத்திற் செலுத்துவன ; திருக்காவலூர்த் தேவமாதின் திருக்குமாரனுடைய நல்ல **தோள்கள். எ-று.

1. வெள்ளி என்னுமொழி, "வெளியாய் கரியாய் பச்சையனே செய்யமேனியனே" "வெளியநீ ருடுமேனி வேதியன்" என்பவற்றிற்போல இங்கே யிடைகுறைந்து நின்றது.

2. மதிமுதலியவைகளை வேறுபிரித்து நோக்குங்கால் உலகங்களென வேறின்மையானும், இவ்வுறுப்புகளைத் தொகுத்து நோக்குங்கால் இவையேயுலகங்களாயமைதலானும், பலவுலகங்களையும் அவற்றிலுள்ள மதிமுதலிய வுயிரில்லாப் பொருள்களனைத்தையுமென்னுது பலவுலகங்களினுமுள்ள மதிமுதலிய வுயிரில்லாப்பொருள்க ளனைத்தையு மென்று ரிவ்வாசிரியரொன வறிக.

0 வெளி, ஆகுபெயர்.

3 1. பகைத்தன வென்பது முற்றெச்சம். பிறவுமன்ன.

4. 2. முழுதும் - என்பதில் உம்மை விகாரத்தாற் றொக்கது.

5. "பொழிந்தன" வென்பது இங்கே முதனிலை திரியாது பிறவினைப்பொருளில் வந்தது; இலக்கணக்கொத்து-வினையியல் எ-வது - சூத்திரத்திற் காண்க. ஏனையிடத்து மிப்படியே கொள்க.

6. விரவி - வினையெச்சத் திரிபு.

7. "ஒளியெழுமுருள்" என்பதற்கு ஒளியோடு உதயமாகும் உருளாகிய சூரியனை என்றேனும் சூரியனெழுகின்ற தேரினை யென்றேனும் பொருள்கொளினுமமையும்; சூரியனெழுகின்ற தேரினை யென்பதும் இவ்வாசிரியர்க்கு உடன்பாடு என்பதை இந்நூலில் - அஉ-ம்-பாட்டில் "கடனீர்மூழ்கிப் படும்பகற் றேர்நிறுத்தினனே" என்பதானுமறிக.

மாயிராவென்று என்பதில் - என்று என்னுமிடைச்சொல் உவமைப்பொருளில்வருதலை "எனவென்ப துவமையெண்குணம் வினைபெயரிசைகுறிப்பியலுமென்று மினைத்தே" என்றதொன்னூல் விளக்கம் கரு௲-ம் சூத்திரவிதியாற் கொள்க.

---

* அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-௬-ம்-அதி. ௲-௪-ம்-வச.

† மோசேசு இரண்டாம் ஆகமம்-௨௦-ம் - அதி. கரு-ம்-வசனம்.

‡ அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம்-ரு-ம்-அதி. ௬-ம்-வசனம்.

§. இங்கே மற்றெல்லா நன்மைகளையு மென்றது செபம்பண்ணவேண்டிய விதமுதலிய நன்மைகளை : அவற்றை அர்ச். மத்தேயு எழுதியருளின சுவிசேஷம் - ௬-ம்-அதி. ரு-ம்-வசனமுதலியவைகளிற் காண்க.

¶ அர்ச். மத். உ௪-ம்-அதி. க௪-ம்-வசனத்திலும்-உ௬-ம்-அதி.க௩-ம் – வசனத்திலுஞ் சொல்லியபடி சுவிசேஷம் பூமியினெவ்விடத்தும் நிறைதலால் அதிற் கூறப்பட்ட இந்த நன்மைகளு முடனிறைத லறிந்துகொள்க.

** சுவாமிசெய்ததை அவர் புயஞ்செய்த தென்று கூறுதலை - இராஜாக்களின் இரண்டாம் புத்தகம்-கஎ-அதி. ௲௬-ம்- வசனத்திற் காண்க.

8. திருத்திய வென்பதைச் செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு உயர்ந்தோருவக்கவும் அவரைத் திருத்தவும் எனப் பொருள்கூறினுமமையும்.

9. அஞ்சி வெருவுற - வென்பவைகள் சிறப்பினால் வந்த ஒருபொருட் பன்மொழி.

10. ஒடு - என்பவைகளை இசைநிறைப்பொருளிலேனும் எண்ணுப்பொருளிலேனுங் கொள்ளினு மமையும். (எ)

(கட்டளைக் கலித்துறை.)

[1]புயங்கவுருவால்வினைநஞ்சுமிழ்ந்துபுழுங்கியபே
யுயங்கமிதித்துத்தவத்தால்வென்றுயெனவொண்மதிய
மயங்[2]கார்பகையினுக்கஞ்சிவந்துன்[3]றவவாகையிற்றான்
முயங்கவடைக்கலங்கொண்டதோகாவலூர்மூதுயிரே.

(-ரை) காவலூர் - திருக்காவலூர்க்கு—மூது - பழமையான—உயிரே- உயிரானவளே — ஒள்மதியம் - ஒள்ளிய நிலாவானது—மயங்கு - (தான்) மயங்கத் தக்க—ஆர்பகையினுக்கு - மிகுதியாகிய பகையினையுடைய பாம்புகளுக்கு—அஞ்சி-பயந்து—புயங்கம் - பாம்பினது—உருவால் - உருவைக்கொண்டு—வினை- தீவினையாகிய—நஞ்சு - விஷத்தை—உமிழ்ந்து - கக்கி—புழுங்கிய - (மனம்) புழுங்கிய—பேய் - பிசாசத்தை—உயங்க - (அது)வருந்தும்படி — மிதித்து - மிதித்து—தவத்தால் - (உன்) தவத்தினாலே—வென்றாய் என- (நீ வென்றனையென்று—உன்- உன்னால்—தவ . மிகவும்—வாகையின் - வெற்றியினை—தான் - தான்—முயங்க - தழுவ—வந்து - (உன்பாதத்தில்) வந்து —அடைக்கலங்கொண்டதோ - (உன்)னடைக்கலத்தைப் பெற்றதோ. எ-று. தான்-ஏ-அசைகள்.

(பொ-ரை.) திருக்காவலூர்க் குயிராயிருக்குந்தாயே! ஒள்ளியநிலாவானது தான்மயங்கி வருந்தச் செய்யும் பகைகொண்ட பாம்பினுக்கஞ்சிப், *பாம்பின துருவைக்கொண்டு பாவமாகிய நஞ்சைக் கக்கி மனம்புழுங்கிய பேயை நீ யுன்தவத்தால் மிதித்துவென்றா யென்று, உன்னால்மிகவும் வெற்றியைத் தானடையும்படி யுன்பாதத்தில்வந் துன்னடைக்கலத்தைப் பெற்றதோ! எ-று.

1. பேயாகிய பாம்பை மிதித்து வென்றாயென்னாது புயங்கவுருவால் வினைநஞ்சுமிழ்ந்து புழுங்கிய பேயை மிதித்து வென்றாயென்றார், தேவமாதா மிதித்தது பாம்பின் வடிவமுள்ளதாயினும் பேயாயிருத்தல்போலச் சூரியனுக்குப் பகையவாகிய இராகு கேதுகளும் பாம்பெனப்பட்டவேனும் உண்மையா னோக்குங்கால் சந்திரனது நிழலும் பூமியினது நிழலுமென்ப தறிவித்தற்கெனவறிக.

---

* மோசேசு என்பவர் எழுதின முதலாகமம் - கூ-ம்-அதி. முதலாம் வசன முதல் பதினைந்து வசனங்களாற் காண்க.

2. ஆர்பகை என்றது வினைத்தொகையின் புறத்துத் தொக்க வன்மொழித் தொகை.

3. தவவாகை என்பது, தவத்தின் வெற்றியெனவுந் தொனித்தலால் தொனியலங்காரம். (அ)

(நேரிசைவெண்பா.)

[1]உயிராந்தயையாளை யோம்பநந்தத்தாளை
[2]யயிராமறைமொழியாளைப்[3]பயிராருஞ்
சிந்துசேர்காவலூர்சேர்ந்தாளைப்பாடினே
னிந்துசேர்தாள்சேரயான்.

(ப-ரை.) உயிர் - மக்களின்மேல்—ஆம் - உண்டாகும் — தயையாளை - கிருபையுள்ளவளை—ஓம்பு - பாதுகாக்கின்ற — அநந்தத்தாளை - முடிவில்லாதவளை— மறை - வேதத்தையுணர்த்தும்—அயிர் ஆம்-சருக்கரையையொத்த—மொழியாளை-சொல்லையுடையவளை—பயிர் - பயிரும்—ஆரும் - நிறைந்த—சிந்து - (காவிரி)யாறும்—சேர் - சேரப்பெற்ற—காவலூர் - திருக்காவலூரை— சேர்ந்தாளை - சேர்ந்ததேவதாயை — பாடினேன் - புகழ்ந்துபாடினேன்— இந்துசேர் - சந்திரன்சேர்ந்த—தாள் - அவள் திருவடிகளை—சேரயான் - நான் அடைதற்கு— எ-று.

(பொ-ரை.) மனிதர்மேலருளுள்ளவளை யிடைவிடாமற் பாதுகாப்பவளை வேதத்தையுணர்த்துஞ் சருக்கரையை யொத்த மொழியையுடையவளைப் பயிருங்காவிரியாறுஞ் சேர்ந்த திருக்காவலூரை யடைந்த தேவதாயைப் புகழ்ந்து பாடினேன் சந்திரன் சேர்ந்தவவள் திருவடிகளை நானடைதற்கென்றவாறு.

1. உயிரென்பது, ஆகுபெயர். "உயிராந்தயையாளை" யென்பதற்கு மக்கட்குயிராயிருக்கின்ற தயையைக் கொண்டவளை எனப் பொருள்கொளினு மமையும்.

2. "அயிராமறை" என்பதை, அயிரா-மறை-யென இரண்டு சொல்லாகப்பிரித்துச், சந்தேகித்தற் கிடம்பெறாத சத்தியவேதத்தை யுணர்த்துகின்ற எனப்பொருள்கொள்ளலு மொன்று.

3. "பயிராருஞ் சிந்துசேர்" என்பதற்குப் பயிர்நிறைந்த சிந்துதேசத்தை சேர்ந்த எனப்பொருள்கொள்ளினு மிழுக்காது. (௯)

(மடக்குக்கலிநிலைத்துறை.)

யா[1]னரும்பும்பதத்தழகிமதியரும்பும்பதத்தழகியினியவில்வாய்
பானரும்பும்படத்தழகி[2]தேனரும்பும்படத்தழகிபகலிற்றேல்கா
மீனரும்புஞ்சிரத்தழகி[3]விண்ணரும்புஞ்சிரத்தழகிவிரிவான்[4]வீட்
டானரும்புமுகத்தழகிதயை[5]யரும்பக்காவனலூர்தங்கினளே[டைத்

(ப-ரை.) யான் அரும்பும் - நான்(நலத்தைப்)பெறும்—பதத்து அழகி - சொல்லழகினள்—மதி அரும்பும் - சந்திரன் விளங்கும் — பதத்து அழகி - பாதவழகி

னள்—இனிய - இன்பமான—வில் - பிரகாசமானது — வாய் - பொருந்திய—பானு - சூரியனாகிய—அரும்பும் - அழகைச் செய்யும்—படத்து அழகி - உடையழகினள்—தேன் அரும்பும் - தேனைத்துளிக்கும் — படத்து அழகி - விருதுக்கொடியழகினள் — மீன் - நக்ஷத்திரங்கள்—பகல் - சூரியனால்—இற்று ஒல்கா - ஒழிந்து தளராமல்—அரும்பும் - விளங்கப்பெற்ற— சிரத்துஅழகி - சென்னியழகினள் — விண் - வானுலகத்தில் — அரும்பும் - உண்டாகும் — சிரத்து அழகி - மேன்மையழகினள்—விரி - விரிந்த—வான்வீட்டை - மோக்ஷவீட்டின்பத்தை—அரும்பும் - காட்டும்—முகத்துஅழகி - முகவழகினள்—தயை அரும்ப - தயைதோன்ற — காவல் நல் ஊர் - நல்ல திருக்காவலூரினிடத்து—தங்கினாள் - (வந்து) தங்கினாள்—எ-று. தான்-ஏ-அசைகள்.

(பொ-ள.) நான்நலத்தைப் பெறுதற்கான சொல்லழகியுஞ் சந்திரன் விளங்கும் பாதத்தழகியுஞ் சூரியனாகிய வுடையழகியுந் தேனைத்துளிக்கும் விருதுக்கொடியழகியுஞ் சூரியன்முன்னு மொளிகெடாது விளங்கு நக்ஷத்ர கிரீடத்தைக் கொண்ட சிரவழகியும் வானுலகத்திலடையுமேன்மையழகியு மோக்ஷபேரின்பத்தைக் காட்டு முகவழகியுமான தேவமாதா தயையுடனே திருக்காவலூரில் வந்து தங்கினாளென்றவாறு.

1. இங்கே "யரும்பும்" 5. "அரும்ப" வென்பவைகள் பண்பாகுபெயர். இரண்டாம் பாட்டுரையிற் காண்க.

2. தேன்-என்பதற்கு வாசனையையுடைய வெனப்பொருள் கூறினுமிழுக்காது. இவ்வாறன்றி "மதுவாகையினான்" "கமழுஞ்சேக்கை" "வேரியங்கொடி" என்பவைபோல இச்சொல் மலரைக் குறிப்பாலுணர்த்திய தெனினுமமையும். மணவாளனுக்குப் பூங்கொடி விருதாதலானும் அது தன்னிமித்தமாகவே யுண்டானமையானுந் தேவமாதாவுக்கு அது விருதாயிற்றென வறிக.

3. விண்-என்பது அங்கேயுள்ள மோக்ஷத்தையும். 4. வீடு-என்பது அங்கேயுள்ள பேரின்பத்தையு முணர்த்தலால் ஆகு பெயர்கள். (௪0)

(தாழிசை.)

தங்க[1]டேகமதங்கடீரமறங்க[2]டேயுகத்தாழ்வெலா
மங்கவேதவறங்கடேறமனங்கடேரவழங்கிவா
னங்கிலாபமடைந்துவாழவடங்கலேதிருக்காவலூர்
நங்கைசேவடிநம்பினாளுநயந்துசூடுகநாடியே.

(ப-ரை.) தங்கள்-தங்களுடைய—தேகமதங்கள்-சரீமதங்கள்—தீர - ஒழியவும்—மறங்கள்-பாவங்கள்—தேயுக-நையவும்—தாழ்வுஎலாம்- குறைவுகளெல்லாம்—மங்க-கெடவும்—வேதம்-சத்தியவேதத்திற் சொல்லிய—அறங்கள்-புண்ணியங்களில்—தேற-(தாங்கள்)நிலைநிற்கவும்—மனங்கள்-உள்ளங்கள்—தேர - தெளியவும்—வழங்கி - நன்னெறியிலொழுகி—வான் அங்கு - மோக்ஷத்தினிடத்து — இலாபமடைந்து - பயனையடைந்து — வாழ - வாழவும் — அடங்கல் - யாவரும்—

திருக்காவலூர் - திருக்காவலூரி லெழுந்தருளிய—நங்கை - மாதரசியின் — சே- செவ்விய—அடி - திருவடித் (தாமரை)களை—நம்பி - நம்பி— நாடி - தேடி — நாளும் - என்றும்—நயந்து - விரும்பி—சூடுக - (தங்கள்) சிரசில் தரித்துக்கொள்ளக்கடவர்—எ-று. ஏகாரங்கள் ஈற்றசை.

(பொ-ரை.) தங்கள் சரீரமதங்களும் பாவங்களுங் குறைகளுநதீர வுஞ்சத்தியவேதத்திற் சொல்லிய புண்ணியங்களிலே தாங்கள்நிலைநிற்கவு மனந்தெளியவு நல்ல நெறியில் நடந்து மோக்ஷப்பயனை யடையவும் யாவருந் திருக்காவலூரி லெழுந்தருளிய தேவமாதாவின் திருவடித்தாமரைகளை நம்பித்தேடி யாசையோடு தங்கள் சிரத்திலணிந்துகொள்ளக் கடவரென்றவாறு.

1 தேகமதங்களாவன செருக்கு முதலியவை.

2 தேயுக என்பது உகரச்சாரியையையுங், குச்சாரியையையும் பெற்ற வினையெச்சமொழி. கக)

(வஞ்சிவிருத்தம்.)

நாடியமேற்கதி[1]நலங்காணு
வாடியதென்னுளமலிநெஞ்சே
தேடியணங்கறுதிருக்காவற்
பாடியணங்கடிபணியா[2]யோ.

(ப-ரை·) மலி-(வீணெண்ணம்) நிறைந்த—நெஞ்சே-மனமே—நாடிய - (யாவராலுந்) தேடப்பட்ட—மேல் - மேலான—கதி - மோக்ஷத்தினது—நலம் - இன்பத்தைத் தருந்துறையை—காணு - அறியாமல்—வாடியது - (இவ்வாறு) மெலிவதினால்—என் உள - (உனக்)கென்னபயனுண்டு (நீபயனடைய வேண்டின்) — அணங்கு அறு - துன்பத்தை நீக்கும்—திருக்காவல்பாடி - திருக்காவலூரி லெழுந்தருளிய—அணங்கு - தேவமாதின்—அடி - பாதங்களை—தேடி - நாடி—பணியாய்-நீ வணங்குக.—எ-று. ஓகாரம் - அசைச்சொல்.

(பொ-ரை.) மனமே! யாவருந்தேடும் மோக்ஷநலத்தைத் தருந்துறையை யறியாமலிவ்வாறு மெலிவதினா லுனக்குப் பிரயோசனமென்னை? நீ பயனடையவேண்டின் துன்ப நீங்குந் திருக்காவலூர் நாயகியின் பாதாரவிந்தங்களைத் தேடி வணங்குவாயாக வென்றவாறு.

1. நலம் என்பது அதனைத் தருந் துறைக்காதலாற் காரிய வாகுபெயர்.

2. இவ்வோகாரத்தை வினாப்பொருளதாக்கித் துன்பநீங்கிய திருக்காவலூர்த்தேவமாதின் பாதாரவிந்தங்களைத் தேடிவணங்கமாட்டாயோ? வீணெண்ணம் பெருகிய மனமே! யாவராலுந் தேடப்பட்ட மேலான மோக்ஷாநந்தத்தைத் தருந்துறையை யறியாமல் (நீயிவ்வாறு) மெலிவதினா லுனக்கென்ன பயனுண்டெனப்பொருள் கோடலுமொன்று. இங்கே மலி என்பதற்குப் பெருகிய எனப்பொருள்கொள்ளப்பட்டது. (கஉ)

(காலம்எண்சீரடி ஆசிரியவிருத்தம்.)

[1]பணியாதகாமமுதிர்வேனிற்காலம் பட்டாற்றாதழுங்கட்கார்க்காலமாகிக் கணியாத[2]நரகச்சமுருக்குங்கூதிர்க்காலத்துண்ணடுங்கியபின்[3]வினையுநோயுந், [4]தணியாத[5]பனிமுன்பின்[6]காலமும்போய்த்தவஞானம்பூப்பவிளவேனிற்கால, மணியாததிருக்காவலூராளன்னையடிக் கடிமைப்பட்டுற்ற காலமாலோ.

(ப-ரை.) பணியாத - தாழாத—காமம் - மோகத்தையுண்டாக்கும் — முதிர்வேனிற்காலம் - முதிர்வேனிற்காலமானது—பட்டு - ஒழிந்து—ஆற்றாது - (துன்பத்தைச்)சகியாமல்—அழும்- (கண்ணீர்விட்)டழும்—கார்க்காலம்-கார்க்காலமானது—ஆகி - ஆய்—கணியாத - அளவிடப்படாத—நரகு அச்சம் - நரகபயத்தை—உருக்கும் - சொரியும்—கூதிர்க்காலத்து - கூதிர்க்காலத்தில்— உள் - மனமானது—நடுங்கியபின் - நடுக்கங்கொண்டபின்பு—வினையும் - தீவினை — தணியாத - குறையாம லிருக்கப்பெற்ற—முன்பனிக்காலமும் - முன்பனிக்காலமும் — நோயும்- பிணி—(தணியாத) - குறையாமலிருத்தற் கேதுவாகிய — பின் (பனிக்காலமும்) - பின்பனிக்காலமும்—போய் - ஒழிந்து—தவம் ஞானம் - தவமும் ஞானமும்—பூப்ப - புட்பிக்க—அணியாத- (எவராலும்) அலங்கரித்துச் சொல்லவியலாத—திருசிறப்பினையுடைய—காவலூர் - திருக்காவலூரை—ஆள் - ஆள்கின்ற — அன்னை - தாயினுடைய—அடிக்கு - பாதங்களுக்கு — அடிமைப்பட்டு - அடிமைத்திறம்பொருந்தி—உற்ற - தங்கிய—காலம் - காலமே—இளவேனிற்காலம்-வசந்தகாலமாம். எ-று. ஆல்-ஓ-அசைகள்.

(பொ-ரை.) மிக்கமோகத்தை யுண்டாக்கு முதிர் வேனிற்காலம் ஒழிந்து துன்பத்தைச்சகியாமற் கண்ணீர்விடச் செய்யுங்கார்க்காலம்போய் அளவில்லாத நரகபயத்தைத் தருங் கூதிர்க்காலத்திலே மனநடுக்கங் கொண்டபின் பாவங்கள்பரவு முன்பனிக்காலமும் பிணிகள் பரவும் பின்பனிக்காலமும்போய்த் தவமும் ஞானமும் புட்பிக்கவெவராலு மலங்கரித்துச் சொல்ல வியலாத சிறப்பினையுடைய திருக்காவலூரை யாளுந் தேவமாதாவின் றிருவடித்தாமரைகளுக் கடிமைப்பட்டுற்ற காலமே யிளவேனிற்காலமாகு மென்றவாறு.

1. "முதிர்வேனிற்காலம்" என்பது முதலியன, "பணியாதகாமம்" என்பது முதலிய விசேடணங்களாற் றம்முரிப்பொருளை யொழித்து மிக்க காமத்தை யுண்டாக்கிய காலமென்பது முதலிய பொருளைக் குறிப்பாலுணர்த்தலான் அவை சிறப்புருவகவணிகள்.

2. நரகச்ச முருக்குதலாவது, நரகத்தி லஞ்சத்தக்கவிதமா யஞ்சச்செய்வது.

3. வினையுமென்பது முன்பனிக்காலத்திற்கும் நோயுமென்பது பின்பனிக்காலத்திற்குங் கூட்டப்படுதலா லிது நிரனிறையணி. இதிலுள்ள உம்மை இரண்டும் எண்ணும்மைகள். இவ்வாறு வருதலை இலக்கணவிளக்கம் பொருளதிகாரம் அக

த்திணையியல் ஐந்தாஞ் சூத்திரவுரையிற் காண்க. இவ்வும்மைகளை யிவ்விடத்துப் பகுதிப்பொருள் விகுதிகளெனக் கொள்ளினு மமையும்.

4. தணியாத வென்பதைத் தனித்தனி வினையும் நோயும் என்பவற்றோடு கூட்டித்தணியாதவினையும் தணியாத நோயும் எ-ம். 5. பனி 6. காலமு மென்பதை முன்-பின் - என்னுமிரண்டிடத்துங் கூட்டி முன்பனிக்காலமும் பின்பனிக் காலமும் எ-ம். கொள்க. (௩௬)

(இடைச்சி-எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.)

மாலுகுத்தசெஞ்சொல்லிடைச்சியே வாயமிர்தமோடெய்த [1] லுள்ளியே
பாலுநீருநூல்வாயமிர்தெனுப்பால்கலந்தநீர்விற்பவெய்தினுய் [ல்லுமோ
நீலமுண்டநின்கண்ணிலொன்றுமெய்ந்நீர்மையன்றியிங்குன்பொய் [2] செ
[3] சீலவன்னமாள்காவலூரிலேசேர்ந்தபாலினீர் [4] தோன்றிநாணுவாய்.

(ப-ரை.) வாய் - (உன்னுடைய) சொல்—அமிர்தமோடு - பாலினோடு — எய்தல் - (இனிமையாற்) பொருந்துதலை—உள்ளியே - நினைத்தே — மால் - ஆசையை —உகுத்த - சொரிந்த—செஞ்சொல் - செவ்விய சொல்லைக்கொண்ட— இடைச்சியே - ஆய்ச்சியே—பாலும் நீரும் - பாலுஞ்சலமும்—நூல்வாய் - (நிகண்டுமுதலிய) நூலினிடத்து—அமிர்தெனு - அமிர்தந் தாமேயென் றுணர்ந்து—பால் - பாலினோடு — கலந்த - (நீ)கூட்டிய—நீர் - நீரையும் — விற்ப - (அமுதென்று) விலைகூற—எய்தினுய் - அடைந்தாய்.—நீலம் - நீலோற்பலமலரையொத்த—உண்ட-(மையை)யுண்ட—நின்கண்ணில் - உன்கண்களில்—ஒன்றும் - பொருந்திய—மெய்ந்நீர்மையன்றி - மெய்த்தன்மையே யல்லாமல்—இங்கு - இவ்விடத்தில்—உன் - உனது—பொய் - பொய்யானது— செல்லுமோ - நடவாது — சீலம் - ஒழுக்கத்தையுடைய—அன்னம் - அன்னமானது—ஆள் - ஆள்கின்ற — காவலூரில் - திருக்காவலூரில்—சேர்ந்தபாலில் - கலப்பிடமான இப்பாலில்— நீர்தோன்றி - ஜலந்தோன்ற—நாணுவாய் - நீவெட்கமடைவாய்—எ-று.

இப்பாட்டுச் சிலேடையலங்காரம் பெற்றதாகையால் ஈற்றிலுள்ள இரண்டடிகளுக்கு மற்றோர் பொருள்வருமாறு

நீலம்-(பாவமென்கிற) நஞ்சை—உண்ட - புசித்த—நின்கண்- உன்னிடத்து—ஒன்றும்மெய் - ஒருமெய்யும்—இல் - இல்லை—இங்கு - இவ்விடத்து — நீர்மை அன்றி - (மெய்த்)தன்மை (செல்லுமே) யல்லாது—உன்பொய் - உன்னுடையபொய்—செல்லுமோ - செல்லாது — சீலம் அன்னம் - ஒழுக்கத்தையுடைய அன்னம் போல்பவளாகிய தேவமாதா—ஆள் - ஆள்கின்ற— காவலூரில் - திருக்காவலூரின்கண்—சேர்ந்தபாலின் - நீசேர்ந்ததன்மையால்—நீர் - நன்மை—தோன்றி - (உனக்கு) உண்டாக — நாணுவாய் - (இப்பொய்ம்மைக்கினிநீ) வெட்கமடைவாய்—எ-று.

(பொ-ரை.) நின்சொல்லானது அமிர்தத்தின் குணமுடைய தென்று கருதிமயக்கத்தைத்தருஞ்சொற்களைக்கொண்ட விடைச்சியே! பாலும்

நீரும் நிகண்டுமுதலிய நூலினுலமுதமென்று சொல்லப்படுமென் றுணர்ந்து பாலோடு நீகலந்த தண்ணீராயுமிங்கே யமுதமென்று விற்கவந்தாய். நீலமலரையொத்து மையையுண்ட வுன்கண்களிற் பொருந்திய மெய்த்தன்மையேயன்றி யிவ்விடத்தி லுன்பொய்செல்லமாட்டாது. ஒழுக்கம்பொருந்திய வன்னமரசாள்கின்ற திருக்காவலூரிலே கலப்பிட்டமானவிப்பாலில் நீர்பிரிக்கப்பட்டு நீ வெட்கமடைவாயென்றவாறு. [பாவமாகிய நஞ்சையுண்ட வுன்னிடத்தே யொருமெய்ம்மையு மில்லை. இவ்விடத்தே மெய்ம்மையானது செல்லுமேயல்லாம லுன்பொய்யானது செல்லாது. ஞானவொழுக்கம் பொருந்திய வன்னத்தையொத்த தேவமாதா வரசாள்கின்ற திருக்காவலூரிலே நீ சேர்ந்தமையா லுனக்கு நன்மையுண்டா யிப்படிப்பட்ட பொய்ம்மைக்கினி நீநாணுவாயென்றவாறு.]

1. உள்ளியேயென்பதில் ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது ; அசைநிலையெனக் கொள்ளினுமமையும்.

2. செல்லுமோவென்பதில் ஓகாரம் எதிர்மறைப்பொருளில் வந்தது.

3. சீலவன்னம் என்பதைத் தேவமாதா அன்னஅம்மாளின் மகளானதாற் பால்நீர் பிரித்தல் என்பவற்றிற் கேற்கத்தொனிக்கும்படி வேற்றுமைத் தொகையாகக் கொண்டு சீலத்தை யுடைய அன்ன மென முதலுமையிலு மன்மொழித் தொகையாகக்கொண் டொழுக்கத்தையுடைய தேவமாதாவென விரண்டாமுறையிலும் பொருள் கூறினுமென்றறிக.

4. தோன்றியென்பது இங்கேவினைமுதலையும் பிறிதையுமேற்று வருதலால்வினையெச்சத்திரிபு. (கசு)

(மறம்-தாழிசை.)

நாணிபூட்டியசாபமேந்திய [1] வீரவெங்கர [2] வேடனூர்
நாணவுட்சுடுதீயசொற்கொடுநம்மையெள்ளினராரடா
[3] சேணிபூட்டியகொம்பரோங்கியதேறலூட்டியகாவலூர்ச்
சீரினுளொருதேவ [4] மானெருசியமேகருவுற்றகாற்
[5] பாணிபூட்டியவெங்கடார்மலைபற்றியெங்குடிலெய்தினுள்
பாதமூன்றியவாயிருமனைபூத்தகாடென [6] வாயடா
தூணிபூட்டியவம்புபோலவள்புக்கசிற்றிலலர்ந்தபூத்
தூயதேனுகவின்னும்வாடிலைசூழ்ந்துவாழ்த்திட [7]வண்டரோ.

(ப-ரை.) நாணி - நாரியானது—பூட்டிய - ஏற்றப்பட்ட — சாபம் - வில்லை—ஏந்திய - தாங்கிய—வீரம் - பராக்கிரமம்பொருந்திய—வெம்-வெவ்விய — கரம் - கையையுடைய—வேடனூர் - வேடனூராகிய (நாம்) —நாண - வெட்கும்படி—உள் - மனத்தை—சுடு - சுடுகின்ற—தீய -கொடிய—சொல் - சொல்லை—கொடு - கொண்டு—நம்மை - எம்மை—எள்ளினர் - இகழ்ந்தவர்கள்—ஆரடா - எவரடா—சேணி - ஆகாயத்தில்—பூட்டிய - பூட்டப்பட்ட — கொம்பர் - பூங்கொம்பு

கள்—ஏந்திய - தாங்கிய—தேறல் - தேனை—ஊட்டிய - உண்பிக்கப்பெற்ற—காவலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய—சீரினுள் - (பேரின்பச்) செல்வமுடையவளாகிய — ஒரு தேவமான் - ஒருதெய்வப்பெண்ணானவள் — ஒருசீயம் - (சுதனாகிய) ஒருசிங்கத்தை — கருவுற்ற - கர்ப்பங்கொண்ட—கால் - காலத்தில் — பாணி - ஜலத்தினால்—பூட்டிய - அலங்கரிக்கப்பட்ட — தார் - மலர்களையுடைய — எங்கள்மலை - எம்முடையபர்வதத்தை — பற்றி - விரும்பி — எம் - எம்முடைய — குடில் - சிறுவீட்டை — எய்தினாள் - அடைந்தாள் — பாதம் - அவள்திருப்பாதங்கள் — ஊன்றிய - வைக்கப்பட்ட — ஆய்இல் - அவ்வீடானது — தாமரை பூத்த - தாமரைமலர்கள்புட்பித்த — காடுஎன - காட்டைப்போல — ஆய்அடா - ஆகும்படியடா. — தூணி - அம்புக்கூட்டில் — பூட்டிய - பூட்டப்பட்ட — அம்பு போல் - அம்பைப்போல — அவள்புக்க - அவள்புகுந்த — சிற்றில் - சிறியவீடாகிய— அலர்ந்தபூ - மலர்ந்தபூவானது — அண்டர் வண்டர் - வானவர்களாகியவண்டுகள் — சூழ்ந்து - சூழநின்று — வாழ்த்திட - வாழ்த்தும்படி — தூய - பரிசுத்தாற்புதங்கள் — தேன் - தேன்துளிகளாக — உக - (அதினின்று) சொரியப்பட — இன்னும் - இன்னமும் — வாடிலை - வாடவில்லை. எ—று.

(பொ - ரை.) நாணேற்றியவில்லைப் பராக்கிரமம் பொருந்திய கையிற்கொண்ட வேடனாகியநாம் நாணும்படியா யெம்மை யிகழ்ந்தவர்களாரடா வானளாவிய பூஞ்சோலையினின்று பொழியுந்தேன் பாய்கின்ற திருக்காவலூரி லெழுந்தருளிய வொருதெய்வமானவள் சுதனாகிய ஒரு *சிங்கத்தைக்கருப்பங்கொண்ட காலத்தி லெங்கள் மலையை விரும்பி யெமது சிறுவீட்டில்வந்தாள். அவள்பாதத்தைவைத்த வவ்வீடானது தாமரை பூத்தகாடுபோலாகும்படியடா. பின்னரும் அம்புக்கூட்டிலே நுழைந்த அம்பைப்போல அவள் புகுந்து வாழ்ந்திருந்த சிறியவீடாகிய வோர்மலரானது வானவராகிய வண்டுகள் சூழ்ந்து வாழ்த்தும்படி பரிசுத்தாற்புதங்களைத்தேன்றுளிகளாகத் துளித்துக்கொண்டின்னும் வாடாமலிருக்கின்றதென்றவாறு.

எங்குடிலென்றது வெல்லைமலையிற் சுவாமியைத் தேவமாதாபெற்றகுகையை; அதுசுவாமிமனிதவுருவங்கொண்ட காலத்துத் தாமரைமலரையொத்த அவயவங்களைக்கொண்டவானவர் முதலியவரால் நிறைந்தமையால் தாமரைக்காடெனவாயிற்று. அவள்புக்கசிற்றில் நசரேத்து நகரிலே திருக்குடும்பம் வாசம்பண்ணினவீடு. அவ்வீடாகிய மலர்வாடாமை, அது இத்தாலியதேசத்திலுள்ள லொரேத்துப்பட்டணத்திலின்னு மழியாது முன்போல அற்புதவதிசயங்களைத் தந்து விளங்கியிருத்தல். தேம்பாவணிப் புரோகிதப்படலம் ௨௨-ம் பாட்டுமுதல் ௩௪-ம் பாட்டீறாகக் கூறியபாட்டுகளிற் காண்க.

---

* சுவாமியைச் சிங்கமென்பது அர்ச். தேவமாதாவின் சரித்திரத்தில் தேவமாதாவின் ஜநந சங்கியையில் அர்ச். அன்னம்மாள் சுவிக்கினிடத்து "யூதாவின் சிங்கம்" என்றதனாலுமறிக.

இது வெல்லை மலையிலிருந்த வோர்மறவன் மற்றொருவேடனை நோக்கிக் கூறியதாகச் சொல்லப்பட்டது.

1. "வீரவெங்கரவேடன்" என்பதில் வேடன் என்னு முதற்பொருளின் குணங்களாகிய வீரமும் வெம்மையும் அதன்சினைப்பொருளாகிய கரத்தின்மேலேற்றியுரைக்கப்பட்டனவெனவறிக.

2. "இயற்பெயர்முன்ன ராரைக்கிளவி பலர்க்குரியெழுத்தின் வினையொடுமுடிமே" யென்பதனால் வேடனென்னும் பெயர் முன்னர் ஆரென்பதுவந்தது.

3. சேணியென்பதற்கு ஆகாயமெனப் பொருள் கூறினும் உயர்ச்சியையுடையதாதலின்.

4. மானென்னும் எழுவாய்க்குப் பெண்ணெனப்பொருள் கூறினும்; அது எய்தினளென்னு முயர்திணைவிகுதிபெற்ற பயனிலையோடு முடிந்திருப்பதான். வேத புத்தகத்திற் கூறியபடி சுதனாகிய சர்வேஸ்வரனைச் சிங்கமென்றுரைத்தற் கொப்பத் தேவமாதாவைத் தெய்வமானென்றதனா லிது தொனியலங்காரம்.

5. மலைக்கு விசேடணமாக நீரையு மலரையுங் கூறுதலை யிவ்வாசிரியராலியற்றப்பட்ட செந்தமிழிலக்கணம்-க00-ம்-இலக்கத்திற் காண்க.

6. ஆய் என்பது வினையெச்சத்திரிபு; அது எய்தினளென்னுந் தன்னெச்சங் கொண்டுமுடிந்தது.

7. வாழ்த்திடவண்டர் என்பதில் வருமொழியை இரட்டுறமொழிதலென்னு முத்தியுறக் கூறினமையின் அண்டரெனவும் வண்டரெனவும் பொருள்கொண்டாம். (சரு)

(வஞ்சித்துறை.)

வண்டிமிரும்வாய்மலர்க்காக்
கண்டிமிருங்காவனலூர்
பண்டினிதாள் [1] பாவைபணிந்
[2] தண்டினரோயண்டரரோ.

(ப - ரை.) வண்டு - தும்பிகளானவை — இமிரும் - ஒலித்திருக்கப்பெற்ற — வாய் - வாயையுடைய — மலர் - மலர்கள்வாய்ந்த — கா - சோலைகளானவை — கண் - இடங்கள்தோறும் — திமிரும்- வளரப்பெற்ற — நல் - நல்ல — காவல் ஊர்- திருக்காவலூரை — பண்டு - தொன்றுதொட்டு — இனிது - இனிதாக — ஆள் - ஆள்கின்ற — பாவை - நங்கையை — பணிந்து - வணங்கி — அண்டினரோ - நெருங்கினவரோ — அண்டர் - வானுலகத்தார். எ-று. அரோ, அசை.

(பொ-ரை.) வண்டுகள்பாடும் பூஞ்சோலைகள் தங்கிய திருக்காவலூரையினிதாயாளுந் தேவதாயை வணங்கி யண்டினவரோ மோக்ஷவாசிகளென்றவாறு.

1. பாவை என்பது உவமவாகுபெயர்.

2. அண்டினர்என்னுமெழுவா யிங்கே வினையாலணையும்பெயர்; இதனைப் பய ணிலையாகிய வினைமுற்றாகவும் அண்டவென்பதை யெழுவாயாகவுங்கொண்டு வான வர் திருக்காவலூர்நாயகியை யண்டி வணங்கினரெனக் கொளினுமமையும். (கசு)

(கட்டளைக்கலித்துறை.)

அண்டவெள்ளம்புலியேந்த [1] வரக்கவிழம்புயத்தாள்
கண்டகண்விம்மிதங்கொண்டிமைப்பாமோர்கதிர்க்கலையாள்
விண்டவழ்மீன்முடியாடிருக்காவலூர்மேவரசாண்
மண்டழகுண் [2] டகனும்பர்களென்றுமகிழ்வனவே.

(ப - ரை.) அண்டம் - ஆகாயத்திலிராநின்ற — வெள் - வெள்ளிய — அம்பு லி - சந்திரன் — ஏந்த - தாங்க — அரக்கு - சிவப்புநிறத்தோடு — அவிழ் - மலர் ந்த — அம்புயம் - தாமரைமலரையொத்த — தாள் - பாதங்களை — கண்ட - பா ர்த்த — கண் - கண்கள் — விம்மிதங்கொண்டு - அதிசயமடைந்து — இமைப்பு ஆம் - விளக்கம்பொருந்திய — ஓர் - ஒப்பற்ற — கதிர் - சூரியனாகிய — கலையா ள் - உடையையுடையவளும் — விண் - வானத்தில் — தவழ் - ஊராநின்ற — மீ ன் - நக்ஷத்திரங்களாகிய — முடியாள் - கிரீடத்தை யுடையுவளுமாகிய — திருக் காவலூர் - திருக்காவலூரினிடத்து—மேவு - எழுந்தருளிய—அரசாள் - அவ்வரசி யினது—மண்டு - மிக்க—அழகு - அழகினை—உண்டு - புசித்து — அகன் - பூவுல கத்தில் — உம்பர்களென்று - வானவரைப்போல — மகிழ்வன - மகிழும். எ-று. ஏகாரம், ஈற்றசை.

(பொ-ரை.) திருக்காவலூர்நாயகியினுடைய சந்திரன் தாங்கிய செ ந்தாமரைமலர்ப்பாதத்தைப் பார்த்த கண்க ளாச்சரியமடைந்து சூரியவு டையையு நக்ஷத்திரமுடியையுங் கொண்ட வவளதுபேரழகையுண் டிவ் வுலகில் வானவரைப்போல மகிழுமென்றவாறு.

1. அரக்கு என்பது மூன்றும்வேற்றுமைத் தொகை. இவ்வொடுவுருபு" தொ டியொடு தொல்கவின்வாடியதோ" ளென்பதிற்போல வேறுவினைப்பொருளில் வந் தது.

2. அகன் என்பதில் னகரம் மகரப்போலி. (கஎ)

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

மகிழாருலகினணுகார்கதியின்மடிவார் [1] துயரிலருளாருன்றுட்
புகழாதவரோபணியாதவரோபுடைநீகாவாதுய்யாவுயிரோ
திகழார்மணிபோலணிபூஞ்சினைக்காத்திருக்காவனநல்லூ [2] ரூர்ந்தவரோ
நிகழா [3] வருளுமிகழாமருளுநிசி [4] யற்றுயிரோவிளங்கும்பானே.

(ப-ரை.) திகழ் - ஒளி — ஆர் - பொருந்திய — மணிபோல் - ரத்நங்களைப் போல — அணி - அழகைச்செய்கின்ற — பூ - புட்பங்களையுடைய — சினை - கி ளைகள்வாய்ந்த — கா - சோலைகளைக்கொண்ட — ந - சிறந்த — காவல்நல்ஊர் - நல்லதிருக்காவலூரில் — ஊர்ந்தவர் - தம்மைச்செலுத்தினவர்கள் — அருளும் -

(உன்) அருளினாலும் — நிகழா - விளங்கி — மருளும் - பிசாசையும் — இசழா - இகழ்ந்து — நிசி - (பாவ) இருளை — அற்று - நீங்க — உயிர் - அவர்களினுயிரினிடத்து — விளங்கும் - பிரகாசிக்கின்ற — பானுவே - சூரியனே — அருள்ஆர் - கிருபைபொருந்திய — உன் - உன்னுடைய — தாள் - பாதங்களை— புகழாதவரோ - துதியாதவரும் — பணியாதவரோ - வணங்காதவரும் — உலகில் - பூமியில் — மகிழார் - மகிழ்ச்சியடையார் — நணுகார்கதியில் - பரகதியிற்சேரார் — துயரில் - துன்பத்தில் — மடிவார் - சாவார் — புடை - பக்கத்திலிருந்து — நீகாவாது - நீ காப்பாற்றாமல் — உயிர் - உயிர்கள்— உய்யா - பிழையாதன. எ-று. உயிரோ ஊர்ந்தவரோ யென்பவற்றிலுள்ள ஏகாரங்கள் ஈற்றசைகள்.

(பொ-ரை.) விளங்குநவமணிகளைப்போல வழகைச் செய்யும்பலநிறமலரைக்கொண்ட கிளைகள்வாய்ந்த சோலைசூழ்ந்த திருக்காவலூரை யடைந்தவர் நின்னருளாலும் வரங்கள்முதலியவற்றாலும் விளங்கிப் பிசாசையுங் காமாதிகளையு மிகழ்ந்து பாவவிருளை நீங்கும்படி யவருயிரில் விளங்குஞ் சூரியனே! கருணையைக் கொண்ட வுன்திருப்பாதங்களைத் துதியாதவரும் வணங்காதவரு மிவ்வுலகில் மகிழ்ச்சியடையார் பரகதியைச் சேரார் துன்பத்திற்சாவார். நீகாப்பாற்றாத வுயிர்கள் பிழைக்கமாட்டாதன வென்றவாறு.

1 துயரில் என்பதற்குத் துன்பத்தைத்தரும்வீடாகியநரகத்தில் எனப் பொருள் கோடலுமொன்று.

2 ஊர்ந்தவரோ என்பதற்குப் (பிறந்து) தவழ்ந்தவரோ யெனப் பொருள்கொளினு மிழுக்காது.

3 அருளும் மருளும் என்பவைகளில் உம்மைகள் வரங்கள் முதலியவற்றையுங் காமாதிகளையுந் தழுவிநிற்றலால் இறந்தது தழீஇய எச்சவும்மைகள்.

4 அற்று என்பது வினையெச்சத்திரிபு. (கஅ)

(தாழிசை.)

[1] பானொழிபூம்பொழினீழலேபாவொளிபுட்குரலோதையே
தேனிழிமும்மலர்வாசமேசேர்ந்தணிசெய்திருக்காவலூர்
வானிழிந்திங்குற [2] வும்பரும்வானுறவிம்பரும்வீதி [3] யாய்
மீனெழிலூர்சிரநாயகிவீற்றிவணெய்தியகாலையே.

(ப-ரை.) பானு - சூரியகிரணத்தை — ஒழி - ஒழிந்த — பூம்பொழில் - பூஞ்சோலைகளினது — நீழலே - நீழலும் — பா - பாட்டுகள் — ஒளி - ஒளிக்கத்தக்க — புட்குரல் - பறவையின் குரல்களாகிய — ஓதையே - ஒலியும் — தேன்இழி - தேன்ஒழுகுகின்ற — மும்மலர் - மூவகைமலர்களின் — வாசமே - வாசனையும் — சேர்ந்து - கூடி — அணிசெய் - அலங்காரஞ்செய்யப்பெற்ற — திருக்காவலூர் - திருக்காவலூரானது — மீன் - நக்ஷத்திரங்கள் — எழில் - அழகாக — ஊர் - தவழப்பெற்ற — சிரம் - சென்னியையுடைய — நாயகி - (மோக்ஷ)ராக்

கினியானவள் — வீறு - பெருமையுடன் — இவண் - இவ்விடத்திலே — எய்தி ய - வந்துசேர்ந்த — காலையே - காலத்தில்தானே — உம்பர் - வானவர்கள் — வான் - மோக்ஷத்தினின்று — இழிந்து - இறங்கி — இங்குஉறவும் - இவ்வுலகத் தில்வரவும் — இம்பர் - இவ்வுலகத்தார் — வான்உறவும் - மோக்ஷத்திற்குப்போ கவும் — வீதிஆய் - மார்க்கமாயிற்று. எ-று.

(பொ-ரை.) பூஞ்சோலையினிழலும் பக்ஷிகளின்குரலோசையு மலர் களின் வாசனையுங்கூடி யலங்காரத்தைச் செய்கின்ற திருக்காவலூரான து நக்ஷத்திர கிரீடத்தையுடைய மோக்ஷராக்கினி யிவ்விடத்தில் வந்த போதே வானவ ரிங்கேவரவும் இவ்வுலகத்தார் மோக்ஷத்திற்குப்போகவு ம் வீதியாயிற்றென்றவாறு.

1. பானு என்பது பொருளாகுபெயர்.

2. "உம்பரும்" "இம்பரும்" என்பவற்றிலுள்ள வும்மைகளை யவற்றினின்று ம் பிரித்து "இங்குற" "வானுற" வென்பவற்றுள்ள "உற" என்பவைகளோடு ங்கூட்டி முடித்துக்கொள்க. இவ்வாறு கொள்ளுதல் "பகாப்பதமேழும் பகுப தமொன்பது மெழுத்தீறுகத் தொடருமென்ப" என்னுஞ் சூத்திரத்துள்ளுங் கா ண்க. இவ்வாறன்றி உம்பர்களும் இம்பர்களுமென்றே பொருள்கொளினு மொரு வாறமையும்.

3. ஆயது எனற்பாலது ஆய் என விகாரம்பெற்று "அவன்வள னென்ப தொ த்தே" யென்பதுபோல வந்தது. (கக)

(எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

[1]காலையுடுமாலைவிதுவொத்திருள்கெடுத்தருள்[2]கொடுத்துயிர் களித்த னன்றே, சோலையணிகாவலினள் கோவிலினள்சோதிமடிசோமனடிதா ரைமுடியாள், [3]வேலையலைவற்றினுமிடற்கனல்குளிர்ப்பினும் விருச்சிகனி ருட்டிடினுநான், மாலையிருடிங்களொருபாதியிருபாதமொருவாதவிருமா லையொருவேன்.

(ப-ரை.) சோலை - சோலைகளால் — அணி - அலங்கரிக்கப்பட்ட — காவலினள்- திருக்காவலூரை யுடையவள் — கோவிலினள் - தேவாலயமானவள் — சோதி- சூரி யனாகிய — மடி - ஆடையையும் — சோமன் - சந்திரனாகிய — அடி - மிதியடியினையும் — தாரை - நக்ஷத்திரமாகிய — முடியாள் - முடியையுமுடைய தேவமாதா — காலையுடு- விடியனக்ஷத்திரத்தையும் — மாலைவிது - இராத்திரிகாலத்தில்எழுஞ் சந்திரனையும் — ஒத்து - நிகர்த்து — இருள் - (மன)விருளை — கெடுத்து - அழித்து — அருள்கொடுத்து- கொடை கொடுக்க — உயிர் - (அதனால்) உயிர்கள் — களித்தல் - மகிழ்தல் — நன்று- நன்றாயிருக்கின்றது. — வேலை - சமுத்திரத்தினது — அலை - அலைநீர் — வற்றினும் - வறண்டுபோனாலும் — மிடல் - வலியுள்ள — கனல் - நெருப்பு — குளிர்ப்பினும் - குளி ர்வித்தாலும் — விருச்சிகன் - சூரியன் — இருட்டு இடினும் - இருளைத்தந்தாலும் — நான் - யான் — மாலையிருள் - மாலைக்காலத்திருளிலெழும் — திங்கள் - சந்திரனது

—ஒருபாதி - ஒருபங்கினை மிதித்த—இருபாதம்-(அவளுடைய) இரண்டுபாதங்களாகிய—ஒருவாது - நீங்காமல்—அவிரும்- விளங்கும்—மாலை - மாலையை—ஒருவேன் - ஒழியேன்—எ-று. ஓகாரம்-அசை.

(பொ-ள.) பூஞ்சோலைகளா லலங்கரிக்கப்பட்ட திருக்காவலூரை யுடையவளும் கடவுள் வாசம்பண்ணு மாலயமானவளும் சூரியனையாடையாகவுஞ் சந்திரனை மிதியடியாகவும் நக்ஷத்திரங்களை முடியாகவுமுடையவளுமான தேவமாதா விடியனக்ஷத்திரத்தையு மிராத்திரியி லெழுஞ் சந்திரனையும்போல விளங்கி மக்களின் மனவிருளைக் கெடுத்து வேண்டும் வரங்களை யவர்க்குத் தந்து மகிழ்வித்தல் நன்றாயிருக்கின்றது. தந்நிலைகெட்டுச் சமுத்திரம் வற்றிப்போனாலு நெருப்பானது குளிரைத் தந்தாலுஞ் சூரிய னிருட்டைத் தந்தாலும் பிறையை மிதித்த வவள்பாதமென்னும் விளங்கு மாலையை நானொருபோதும் ஒழியேனென்றவாறு.

1. "காலையுடு மாலைவிது வொத்திருள்கெடுத்தருள் கொடுத்துயிர்களித்தனன்றோ" என்பதற்கு விடியனக்ஷத்திரமாகிய தேவமாதா இராவிலெழுஞ் சந்திரனை யொத்து அஞ்ஞான விருளைக்கெடுத்து அருள் நிலாவைப் பொழிந்து உயிர்களைக் களிப்பித்தல் நன்றாயிருக்கின்றது எனப் பொருள்கொள்ளுதலுமொன்று.

2. கொடுதது என்பது வினையெச்சத்திரிபு.

3. வற்றுதல் முதலிய குணமில்லாத சமுத்திர முதலியவற்றினிடத்தே அக்குணம் வரினும் இம்மாலையை யொருவுதலெனக் குண்டாவதில்லையென்பது கருத்தெனக்கொள்க. (உ0)

(கைக்கிளை-கட்டளைக்கலித்துறை.)

ஒருவாதிங்காள்குளிர்ம்பூந்தாளணிந்தாளொருகலை[1]யாய்த்
திருவாய்முகமொத்தாயார்ந்தகலையாய்ச்செகங்குளிர்க்குந்
[2]தருவாய்நிழற்காவலூர்வதிந்தாயினித்தான்[3]சுடவோ
மருவாதெக்காலமுமிங்கிலைக்கைக்கிளை[4]மாலையதே.

(ப-ரை.) திங்காள் - சந்திரனே—ஒரு கலையாய் - நீ ஒற்றைக்கலையுடனாக—திருஆய் - திருத்தா (யாகிய தேவமாதா) — குளிர் - குளிர்ச்சியாகிய — பூந்தாள் - (தன்னுடைய) மலர்ப்பாதத்தில்—ஒருவா - நீங்காமல்— அணிந்தாள் - (உன்னைத்) தரித்துக்கொண்டாள்—ஆர்ந்த - நிறைந்த — கலையாய் - கலைகளோடு (நீ) யாகி—முகம் - அவள்முகத்தை—ஒத்தாய் - நிகர்த்தாய் (இவையேயுமன்றி;—செகம் - பூமியை—குளிர்க்கும் - குளிரச்செய்யும்—தரு - (அத்தேவமாதாவாகிய) தருவினால்—வாய் - வாய்ந்த— நிழல் - நிழலையுடைய — காவலூர் - திருக்காவலூரில்—வதிந்தாய் - தங்கினை (ஆதலால்) —இனி – இனிமேல் — சுடவோ - சுடுதற்கோ—எக்காலமும் - எந்தக்காலத்திலும் — மருவாது - (உனக்குப்) பொருந்தாது—கைக்கிளை - ஒருதலைக் காமமாகிய—மாலையது - நோயும் — இங்கு - இவ்விடத்தில்—இலை - இல்லை—எ-று. தான் ஏ அசைகள்.

(பொ-ரை.) சந்திரனே! நீயொரு கலையுடனிருந்தபொழுது பரிசுத்ததேவமாதா வுன்னைத் தன் குளிர்ந்த மலர்ப்பாதத்திலே நீங்காமற்றரித்துக்கொண்டாள். நீ நிறைந்த கலையுடனாகி யவளது திருமுகத்தை யொத்திருக்கின்றாய். இவையுமல்லாமற் பூமியைக் குளிரச்செய்யு மத்தேவமாதாவாகிய தருவினிழலையுடைய திருக்காவலூரிலுந் தங்கினை. ஆதலால் இனி நீ எந்தக் காலத்திலுஞ் சுடுதற்குத் தகுதி யுடைமையயல்லை அதனாற் கைக்கிளை நோயுமிங்கேயில்லை யென்றவாறு.

1. ஆய் என்பது வினையெச்சத்திரிபு.

2. தரு என்றது தேவமாதாவை யென்பதுபெற்றாம்; அது, செகங் குளிர்க்கும் என்னும் விசேடணம் பெற்றமையினானறிக.

3. சந்திரனுக்குக் குளிர்ச்சியைத் தருங் குணமிருக்கச் சுடவோ வென்றது, இது மற்றோரூரிலிருந்து கைக்கிளையால் வருந்திய வொருபாவி திருக்காவலூரையடைந்து மனந்திரும்பியபின்ன ரங்கே சந்திரனைநோக்கிக் கூறுதலாகச் சொல்லப்படுதலா லெனவறிக.

4. மாலையது என்பதில் அது என்பது "குறியெதிர்ப்பைநீரதுடைத்து" என்பதிற்போலவந்த பகுதிப் பொருள் விகுதி. (உக)

(மடக்குத்-தாழிசை.)

மாலைவாங்கவந்தனன்மாலைதந்துபோயினான்
மாயமாறவந்துதான்[1]மாயமேறியேகினான்
வேலையுண்டுமாண்டருள் வேலைநல்கினான்கையில்
விண்டுயிர்த்துமீண்டடிவிண்டிலூன்றியேறினான்
பாலைபுக்குநோற்பகைப்பாலைநீக்கிநோற்றனன்
பாசம்வீக்குபாசமாய்ப்பாசமாய்ந்துமாய்ந்தனன்
காலைவேந்தனைத்தநின் [2]காலையாரறிந்துளார்
காவலார்ந்தகாவலூர்க்காவலாயகாந்தையே.

(ப-ரை.) கா - சோலையின்கண் — அல் - இருள் — ஆர்ந்த - தங்கப்பெற்ற — காவலூர் - திருக்காவலூர்க்கு — காவல்ஆய - காப்பாகிய — காந்தையே - நங்கையே — மாலை - மயக்கத்தை — வாங்க - தீர்க்க — வந்தனன் - (உன்மகன்) பூமியில்வந்தனனாகி — மாலை - (வேத) ஒழுங்கை — தந்துபோயினான் - கொடுத்துப்போயினன் — வந்து - காற்றனது—மாயம் - தீமையாக—மாற - வேறுபடவே—தான்- தான் —மாய்அம் - கொல்லத்தக்கநீரையுடையகடலில்—ஏறிஏகினான் - ஏறிச் சென்றனன்.— வேலை - சமுத்திரத்தில் - உண்டும் — (தனது சேடன்பெரும்பாலும்) உண்ணப்பட்டவனாகியும் - ஆண்டு—அவ்விடத்தில்-அருள்—(தனது)கிருபையினால்—வேலை - அப்பொழுது—கை - கையினை—நல்கினான் - கொடுத்தனன்—ஈண்டு - இவ்வுலகத்தில்—இல் -(உன்)வீடாகிய—விண்டு - மலையில்— உயிர்த்தும்-(நீ)பெற்றும்—விண்டில் - மேகத்தில்—அடிஊன்றி - பாதத்தையூன்றி

—ஏறினன்- (வானுலகத்துக்)கேறிச் சென்றனன்.—பாலே-பாலேநிலத்தில்—புக்கு-புகுந்து—நோன் பகை - (ஏரோதனிடத் துண்டான) பெரும் பகையினது — பாலே - உரிமையை—நீக்கி - ஒழித்துக்கொண்டு— நோற்றனன் - (அப்போதவனைப்) பொறுத்தனன். — பாசம் - அன்பினால்— ஆய்ந்து - (திருவுளத்திற் றெளிந்து —பாசம் - பிசாசத்தை—வீக்கு - கட்டுகிற—பாசமாய் - கயிறாக—மாய்ந்தனன்-மரித்தனன்.—காலே -காலேமையிலெழும்—வேந்தன் - சூரியனை—ஒத்த - நிகர்த்த —நின்காலே - உன்னுடைய திருக்குமாரனது மேன்மையை—யார் - எவர்— அறிந்துஉளார் - அறிந்திருக்கிறவர்—எ-று.

(பொ-ரை.) இருண்ட சோலேசூழ்ந்த திருக்காவலூரைக் காக்கு நங்கையே! *மயக்கத்தைத் தீர்க்க உன்மகன் பூமியிலே வந்து †சத்தியவேத ஒழுங்கைத் தந்துபோயினன். ‡காற்றுனது கடலின்கட் கொடுமையோடு மாறினபோது அக்கடல்மே னடந்துபோனன். பின்ன ‖ ரக் கடலில் நடந்துவந்த விராயப்ப ரதி லமிழ்ந்திப்போக விருந்த சமயத்திற் கிருபையாற் றன்கையை நீட்டி யவரைக் காப்பாற்றினன். நீயிவ்வுலகத்திலவனை யொரு §மலேவீட்டிற் பெற்றும் ¶மேகத்திற் கால்வைத் தேறி வானுலகத்திற்குச் சென்றன். **எரோதன் தன்னைப் பகைத்துக் கொல்லநினைத்த காலத்தி லதனைப்பொறுத்துக்கொண்டு பாலேநிலத்திற் புகுந்துக்கொடுமையை நீக்கிக்கொண்டான். அன்பினற் றிருவுளத்திற் றெளிந்து பேயைக் கட்டுங்கயிறாக ††மரித்தான். சூரியனை யொத்த நின்திருக்குமாரனது பெருமையை யாரறிந்துள்ளவ ரென்றவாறு.

1. மாயம் - வினைத்தொகையின் புறத்து வந்த அன்மொழித்தொகை.

2. "கால்" என்ற திங்கே யவனது பெருமைக்காதலால் ஆகுபெயர். (உஉ)

(வண்டு-நேரிசைவெண்பா.)

காந்தட்கைகஞ்சத்தாள் காவிக்கண்ணும்பல்வாய்
வேய்ந்தலர்ந்தகாவனலூர் [1]மென்கொடியே—யீந்த[2]மது
வுண்ணளிகாள்[3]சொன்மினீ ரொத்துளதோபூவுலகிற்
பண்ணளிபூந்தீந்தேன் பனித்து.

---

* அர்ச். மத்தேயு ஆ அதி. உக-ம்-வசனம்.

† அர்ச். மத். ரு-ம்-அதி. ரு-ம்-வசனமுதலான வற்றிற் காண்க.

‡ அர்ச். மத். கச-ம்-அதி. உச-உரு-ம்-வசனம்.

‖ அர்ச். மத். கச-ம்-அதி. உஅ-உகூ-ஙo-ஙக-ஙஉ-ம்-வசனம்.

§ அர்ச். லுக்கா-உ-ம்-அதி. எ-ம்-வச. தேம்பாவணி மகவருள்படலம் அங-அச-அரு-அஎ-ம்-கவி.

¶ அப்போஸ்தலர் நடபடிகள் ம. அதி. கூ-ம்-வசனத்திலும், தேம்பாவணி முடிசூட்டு படலம் கஙு-ம்- கவியிலுங் காண்க.

** அர்ச். மத். உ-ம்-அதி. கங-கச-கரு-ம்-வசனம்.

†† அர்ச். மத். உஎ-ம்-அதி. ருo-ம்-வசனம்.

(ப-ரை.) காந்தட்கை - கையாகிய காந்தட்பூவும் — கஞ்சத்தாள் - பாதங்களாகிய தாமரைப்பூவும் — காவிக்கண் - கண்ணாகிய நீலோற்பலப் பூவும்—ஆம்பல்வாய் - வாயாகிய செவ்வல்லிப்பூவும்—வேய்ந்து - அணியப்பட்டு — அலர்ந்த - மலரப்பெற்ற—காவல் நல்லூர் - நல்லதிருக்காவலூரிற் றங்கிய— மென்கொடி - (தேவமாதாவாகிய) மெல்லியகொடியானது — ஈந்த - (முற்கூறிய மலர்களாற்) றந்த —மது - தேனை—உண் - உண்கின்ற—அளிகாள் - வண்டுகளே— பூவுலகில்- பூலோகத்தின்கண்—ஈளி - குளிர்ச்சியை—பண் - செய்கின்ற — பூ - புட்பங்களிலுள்ள—தீ - மதுரம்பொருந்திய — தேன் - தேனானது — ஒத்துஉளதோ - (இத்தேனை) யொத்திருக்கின்றதோ—பனித்து - வருந்தி—சொல்மினீர்- சொல்லுக.— எ-று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) கையாகிய காந்தட்பூவும் பாதங்களாகிய தாமரைப்பூவுங் கண்களாகிய குவளைப்பூவும் வாயாகிய செவ்வல்லிப்பூவும் பொருந்தி மலரப்பெற்ற திருக்காவலூர்த் தேவமாதாவாகிய மென்கொடியானது அம்மலர்களாலே தருந்தேனையுண்ணும் வண்டுகளே! குளிர்ந்த மலர்களிலுள்ள வினியதேனான தித்தேனை யொத்திருக்கின்றதோ? வருந்தி யாராய்ந்து சொல்வீராக வென்றவாறு.

1. தேவமாதாவை மென்கொடியென் றுருவகஞ் செய்தமையால் அதற்கியைய 2. "மது" வென் றதவள்செய்யு நன்மையை யெனக்கொள்க.

3. மினீர் என்னும் விகுதி ஏவற்பன்மையில் வருதலைத் தொன்னூல் விளக்கம்-சுகூ-ம்- சூத்திரத்திற் காண்க. (உரு)

(நேரிசையகவற்பா.)

பனிமதுப்பதுமந் தன்னிகன்மறந்து
குனிமதிப்பிறைமேற்கொங்குமிழ்ந்தலரவுந்
தொல்லையந்தற்பகையொழிந்துசூடொழிந்
தெல்லையுமென்னுளத்திளம்பனிவீசவுந்
தொற்பகைப்பரிதிசுடரமுன்றோலா
[1]நற்பகனண்ணியவுடுவொளிநல்கவு
மவையொருங்கணிதேவருங்கொடியலரிருச்
சுவையொருங்கமைகனிசுமந்துயர்நிமிரவும்
பெருந்திருக்கலாபப்பீலிகளாடு
மருந்திருக்காவலூரகத்துக்கண்டேன்
கண்டுளம்பிணித்துகுங்[2]கனிதே
னுண்டுளம்பிரிவினியுழியு[3]மரிதே.

(ப-ரை.) திரு - அழகிய— பெருங்கலாபம் - பெரியதோகையையுடைய — பீலிகள் - மயில்கள்—ஆடும் - அகவும்—அரும் - அருமையான — திருக்காவலூர்

அகத்து - திருக்காவலூரினிடத்து—பனி - குளிர்ச்சிபொருந்திய—மது - தேனையு டைய—பதுமம் - தாமரையானது—தன் - தன்னுடைய—இகல் - பகையை—மற ந்து - மறந்துபோய்—துனி - வளைந்த—மதி - சந்திரனாகிய—பிறைமேல் - பிறை யின்மேல்—கொங்கு - வாசனையை—உமிழ்ந்து - வீசி — அலரவும் - மலரவும்— எல்லையும் - சூரியனும்—அம் - அழகிய—தன் - தன்னுடைய—தொல்லை - பழைய —பகை - (பாம்பினது) பகையை—ஒழிந்து - நீங்கி—சூடு ஒழிந்து-சுடுதல் நீங்கி —என் உளத்து - என்னுடைய மனத்தில்—இளம்பனி - இள்மைபொருந்திய குளி ர்ச்சியை—வீசவும் - எறிப்பவும்— தொல் - பழமையாகிய — பகை - பகையையு டைய—பரிதி - சூரியன்—சுடர - ஒளிவிட—முன் - (அதன்)முன்னே—தோலா- தோற்காமல்—நற்பகல் (அந்த) நல்லபகலில்— நண்ணிய - பொருந்திய — உடு - நக்ஷத்திரங்கள்—ஒளி - பிரகாசத்தை—நல்கவும் - தரவும்—அவை ஒருங்கு - அவ ற்றையெல்லாம் — அணி - தரித்த—அரும் - அருமையான—தேகொடி-தேவகொ டியானது—அலர் - (தன்)மலரானது—இரு-அழியாமல் — சுவை ஒருங்கு - ருசி யெல்லாம்—அமை - தங்கிய—கனி - ஒரு கனியை—சுமந்து - தாங்கி—உயர்- மேலே—நிமிரவும்-உயரவும்—கண்டேன்- (நான்) பார்த்தேன்.—கண்டு - (அப்ப டி) கண்டு—உளம் - (என்) மனத்தை—பிணித்து - (அது) கட்டி— உகும் - சொ ரியும்—கனிதேன் - (அக்)கனியின்றேனை—உண்டு - உண்டேன்.—இனி - இனிமே ல்—உளம் - என்னுள்ளமானது—ஊழியும் - யுகமுடிவிலும் — பிரிவு அரிது - (அ தைப்)பிரிதலில்லை யென்றவாறு.

(பொ-ள.) பெரிய மயில்களாடாநின்ற திருக்காவலூரினிடத்தே தாமரையானது தன் பகையை மறந்து பிறையின்மேல் வாசனைவீசி மல ரவும் சூரியனுந் தன்மேற் பாம்பின்பகையில்லாமைபெற்றுச் சுடுதலைவி ட் டென் மனத்தி விளங்குளிரா வீசவும் தம்பகையாகிய சூரியன் கதிர்வி ட்டு விளங்கும்போதே யதன்முன்னே தோற்றுப்போகாமல் அந்த நல லபகலிலே தங்கிய நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கவும் அவற்றையெல்லாந் தரித்த வோரருமையுள்ள தேவகொடியானது தன்மலரழியாமற் சுவை யெல்லா மமைந்த வோர் கனியைத் தாங்கி மேலே நிமிரவுங் கண்டேன். அப்படி நான் பார்த் தென்மனத்தை யப்பாற்போகாமற் கட்டி அதுபொ ழியுங் கனியின்றேனை யுண்டேன். இனியென்மன மூழிக்காலத்திலு ம தைப்பிரிவதில்லை யென்றவாறு.

1. "நற்பகனண்ணிய வுடுவொளிநல்கவும்" என்பது அடுத்த வுடுவாகிய ந க்ஷத்திரங்கள் நல்ல பிரகாசத்தைத் தரவும் என்றேனும், நல்லவொளி பொருந் திய நக்ஷத்திரங்கள் பிரகாசத்தைத் தரவும் என்றேனும் பொருள் கொள்ளவும் பெறும்.

2. "கனி" என்றது இங்கேயுயர்திணையை யுணர்த்தி நிற்றலாற் கனித்தேனெ ன மிகாதியல்பாயிற்று.

3. இங்கே அரிது என்பது இல்லையென்னும் பொருளில் வந்தது. இச்செய் யுள் ஒட்டலங்காரத்தாற் கூறப்பட்டமையால் தேவருங்கொடி யென்றது தேவ

மாதானவயெனவும், அலரிருவென்றது கன்னிமை கெடாமையை யெனவும், க னியென்றது தேவசுதனையெனவும், கனிதேனென்றது தேவசுதனது கிருபையை யெனவுங்கொள்க. (உச)

(குறம்-எழுசீரடியாசிரியச்சந்தவிருத்தம்.)

[1]அரித்தையறிந்ததிடத்தையறைந்தகுறத்தியருங்குறமம்மேகேள்
வரித்தனவண்டணிபற்றியவங்கைவரிக்குறி[2]கண்டுழிகாவனலூர்
தரித்தவணங்குமிதித்தெழுதிங்கடரித்தபதந்தொழுகையேநாப்
பரித்தவணங்கியபற்றளவொண்பொருள்பற்றியொருங்குயிர்வாழ்வாயே.

(ப-ரை.) அம்மே - அம்மா—அரித்தை - பச்சைகுத்துதலை — அறிந்த - தெரிந்த—திடத்தை - மெய்யை—அறைந்த - சொல்லிய — குறத்தி - குறத்தியாகிய என்னுடைய — அருங்குறம் - அருமையாகிய குறத்தை — கேள் - கேளாய்.—வரி - எழுத்துகளையுடைய — தனம் - பொன்னாலாகிய — வண்டு - வளைக ளாகிய—அணி - ஆபரணங்கள்—பற்றிய - பொருந்திய — அம் - அழகிய—கை - கையிலுள்ள—வரி - இரேகைகளாகிய—குறி - குறியை—கண்டுழி - பார்த்தவிடத்து—காவல்நல்லூர் - திருக்காவலூரிலே—தரித்த - தங்கிய — அணங்கு - தெய் வப்பெண்ணினுடைய—எழு - (வானில்)எழுகின்ற—திங்கள் - சந்திரனை— மிதித்து - மிதித்து—தரித்த - (அதன்மேல்) தங்கிய—பதம் - பாதங்களை— தொழு - கு ம்பிடுகின்ற—கையே - கரங்களேயிவை—நா - உனதுநாவானது — பரித்த - (அவ ளது புகழைத்) தாங்கிய—வணங்கிய - (நின்சிரம் அவளை) வணங்கிய— பற்று அ ளவு - (உனது) அன்பினளவாக — ஒண்பொருள்ஒருங்கு - நன்மைப்பொருள் களையெல்லாம்—பற்றி - கைக்கொண்டு—உயிர்வாழ்வாய்- உயிர்வாழப்பெறுவாய். எ-று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) அம்மே! பச்சைகுத்தத் தெரிந்தவளு முண்மையைச் சொல்லி வந்தவளுமாகிய குறத்திநான் சொல்லு மருமையான குறத்தை க்கேள். சித்திரவேலைகள் செய்த பொன்வளையலணிந்த நின்கையிலுள்ள ரேகைக்குறி பார்த்தபோது வானத்திலெழுஞ் சந்திரனை மிதித்த திருக்கா வலூர் நாயகியின் திருமலர்ப் பாதங்களைக் கும்பிடுங் கைகளேயிவை. உ ன்னுடைய நாவுஞ் சிரமும் புகழ்ந்து வணங்கிய வன்னசையினளவாக நீ நன்மைப் பொருள்களனைத்தையும் பெற்று உயிர்வாழ்வா யென்றவாறு.

1. அரித்து - என்பது அதனைக் குத்தும தொழிலுக்காதலாற் காரிய வாகு பெயர்.

2. கண்ட என்பதில் அகரம் விகாரத்தாற் றொக்கது. (உரு)

(கட்டளைக்கலித்துறை.)

வாழாவழங்காவினைக்கடனிந்தா வருந்துவிர்கா
டாழாதிருக்காவலூர்சென்[1]றனுக தழங்கியநீ

ராழார்கலிக்களவுண்டேனுமில்லை யமரர்தொழுங்
கேழாரடியணங்[2]கின்புறுங்கேண்மை கிளர்கடற்கே.

(ப-ரை.) வாழா - வாழாமலும்—வழங்கா - பிறருக்குக்கொடாமலும்—வினைக்கடல் - தீவினையென்னுங்கடலை—நீந்தா- நீந்திக்கடவாமலும்—வருந்துவீர்காள்- வருத்தப்படுகிறவர்களே—தாழா - தாமதியாமல்—திருக்காவலூர் - திருக்காவலூரில்—சென்று - போய்—அணுக - அதையாளு நாயகியினுடைய பாதங்களைச் சேருங்கள்—தழங்கிய - ஒலிக்கின்ற—நீர் - நீரையுடைய—ஆழ் - ஆழ்ந்த— ஆர்கலிக்கு - சமுத்திரத்திற்கு—அளவு - பிரமாணம்— உண்டு ஏனும் - உண்டாயினும்—அமரர் - வானவரால்—தொழும் - வணங்கப்படும்— கேழ் ஆர் - ஒளிபொருந்திய—அடி - பாதங்களையுடைய—அணங்கு - அத்தேவமாதினது—இன்பு- பேரின்பம்—உறும் - மிகும்—கேண்மை - உறவினால்—கிளர் - எழுகின்ற—கடற்கு - கடலுக்கு—இல்லை - (அள) வில்லை—எ-று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) உண்டு வாழாமலும் பிறர்க்கீயாமலுந் தீவினையென்னுங்கடலைக் கடவாமலும் வருத்தப் படுகின்றவர்களே! விரைவாகத் திருக்காவலூரிற்போய் அதனையாளு நாயகியின் திருவடிகளைச்சேருங்கள். ஆழமுள்ள நீர்க்கடலுக் களவுண்டாயினும் வானவரால் வணங்கப்படும் பாதங்களையுடைய வத்தேவமாதினுறவான் மிகும் பேரின்பக்கடலுக் களவில்லையாதலாலென்றவாறு,

1. அணுக - என்பது வியங்கோட்பொருளில் வருதற் கிலக்கணம் இவ்வாசிரியர் செய்த செந்தமிழிலக்கணம்-௩௭-ம் இலக்கத்து இரண்டாம் பிரிவினும், மேற்கோள் - கித்தேரியம்மா ளம்மானை மணமறுத்த காதை ௫, ௧௨௫, ௧௩௨ - ம்-தொடைகளினுங் காண்க.

2. "இன்புறுங்கேண்மை" என்றதனாற் "கடல்" என்றது இன்பக்கடல் என்பது பெற்றாம். (௨௬)

(நேரிசைவெண்பா.)

கடற்கரை[1]சூழ்காணுக் கருத்தழிக்கும்பாவ
வுடற்கரைசூழாவி யுளைவீர்—மிடற்கரைகொண்
டாவலூர்வான்கதிசேர்ந் தாங்குவப்பீர்நாயகிசேர்
காவலூர்[2]சேர்ந்தக் கடை.

(ப-ரை.) கடல் - கடலைப்போல—கரை - எல்லை—சூழ் - சூழ—காணு-தோன்றுமல்—கருத்து - (நன்) னினைவை—அழிக்கும் - கெடுக்கின்ற— பாவம் - பாவத்தைக் கொண்ட—உடல் - சரீரமாகிய—கரை - கரையானது — சூழ் - சூழ்ந்த —ஆவி - பிராணன்—உளைவீர் - வருந்துபவர்களே—நாயகி - மோக்ஷராக்கினி — சேர் - சேர்ந்த—காவலூர் - திருக்காவலூரை—சேர்ந்தக்கடை - (நீங்கள்) சேர்ந்தவிடத்து—மிடல்கரை - உறுதிச்சொல்லை— கொண்டு - அடைந்து — ஆவல்ஊர் -

(எவர்) விருப்பமுஞ்செல்கின்ற— வான்கதி - மோக்ஷகதியை— சேர்ந்து - அடைந்து— ஆங்கு - அவ்விடத்தில்— உவப்பீர் - (நீவிர்) மகிழ்வீர்கள் எ-று.

(பொ-ரை.) கட்டைப்போ லெல்லைகொண் டில்லாமல் நன்னினைவைக்கெடுக்கும் பாவத்தைக்கொண்ட வுடலைப்பெற்ற வுயிரானது வருந்தப்பெற்றவர்களே ! நீவிர் மோக்ஷராக்கினிசேர்ந்த திருக்காவலூரைச் சேர்ந்தா லிம்மைமறுமையிற்பயக்கும் ஞானபோதம்பெற்று மோக்ஷமடைந் தங்கே மகிழ் வீர்களென்றவாறு.

1. சூழ் என்பது "கன்னிமனஞ்சூழ்கிடந்தானென்னும்" என்பதில் சூழ் என்பதைப்போல வினையெச்சப் பொருளில் வந்த முதனிலைத்தனிவினை.

2. சேர்ந்தக்கடை என்பது - "துவ்வாமை வந்தக்கடை" என்பதுபோல வந்த வினையெச்சமாதலின் விகுதியின் ககரமெய் யிரட்டித்தது. (உஎ)

(ஆசிரியச்சந்தவிருத்தம்.)

கடைந்தமணியணிகடந்தவடிவொளி கலந்தவுருவொடுநீபயந்
தடைந்ததிருமகனகன்றபொழுதுயி ரகன்றவுடலெனநோவவுள்
ளுடைந்தவுனதிடருணர்ந்துநமதிட ருழங்கலொழியியகாவலூர்
மிடைந்தவருணலம்விளைந்ததிருமகன் மிளிர்ந்தவடிவடி 1 காட்டவே.

(ப-ரை.) காவலூர் - திருக்காவலூரை— மிடைந்த - நெருங்கிய— அருள் - அருளே—கடைந்த - கடைதலிட்ட—மணி - ரத்தினங்களினது—அணி- அழகை— கடந்த - வென்ற—வடிவு - அழகுடன்—ஒளி - காந்தியும்—கலந்த - கூடிய— உருவொடு - உருவத்தோடு—நீபயந்துஅடைந்த - நீயீன்றடைந்த—திருமகன் - திவ்வியகுமாரன்— அகன்றபொழுது - (மூன்றுநாளுன்னை) நீங்கியிருந்தபொழுது—உயிர்அகன்ற - உயிர்நீங்கிய—உடலென - சரீரத்தைப்போல—நோவ - வருந்த—உள்உடைந்த - மனமுடைந்த—உனதுஇடர் - உன்னுடையதுன்பத்தை—உணர்ந்து - ஓர்ந்து— நமது - எம்முடைய—இடர் - துன்பமும்— உழங்கல் - கலக்கமும்—ஒழியிய - ஒழிய— நலம் - பேரின்பம்—விளைந்த - (பூமியி) லுண்டானதற்கேதுவான—திருமகன் - (அவ்வுன்) திருக்குமாரனுடைய—மிளிர்ந்த - பிரகாசித்த—வடிவு - அழகினையுடைய—அடி - பாதங்களை—காட்ட - காட்டுக எ-று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) திருக்காவலூரி லருளுருவமாக வெழுந்தருளியதாயே! கடைந்தெடுத்த விரத்தினங்களினு மிக்கவழகு மொளியுந்தங்கிய வுருவத்தோடு நீபெற்றருளிய திருக்குமாரன் * மூன்றுநா ளுன்னைப்பிரிந்திருந்தபொழுது (உயிரில்லாத உடலைப்போலாய் மனமுடைந்து) நீகொண்டதுன்பத்தை நினைந்து, எம்மைவருத்துந் துன்பமுங் கலக்கமு நீங்கப் பூமியிலே நன்மையைவிளைத்த வவ்வுன் றிருமகனுடைய வொளிவுள்ள திருவடித்தாமரைகளை நீகாட்டுக என்றவாறு.

* அர்ச். லூக்கா - உ - அதி. சங, சச, சரு, சகூ-வசனம்.

1. காட்ட வென்பது வியங்கோட்பொருளில் வந்தது. (உஅ)

(கட்டளைக்கலிப்பா.)

காட்டி 1 னிற்பினுமூவுலகேந்தியகையிலேயடைநின்மகனேந்தியன்
பூட்டியின்சுவையாகவையாயிர ருண்டுவாழவிருந்துவழங்கினு
னாட்டிலாண்டுநின்காவலிதாகவே நாகுதிங்களணிப்பணிதாளியுன்
வீட்டிலென்னைவிளித்தொரு 2 நாளையோர் விருந்தளிப்பவெனக்கிரங்
[காய்கொலோ.

(ப-ரை.) நாகு - இளமைபொருந்திய—திங்கள் - சந்திரனாகிய— அணி-அழகுபொருந்திய—பணி - அணிகலத்தையுடைய—தாளி - பாதத்தையுடைய தாயே— நின்மகன் - உன்னுடைய திருக்குமாரன்— காட்டில் - வனத்தில்—நிற்பினும் - (முன்) நின்றாலும்—மூவுலகு - மூன்றுலகங்களையும்— ஏந்திய-தாங்கிய—கையில் - கரத்தில்— அடை - அப்பங்களை—ஏந்தி - தாங்கி— இன்சுவை - இனியசுவை— ஆக - அவற்றிலுண்டாக— ஐயாயிரர் - ஐயாயிரம்பெயர்—உண்டு - புசித்து—வாழ - வாழும்படி— அன்பு-தயையுடன்—ஊட்டி - உண்பித்து—விருந்துவழங்கினான் - விருந்திட்டான்— நின்காவல் - உனதுதிருக்காவலூர்— இதுஆக - இதுவாக— நாட்டில் - நாட்டிலிருந்து—ஆண்டும்- (நீ) அரசாட்சிசெய்தும்—நின்வீட்டில் - உனதுவீட்டில்— ஒருநாளை - ஒருதினத்திற்கு— என்னைவிளித்து - என்னையழைத்து— எனக்கு - என்றனக்கு—ஓர் விருந்து அளிப்ப - ஒருவிருந்திட—இரங்காயோ - இரங்கமாட்டாயோ எ-று. ஏகாரம் இரண்டும், கொல் ஒன்றும் அசைகள்.

(பொ-ரை.) பிறையைக் காலணியாகக்கொண்ட தேவதாயே ! உன்னுடைய திருக்குமாரன் முன்னே காட்டிலே நின்றிருந்தாலுந் திரிலோகங்களையுந் தாங்கிய தன்கையி லப்பங்களையேந்தி யவற்றி லினியசுவைதோன்ற * வையாயிரம்பெய ருண்டுவாழும்படி யன்போடூட்டி விருந்திட்டான். உனது திருக்காவலூரிதுவாக நீநாட்டிலிருந் தரசாட்சிசெய்துவரும்போது மொருநாளைக்கென்னை யுன்வீட்டுக்கழைத் தெனக்கோர்விருந்து செய்யவிரங்காயோ? என்றவாறு.

1. நிற்பினும் என்பது "நினைப்பினும் பனிக்கு முள்ளம்" என்பதுபோல விறந்தகாலத்தில் வந்தது. செந்தமிழிலக்கணம் - சசும் - இலக்கத்து - ரு-ம் பிரிவிற்காண்க.

2. நாளையென்பதில் ஐகாரம் சாரியை: வேற்றுமை மயங்கிவந்த தெனினும் அமையும். (உகூ)

(இரங்கல் - எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

இரங்கொழியாவினைக்கடலைநீந்தவுன்னன்
பெனுமிதவையேறிமறைவிளக்கேநோக்கி

* அர்ச். மத்தேயு - கச - அதி. கசு, உ0, உக - வசனம்.



நெருங்கொழியாவவாவிரவினீந்தியப்பா
லியாளுந்திருக்காவலூர்சென்றின்ப
மொருங்கொழியாமனத்திருளேயொழிந்துமேல்வா
ழும்பர்நாட்டெழுங்கரையைக்கண்டேனென்றேன்
மருங்கொழியா1வாதவனுமதியுமீனும்
வனைந்தணிந்தவுன்வடிவங்கண்டபோதே.

(ப-ரை.) என்தேன் - என்னுடையதேனே— நீயாளும் - நீயரசாட்சிசெய்யும்— திருக்காவலூர்சென்று - திருக்காவலூரில்நடந்து— மருங்கு - இடையில்—ஒழியா - நீங்காமல்—ஆதவனும் - சூரியனை— வனைந்து - (உடையாகத்) தரித்து— மதியும்மீனும் - சந்திரனையுநக்ஷத்திரங்களையும்—அணிந்த - (காலணிசிரவணிகளாகப்) பூண்ட—உன்வடிவம்-உனது (திருவரு) ளுருவத்தை—கண்டபோதே - பார்த்தபொழுதே— நெருங்கு - (அஞ்ஞான) நெருங்கிய—ஒழியா - நீங்காத— அவா இரவில் - ஆசையென்னுமிராத்திரியில்— இரங்கு- அழுதற்கேதுவாகிய— ஒழியா - நீங்காத—வினைக்கடலை - பாவமென்னுங்கடலை— நீந்த - கடக்க— உன் - உனது—அன்பெனும்-தயையென்கிற— மிதவையேறி - தெப்பத்திலேறி— மறைவிளக்கே - வேதமென்னும்விளக்கையே—நோக்கி - பார்த்து— நீந்தி - அக்கடலைக்கடந்து— அப்பால் - அப்புறம்— இன்பம்ஒருங்கு - பேரின்பத்தையெல்லாம்—ஒழியா - நீங்காமல்—மனத்துஇருளே - மனவிருளைமாத்திரமே— ஒழிந்து - நீங்கி—மேல் - இனி—வாழ் - (நான்) வாழவிருக்கும்— உம்பர்நாட்டு-வானுலகநாட்டுக்கு—எழும் - செல்லுதற்கான— கரையை - கரையை— கண்டேன் - பார்த்தேன் எ - று. விளக்கே என்பதில் ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) எனக்குத் தேனுகவிருக்கிறதேவதாயே ! நீயாளுந்திருக்காவலூரிலே நான்வந்து இடையில் நீங்காமற் சூரியனையுடையாகவுஞ் சந்திரனைக்காலணியாகவும் நக்ஷத்திரங்களைச் சிரவணியாகவு மணிந்த உனது திருவருளுருவத்தைக் கண்டபொழுதே யஞ்ஞானமடர்ந் தொழியாத வவாவென்னு மிராத்திரியிலே யுன தருளென்னுந் தெப்பத்திலேறிச் சத்தியவேதமென்னும் விளக்கைக்கண்டு துன்பஞ்செய்யும் பாவக்கடலைக்கடந் தப்பால் பேரின்பங்கொண்டு மனவிருளினீங்கி நானினிவாழு மோக்ஷத்திற்குப் போதற்கானகரையைக் கண்டேனென்றவாறு.

1. இங்கே உம்மை எண்ணும்மை. கூ-ம் - பாட்டிற்காண்க  (௩௭)

(தழை - கட்டளைக்கலித்துறை.)

போதவிழ்பூங்கொடியாய்ச்செங்கதிர்பூண்டாள் பொற்றழையா
மீதவிழ்மீன்றழையாக்கொண்டாண்மஞ்ஞையாய் வெண்மதியைத்
தாதவிழ்தாமரைத்தாட்டழையாவுற்று டாயரசாள்
சீதவிழ்முத்தழைநீழலிற்காவலூர் சேர்த்ததுவே.

(ப-ரை.) தாய் - எமக்குத்தாயாகிய—அரசாள்-திருக்காவலூர் நாயகியானவள்— போதுஅவிழ் - (தான்) பருவத்தில்மலர்ந்த—பூங்கொடியாய் - புட்பக்கொடியாக—செங்கதிர் - சூரியனை—பொன் - அழகிய—தழையா - (அதிலுள்ள) இலையாக—பூண்டாள் - அணிந்தாள்— மஞ்ஞையாய் - (தான்) மயிலாக— மீது - மேலே— அவிழ் - (ஒளி) விரியப்பெற்ற—மீன்-நக்ஷத்திரங்களை—தழையா - (அதன்) தோகையாக—கொண்டாள் • பெற்றனள்—தாள் - (தன்னுடைய) பாதம்—தாது - மகரந்தப்பொடிகளையுடைய—அவிழ் - மலர்ந்த—தாமரை - தாமரைமலராக—வெள்மதியை - வெள்ளியசந்திரனை—தழையா- அதன்கீழுள்ளதளிராக—உற்றாள் - அடைந்தாள்— சீதம் அவிழ்-குளிர்ச்சிவிரியப்பெற்ற— முத்தழை - இம்மூன்றுதழைகளினுடைய— நீழலில் - நிழலில்—காவலூர் - திருக்காவலூரானது— சேர்த்தது - சிறப்புற்றது எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) எமக்குத்தாயான திருக்காவலூரரசியானவள் தான்சூரியனை யிலையாகக்கொண்ட வோர் பூங்கொடியாகவும் நக்ஷத்திரங்களைத் தோகையாகக்கொண்ட வோர் மயிலாகவுஞ் சந்திரனைத் தளிராகக்கொண்ட தாமரைமலர்ப்பாதமுடையவளாகவு மிருக்கின்றாள். குளிர்ந்த விம் மூன்றுதழைகளி னிழலிலே திருக்காவலூர் சிறப்புற்ற தென்றவாறு.

I. சீதமென்ப திங்கேகடைகுறைந்து வந்தது. (௩௧)

(அம்மானை - தாழிசை.)

சேர்த்ததிருக்காவனலூர்த் தேவணங்குதாட்கமல
நீர்த்ததிருத்திங்கண்மே னின்றன 1 காணம்மானை
நீர்த்ததிருத்திங்கண்மே னின்றனவென்றாமாகி
லார்த்ததிருவண்டுவெப்ப வாங்கலராவம்மானை
போர்த்ததிருச்சோதியின்பப் போதலருமம்மானை.
போதலருந்தண்சினைக்காப் பூங்காவலூரரசி
யாதவனைத்தூசா யணிந்தனள்காணம்மானை
யாதவனைத்து 2 சா யணிந்தனளென்றாமாகின்
மாதலர்பூமேனிநலம் வாடாதோவம்மானை
மாதருணீர்மூழ்கிரவி வாய்குளிருமம்மானை.
வாய்குளிர்பூங்காவனலூர் வாழவரம்பெய்யிறைவி
மீகுளிர்வாய்மீன்முடியை வேய்ந்தணிந்தாளம்மானை
மீகுளிர்வாய்மீன்முடியை 3 வேய்ந்தணிந்தாளாமாகிற்
றாய்குளிர்வாய்மீன்கதிர்முன் றேன்றுமோவம்மானை
தாய்குளிர்வாய்ச்சார்ந்தார்க்குத் தாழ்வில்லையம்மானை.

(ப-ரை.) சேர்த்த-செல்வம்பொருந்திய—திருக்காவல்நல்லூர் - நல்லதிருக்காவலூரிலெழுந்தருளிய— தேஅணங்கு-தேவப்பெண்ணினுடைய—தாள்-பா

தங்களாகிய—கமலம் - தாமரைமலர்கள்—நீர்த்த-குணம்பொருந்திய—திரு-அழகிய—திங்கள்மேல்-சந்திரன்மேல்—நின்றனகாண் அம்மானை - நின்றனகாணம்மானை—நீர்த்ததிருத்திங்கண்மேல் நின்றனஎன்ளும் ஆகில்-குணம்பொருந்திய அழகியசந்திரன்மேல் நின்றனவென்று சொன்னோமாகின்—ஆர்த்த-ஒலித்த—திரு - அழகிய—வண்டு - வண்டுகள்— உவப்ப - களிக்க— ஆங்கு - அவ்விடத்தில்— அலரா அம்மானை - மலராதனஅம்மானை— போர்த்த - (அவள் ஆடையாகப்) போர்த்துக்கொண்ட—திருச்சோதி - அழகியசூரியனால்—இன்பம் - இன்பஞ்செய்யும்—போது - (அத்) தாமரைமலர்கள்— அலரும் அம்மானை - மலரும் அம்மானை.

போது - பருவத்தரும்புகள்—அலரும் - மலரும்—தண் - குளிர்ச்சிபொருந்திய—சினை - கிளைகளையுடைய—கா - சோலைகளைக்கொண்ட—பூ - பொலிவாகிய— காவலூர்அரசி - திருக்காவலூர்நாயகி— ஆதவனை - சூரியனை— தூசாய் - ஆடையாக— அணிந்தனள்காண்அம்மானை - உடுத்திக்கொண்டனள்காணம்மானை— ஆதவனைத் தூசாயணிந்தனள் என்ளும் ஆகில் - சூரியனையுடையாக வுடுத்திக்கொண்டனளென்று சொன்னோமாயின்— மாது - அந்நங்கையினது—அலர்பூ - அலர்ந்தபூவையொத்த—மேனிநலம் - திருமேனியின்சீர்—வாடாதோ அம்மானை - வாடிப்போகாதோ அம்மானை—மாது - (அவ்) வணங்கினது— அருள்நீர் - கிருபையென்னும்நீரில்— மூழ்கு - முழுகிய— இரவி-சூரியன்— வாய் - அவ்விடத்தில்—குளிரும் அம்மானை - குளிர்ச்சியைப்பெறும் அம்மானை.

வாய் - இடமெல்லாம்— குளிர் - குளிர்ந்த— பூ - பொலிவுள்ள—காவல் நல் ஊர் - நல்லதிருக்காவலூரில்— வாழ - (தன்னையடுத்தவர்) வாழும்படி—வரம் பெய் - வரத்தைப்பொழிகின்ற— இறைவி - இராக்கினியானவள்—மீ - ஆகாயத்திலுள்ள— குளிர்வாய் - குளிர்ச்சிபொருந்திய—மீன்முடியை - நக்ஷத்திரமுடியை—வேய்ந்து அணிந்தாள் அம்மானை - பூண்டணிந்தாள் அம்மானை— மீகுளிர்வாய் மீன்முடியைவேய்ந்து அணிந்தாள் ஆகில் - வானத்திலுள்ள குளிர்ச்சிபொருந்திய நக்ஷத்திரமுடியை யணிந்தாளாயின்— தூய் - பரிசுத்தமான— குளிர்வாய் - குளிர்ச்சிவாய்ந்த—மீன் - (அந்த) நக்ஷத்திரங்கள்— கதிர்முன் - (அவளதுபோர்வையாகிய) சூரியனுக்குமுன்னே—தோன்றுமோ அம்மானை - தெரியுமோ அம்மானை—தாய் - அவ்வன்னையினது—குளிர் - குளிர்ந்த—வாய் - இடத்தை—சார்ந்தார்க்கு - அடைந்தவர்க்கு—தாழ்வு இல்லை அம்மானை-குறைவில்லைஅம்மானை எ-று. ஆம் அசை.

(பொ-ரை.) செல்வம்பொருந்திய நல்லதிருக்காவலூரி லெழுந்தருளிய தெய்வப்பெண்ணினுடைய பாதமாகிய தாமரைமலர்கள் அழகிய பிறையின்மேல் இருக்கின்றனவம்மானை. பிறையின்மேலிருக்கின்றனவென்றோமாயின், அவை வண்டுகள்களிக்க வங்கேமலராதனவம்மானை. அவள்போர்த்துக்கொண்ட வழகியசூரியனா லவ்வின்பஞ்செய்யுந் தாமரைமலர்கள் மலருமம்மானை.

அரும்புகள்மலருங் குளிர்ந்த சினைகளைக்கொண்ட பூஞ்சோலைசூழ்ந்த திருக்காவலூர்நாயகி சூரியனையுடையாக வணிந்தாளம்மானை. சூரியனையுடையாக வணிந்தாளாயின், அவளது மலரையொத்த திருமேனி வாடாதோவம்மானை? அவளதருளென்னு நீரில்மூழ்கியசூரிய னவ்விடத்திற் குளிருமம்மானை.

எவரும் வாழும்படி திருக்காவலூரில் வரத்தைப்பொழிகின்ற விராக்கினி குளிர்ந்தநக்ஷத்திரமுடியை யணிந்தாளம்மானை. குளிர்ந்தநக்ஷத்திரமுடியை யணிந்தாளாயின் நக்ஷத்திரங்க ளவள்போர்த்த சூரியன்முன்னே தோன்றுமோவம்மானை? இந்தத்தாயினது குளிர்ந்ததலத்தைச்சேர்ந்தவர்கருக்குறைவில்லை யம்மானை என்றவாறு.

1. காண் என்பது "அலியலர்காணம்மானை" "நற்புந்தியல்லைகாண்" "முகக்குறிநன்றுகாண்" "கொன்றூன்காண்புரமூன்றுங் கூட்டோடேசாழலோ" என்பவற்றிற்போல - முன்னிலையொருமையொடு பேசுங்கால்வரும் அசையிடைச்சொல்: காண் என்பதற்கு அறியெனப்பொருள் கூறினுமமையும்.

2. தூசாய் என்பது வினையெச்சத்திரிபு.

3. வேய்ந்தணிந்தாள் என்பது அடுக்கணியாய்ச் சிறப்பின்வந்த வொருபொருட்பன்மொழி. (௬௨)

(நேரிசைவெண்பா.)

1 மானெய்தான்வான்பெற்றான் வான்பெறான்காவலூர்
மானெய்தான்மானாய் வரம்பெற்றுத் - தானரியை
2 யானைமுனர்வைத்தீன்றா ளாயிரம்வாள்வேந்தனையோர்
தானையாக்கொண்டெழுந்தா ளான்.

(ப-ரை.) மான் - பெண்ணை—எய்தான் - அடையாதவன்—வான்பெற்றான் - மோக்ஷத்தையடைந்தான் (ஆயினும்)—காவலூர்மான் - திருக்காவலூரையாளும்பெண்ணை—எய்தான் - அடையாதவன்— வான்பெறான்-மோக்ஷமடையான் (எங்ஙனமெனில்)— தான் - அத்திருக்காவலூர்நங்கை—மானாய் - பெண்ணாகியும்—வரம்பெற்று - வரங்களைப்பெற்று—அரியை- (கடவுளாகிய) சிங்கத்தை—ஆன் - மாட்டினது—ஐ - அழகிய— முன்னர் - இடத்தில்—வைத்து ஈன்றாள் - ஈன்றுவைத்தவள்— ஆயிரம்வாள் - ஆயிரங்கிரணங்களையுடைய—வேந்தனை - சூரியனை—ஓர் - ஒரு— தானையா கொண்டு - ஆடையாக்கொண்டு— எழுந்தாள் - எழுந்தவள் எ-று. தான்—அசை.

(பொ-ரை.) பெண்ணையடையாதவன் மோக்ஷமடைந்தானென்றாலுந் திருக்காவலூராயாளும்பெண்ணி னருளையடையாதவன் மோக்ஷமடையாதவனே. எப்படியென்னி, லவளோர்பெண்ணாகியு மற்றமாதர்களைப்போ லல்லாம லளவில்லாத தேவவரங்களையடைந்து கடவுளாகிய

சிங்கத்தைமாட்டுக்கொட்டிலிலேபெற்றவள்; சஹஸ்த்ரகிரண சூரியனை யோருடையாக வணிந்தவ ளென்றவாறு.

1. மான் என்பவை உவமவாகுபெயர்கள். "மானெய்தான் வான்பெற்றான்" என்பதற்கிவ்வாறு பொருள்கூறாமல் "மானையெய்த வரின்னமென்மடமானையெய்திலர்" என்றாற்போல, மானையம்பினாலெய்த பிலாசி மோக்ஷமடைந்தானெனப்பொருள் கூறுதலுமொன்று.

2. ஆனைமுன்னவொன்பதில் ஐகாரத்தைச் சாரியையாகவாதல் உருபுமயக்கமாகவாதல் ஆக்கி, மாட்டுக்குமுன்னே யெனப்பொருள்கூறினு மமையும்.

(மடக்கு-அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தானாகத்தடங்காதாய் மேனாகத்தடங்காவார் 1 தனையன்றாயோ
டூனாகத்தானாகத் திழிந்துதவவெழுந்துதவ வுரிமைகாட்டி
வானாகத்தேனாகத் திருவரங்க 2 டருவரங்கே வந்தாரன்றோ
கானாகப்பூநாகத் தரும்புதிருவிரும்புதிருக் காவலூரோ.

(ப-ரை.) விரும்பு - (யாவராலும்) விரும்பப்படும்—திருக்காவலூரோ-திருக்காவலூரோ—மேல் - மேலாகிய—நாகத்து - வானத்திலும்—அடங்கா ஆர் - அடங்காமற்பொருந்திய— தனையன் - சுதனாகியசர்வேஸ்வரன்— தான் - தான்—ஆகத்து - சரீரத்துள்—அடங்காது ஆய் - அடங்காதவஸ்துவாகியும்—உதவ-(எமக்குநன்மையைத்) தர— நாகத்து - வானுலகினின்று— இழிந்து-இறங்கி—ஊன்-தசையுள்ள—ஆகத்தான் - (மனித) வுடம்பைக்கொண்டு—எழுந்து-(பூமியி) லவதரித்து—தாயோடு - (தன்) தாயுடனே—தவ - மிகவும்—உரிமை-உரியதன்மையை—காட்டி-காண்பித்து—வான் - வானுலகத்தார்க்கே—ஆகு-உரிமையான—அத்தேன் ஆக - அப்படிப்பட்டதேனைப்போல— திருவரங்கள் - திவ்வியவரங்களை—தருவர் - கொடுப்பவராக— அங்கே - அவ்விடத்தே—வந்தார்அன்றோ - வந்தனரன்றோ—கான் - வாசனை—ஆக - உண்டாக—பூ-பலமலர்களையும்—நாகத்து - புன்னையினுடைய—அரும்பு - (அலரும்பருவத்) தரும்புகளையும்—உதிரு - சொரிவாயாக எ - று.

(பொ-ரை.) எவரும்விரும்புந் திருக்காவலூரோ ! வான்முதலான வகன்றவிடங்களிலு மடங்காதவராகிய சுதனாகிய சர்வேஸ்வரன் தானொரு சரீரத்துள் ளடங்காதவரா யிருந்தும் நமக்குநன்மைசெய்யக்கருதி வானுலகத்தைவிட்டுப் பூமியிலே யொருமனுஷனாகப்பிறந்து தன் றாயுந்தானுமாக மிகவுமுரிமையைக்காட்டி வானுலகமிர்தமொத்த வரங்களை யார்க்குந் தருதற் கங்கேவந்தாராதலால் வாசனைவீசும்படி பலமலர்களையு மலரும்பருவத்துப் புன்னாகத் தரும்பையும் நீபொழிவாயாக வென்றவாறு.

1. தனையனென்னுமொருமை, சிறப்பினால், வந்தாரொன்னும் பன்மையோடு மயங்கிவந்தது.

2. தருவர் என்னும் வினைமுற், றிங்கே வினையெச்சப் பொருளில்வந்தது.

(மடக்கு-எண்சீரடியாசிரியவிருத்தம்.)

காவலகத்தாளுந்தேவமுகத்தாளுங்
கடவுளுயிர்த்தாளுமடவுளுயிர்த்தாளு
மோவலறுத்தாளுமாவல்வெறுத்தாளு
முலகுபுரிந்தாளுமலகுபரிந்தாளுந்
தேவவரத்தாளுங்கா 1 வகரத்தாளுந்
திசையையளித்தாளுநசையையொளித்தாளும்
பாவிகணித்தாளுமாவிபிணித்தாளும்
பண் 2 டினையற்றாளுந்தொண்டனையுற்றாளே.

1. (ப-ரை.) காவல் - திருக்காவலூராகிய— அகத்தாளும் - இடத்தையுடையவளும்—தேவன் - சுதனாகிய சர்வேஸ்வரனுக்கு—முகத்தாளும் - வாசஸ்தலமானவளும்— கடவுள் - அத்தேவனை—உயிர்த்தாளும் - ஈன்றவளும்— மடம் உள் - (மாதர்க்குள்ள) மடமைபொருந்திய மனத்தை—உயிர்த்தாளும் - விடுத்து நீங்கியவளும்— ஓவல் - வருந்துதலை— அறுத்தாளும் - அறுத்தவளும்— ஆவல் - (மூன்) றாசையையும்—வெறுத்தாளும் - அருவருத்தவளும்— உலகு- உயர்ந்தோரால்—புரிந்தாளும் - விரும்பப்பட்டவளும்— அலகு - (மேன்மையி) னளவை—பரிந்தாளும் - அறுத்தவளும்—தேவன் - கடவுளினுடைய—வரத்தாளும் - வரங்களைப்பெற்றவளும்—கா - (அபயந்தந்து) காக்கும்—அக்கரத்தாளும் - அந்தக்கையையுடையவளும்—திசையை - எந்தத்திக்கிலு முள்ளவர்களையும்—அளித்தாளும்-இரக்ஷித்தவளும்— நசையை-பாவக்குற்றத்தை—ஒளித்தாளும் - ஒளியச்செய்தவளும்—பாவி - பாவியாகியவென்னை— கணித்தாளும் - (காப்பாற்ற) வெண்ணினவளும்—ஆவி - என்பிராணனை—பிணித்தாளும் - (தன்பாதத்திலே) கட்டினவளும்—பண்டு - பழமையான— இனை - வருத்தத்தை— அற்றாளும் - நீங்கியவளு (மாகியமோக்ஷராக்கினி)— தொண்டனை - (அவள்) தொழும்பனாகியவென்னை—உற்றாள் - அடைந்தாள் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) திருக்காவலூரைத் தனக்கிடமாகவுடையவளுஞ் சுதனாகிய சர்வேஸ்வரனுக்குத் தானிடமானவளு மக்கடவுளை மகனாகப்பெற்றவளு மாதர்க்குள்ள மடமைக்குண மில்லாதவளு மனிதர் துன்பத்தையொழித்தவளு மூன்றாசையையும் வெறுத்தவளு முயர்ந்தோரால் விரும்பித் துதிக்கப்பட்டவளும் அளவில்லாத மேன்மையுடையவளுந் தேவவரங்களைப்பெற்றவளு மபயாஸ்தந்தருபவளு மெத்திசையிலுள்ளவரையும் அருள்வேதத்துள்ளாக்கி ரக்ஷித்தவளும் பாவமறையச்செய்தவளும் பாவியாகிய வென்னைக்காப்பாற்ற வெண்ணினவளும் என்பிராணனைத் தன்பாதத்திலே கட்டிவைத்தவளுந் தொன்றுதொட்டுள்ள சென்மபாவ

மில்லாதவளுமான தேவமாதா அவளடிமையான வென்னகத்தெழுந் தருளினு ளென்றவாறு.

1. அக்கரத்தாளு மென்பதிற் ககரமெய் விகாரத்தாற்றொக்கது.

2. இனை என்பது முதனிலைத்தொழிற்பெயர். (ருடு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தாளணிந்தமதிமுதலாத்தமியனுமக்கமலத்தாடாங்கிலேனோ[ணேனோ
1 கோளணிந்த குழலணிதார் குடைவண்டாப் புகழ்பாடி மதுவுண்
வாளணிந்தவினைப்படைவெல் வலிச்சிங்கமீன்றவொருமானாய்வந்தா
கேளணிந்தகாவனலூர்கிளர்புனத்துப்பசும்புல்லாக்கிடவேனோ. [ள்

(ப-ரை.) வாள் - வாளாக— வினை - தீவினையை— அணிந்த - தரித்த— படை - (பேய்ச்) சேனையை—வெல் - வென்ற— வலி - வல்லமைபொருந்திய—சிங்கம் - (கடவுளாகிய) சிங்கத்தை—ஈன்ற-பெற்ற—ஒருமானாய்-ஒருமானாகி—வந்தாள் - (இங்கு) வந்தவிராக்கினியினுடைய— தாள்-பாதங்களை—அணிந்த - தரித்துக்கொண்ட—மதி - சந்திரன்—முதலா - முதன்மையதாக— தமியனும் - (ஆதரவின்றித்) தனித்தநானும்— அ - அந்த—கமலம் - தாமரை மலர்களையொத்த—தாள்-பாதங்களை— தாங்கிலேனோ-தாங்கமாட்டேனோ— கோள் - நக்ஷத்திரங்களை—அணிந்த-தரித்த—குழல் - (அவளது) கூந்தலில்— அணி - தரிக்கும் — தார் - மலர்களை—குடை - துளைக்கின்ற—வண்டா - வண்டுகளாக— நான் - யான்— புகழ்பாடி - (அவளது) புகழைப்பாடி— மது - (அவற்றிலுள்ள) தேனை—உண்ணேனோ - அருந்தேனோ— கேள் - (அவளது) உறவை—அணிந்த - பூண்ட—காவல்நல்லூர் -நல்லதிருக்காவலூரில்—கிளர்- நிறைந்த—புனத்து - கொல்லையினிடத்து—பசும்புல்லா - ஓர்பசியபுல்லாக— கிடவேனோ - இரேனோ எ - று.

(பொ-ரை.) தீவினையென்னும் வாளைத்தரித்த பிசாசப்படையைவென்ற கடவுளாகிய வலியசிங்கத்தைப்பெற்ற வொருமானாகி யிங்கேவந்த விராக்கினியினுடைய பாதங்களை யணிந்துகொண்ட சந்திரன்முதன்மையதாய்த் தாங்கியிருக்க ஆதரவின்றித் தனித்தநானு மக்கமலபாதங்களைத் தாங்கமாட்டேனோ? நக்ஷத்திரமுடியைத் தரித்த வவளதுகூந்தலி லணியுமலர்களைக் குடையும்வண்டாக நா னவளது புகழைப்பாடி யம்மலரிலுள்ள தேனையுண்ணேனோ? அவளதுறவைப்பெற்ற நல்ல திருக்காவலூரிலுள்ள கொல்லையிலே யோர்புல்லாகக் கிடக்கமாட்டேனோ? வென்ற வாறு.

1. கோளென்பதை யிந்நூலாசிரியர் நக்ஷத்திரங்களுக் குபயோகித்தலைத் தேம்பாவணி - ருடு - ம் - படலம் - சுஅ - ம் - பாட்டிற் "கோளழுந்திய கொள்கையின் விலாவினேடிருகை" யென்பதிற்காண்க.

2. மான் என்பது ஆகுபெயராய்ப் பெண்ணென்னும் பொருளில்வந்ததாயினுஞ் " சிங்கமீன்ற வொரு " என்றதற்கொப்ப மானென்றே யுரையிற்கூறிறு மத்தொனியே யங்ஙனந் தொனித்தற்கெனவறிக. (ருசு)

(கட்டளைக்கலித்துறை.)

கிடந்தேன்வினைக்கடன்மூழ்கிநீதூக்கக் கிளைத்ததுயர்
கடந்தே 1 னியாடிருக்காவலூர்சேர்ந்தேன் கடிமலர்க்கா
நடந்தேனறம்பொருளின்ப 2 மெதிர்கொண்டே னண்ணியுன்றா
ளடைந்தேனினிவீ 3 டடையேனேவென்னுயி ராரொளியே.

(ப-ரை.) என் - எனது—உயிர் - உயிராக—ஆர் - பொருந்திய—ஒளியே- (ஞான) சூரியனே— வினைக்கடல்-பாவமென்னுங்கடலில்— மூழ்கி-அழுந்தி—கிடந்தேன்-இருந்தேன்—நீதூக்க - (அப்பொழுதுகைகொடுத்து) நீதூக்கவே—கிளைத்த - (முன்னென்னை) நெருங்கிய—துயர் - துன்பங்களையெல்லாம்—கடந்தேன் - விட்டுநீங்கினேன்—நீயாள் - நீயரசாட்சிசெய்யும்—திருக்காவலூர்-திருக்காவலூரை—சேர்ந்தேன்- அடைந்தேனாகி—கடி-வாசனைபொருந்திய—மலர் கா - பூஞ்சோலையில்— நடந்தேன் - நடந்தனன்—அறம் - தருமமும்—பொருள் - அர்த்தமும்—இன்பம் - நலனும்—எதிர் - எதிரேவர— கொண்டேன் - (அவற்றைக்) கொண்டேன்—நண்ணி-நெருங்கி— உன்தாள்-உன்னுடைய பாதங்களை—அடைந்தேன் - சேர்ந்தேன்—இனி-இனிமேல்—வீடு - (மோக்ஷ) வீட்டை—அடையேனோ - அடையமாட்டேனோ எ - று.

(பொ-ரை.) எனக் குயிராகவிருக்கு ஞானசூரியனே ! நான் பாவக் கடலிலே யழுந்திக்கிடந்தேன்: அப்பொழுது, நீயெனக்குக் கைகொடுத்துத் தூக்கியதினால் நான் முன்படைந்திருந்த துன்பங்களினின்று நீங்கினேன். அதன்பின்னர் திருக்காவலூரைச்சேர்ந் ததிலுள்ள சோலையிற் சென்று தாமே கைகூடிவந்த வறம்பொருளின்பங்களைக் கொண்டேன்: மெள்ளநெருங்கி யுன்பாதத்தையடைந்தேன்: இனி மோக்ஷவீட்டையு நானடையேனோ? வென்றவாறு.

1. நீயென்பது மற்றையடிகளின் முதற்சீரொப்புமைநோக்கிக் குறுக்கல் விகாரம்பெற்றது: விகாரமின்றிக் கூறினுந் தளை பிழையாது.

2. எதிரவென்பதில் அகரம் விகாரத்தாற்றொக்கது.

3. அடையேனோ வென்பதில் ஓகாரம் எதிர்மறைப்பொருளில் வந்தமையால் அதற்கு வீட்டையு மடைவேனென்னும்பொருள்கொள்க. (ருஎ)

(சமுகவல்லாசம்-ஆசிரியவண்ணவிருத்தம்.)

ஒளியுளியெனவினமணியணிகொடிகொணர்
வானவர்நூறுஞ்சிறந்ததொருபா
லுயிர்தருகிழலமரொளிதருகுடைகொணர்

வேறொருநூறுந்திரண்டதொருபா
லுருமணியணியுருவினரிடுவெளிவழி
சாமரைநூறுஞ்செறிந்ததொருபால்
துளியுளிமுகிலெனமுரசொடுபறையொடு
பாடினர்நாமம்புகழ்ந்ததொருபா
றுளையுளகுழலொடுகுரலுகள்கலமொடு
வீணைகள்யாவுந்தெளிந்ததொருபா
றொனியுளவலையலைவனவெனமணியணி
வானவர்சாலம்பணிந்ததொருபால்
வெளியுளியிருளறவெயிலரசெழுமென
வாதவனாருங்கலிங்கவடிவாள்
வினையறமனையுறமருளடவருளிட
வாகனமாமிங்கெழுந்துவரவே
உவிளைவடிவடிவடியுறையுறுமறுவறு
காவனலூரின்வதிந்தனுகினள்
களிஓயுளியருள்பொருணிகழ்புகழ்கலைநிலை
நாடுவிர்யாருந்துதைந்ததுயராய்க்
கழலிலகரமிலமகரிலநிகரில
நோகுவிர்யாருந்திரண்டுமருவீர்
கருணையள்கதியினள்கனிவினள்கடையிலள்
பூவடிநாளும்பணிந்துதொழுவீர்.

(ப-ரை.) இருள்அற - கண்ணிருள்கெடும்படி—வெளிஉளி-ஆகாயத்தில்—வெயிலரசு - சூரியன்—எழும்என - எழுவதுபோல—வினைஅற- (நமது) வினைகெடவும்—மனைஉற - (நாம்) மோக்ஷவீட்டையடையவும்— மருள்அட - (நமது)மயக்கத்தையழிக்கவும்—அருளிட -கிருபைசெய்யவும்—ஆதவன்-சூரியனாகிய—ஆரும் - (ஒளி) நிறைந்த— கலிங்கம் - உடையையுடைய— வடிவாள் - அழகியானவள்—உறை - மறை— உறு - பொருந்தியு— மறுஅறு - குற்றமற்ற—காவனலூரில் - நல்லதிருக்காவலூரினிடத்து— ஒருபால் - (அதன்) ஒருபக்கம்—ஒளிஉளிஎன - (இது) ஒளியுள்ளவிடமென்னும்படி—இனம் - இனமாகிய—மணி - இரத்தினங்களால்—அணி - அலங்கரிக்கப்பட்ட— கொடி - துவசங்களை—கொணர் - கொண்டுவந்த— வானவர்நூறும் - நூறுசம்மனசுகளாலும்—சிறந்தது - சிறப்புப்பொருந்திய தாகவும்—ஒருபால் - ஒருபக்கம்—உயிர்தரு - உயிரைத்தரும்—நிழல் - குளிர்ச்சி—அமர் - பொருந்திய—ஒளி - பிரகாசத்தை—தரு - விடுகின்ற—குடை - க்ஷத்திரங்களை—கொணர் - கொண்டுவந்த— வேறுஒருநூறும் - வேறேயொருநூறுசம்மனசுகளாலும்—திரண்டது - கூடப்பெற்றதாகவும்—ஒருபால் - ஒருபக்கம்—உரு - நிறம்பொருந்திய—மணி - இரத்தினத்தினும்—அணி -அழகினையுடைய—உருவினர் - உருவ

ம்பெற்ற வானவர்—இடு - வீசாநின்ற—வளி - காற்றிற்கு—வழி - காரணமாகிய—சாமரைநூறும் - நூறுசாமரங்களாலும்—செறிந்தது- நெருங்கப்பட்டதாகவும்—ஒருபால் - ஒருபக்கம்—துளியுளி - துளிக்குமிடத்து—முகில்என - (ஒலிக்கு) மேகத்தைப்போல—முரசொடு- (முழங்கும்)பேரிகைகளோடும்—பறையொடு - பலபறைகளோடும்—நாமம் - அவளுடையதிருநாமங்களை—பாடினர் - (பலசம்மனசுகளும்) பாடினவராய்—புகழ்ந்தது - தோத்திரித்திருக்கப்பெற்றதாகவும்—ஒருபால் - ஒருபக்கம்—துளையுள-துவாரங்களுள்ள—குழலொடு - (புள்ளாங்குழல்முதலிய) குழல்களும்— சூரல் - குரல்முதலியஏழிசைகள்—உகள் - பாய்கின்ற— கலமொடு - வீணைகளும்—வீணைகள்யாவும்-மற்றெல்லாவகையாழ்களும்—தெளித்தது - ஒலிக்கப்பெற்றதாகவும்— ஒருபால் - ஒருபக்கம்—தொனியுள - ஒலிபொருந்திய—அலை - அலைகள்— அலைவனஎன—அலைவனவற்றைப்போல - மணி—முத்துமாலைகளை - அணி—அணிந்த - வானவர்—சம்மனசுகளின் - சாலம்—கூட்டங்கள் - பணிந்தது— (அணியணியாகவந்து அவள்பாதங்களை) வணங்கப்பெற்றதாகவும் - விரை—வாசனையையும் - வடி—ஒழுகுகின்ற - வடிவு—அழகையுமுடைய—அடி - தன்பாதங்கள்—வாகனம்ஆம் - (அவைகளி) னூர்தியாகிய—இந்து-சந்திரன்மேல்—எழுந்துவர - எழுந்தருளிவர— வதிந்து - (வந்து) தங்கி—அணுகினள் - (நம்மை) நெருங்கினள்— களி - மகிழ்ச்சியை—உள்ளி - நினைந்து— அருள் - தேவகிருபையையும்—பொருள் - திரவியத்தையும்—நிகழ்- நடக்கும்—புகழ் - கீர்த்தியையும்—கலை - கல்வியையும்—நிலை - இடத்தையும்—நாடுவிர்யாரும் - தேடுகின்றநீவிரனைவரும்—கழலில - காலில்லாமலும்—கரம்இல - கையில்லாமலும்—மகர்இல - மக்களில்லாமலும்—துதைந்த - நெருங்கிய—துயர் ஆய் - துன்பங்கொண்டு—நிகர்இல - ஒப்பற—நோகுவிர்யாரும் - வருந்துகின்றநீவிரனைவரும்—திரண்டு - கூடி—மருவீர் - அவளையடைப்பீராகி—கருணையள் - கிருபையுள்ளவளும்—கதியினள்-மோக்ஷத்தைத்தருபவளும்—கனிவினள் - இரக்கமுடையவளும்—கடையிலள் - முடிவில்லாதவளுமாகிய வவளுடைய—பூ - தாமரைமலர்போன்ற—அடி - பாதங்களை—நாளும் -எப்பொழுதும் - பணிந்துதொழுவீர்—வணங்கிக்கும்பிடுவீராக எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ளா.) கண்ணிருள் கெடும்படி சூரிய னுகாயத்தெழுவதுபோல நாம் பாவத்தினீங்கி மோக்ஷமடையும்பொருட்டு நம்முடையமனவிருளைப்போக்கியருளச் சூரியனை யாடையாகக்கொண்ட சுந்தரியாகியதேவமாதா மழைவளம்பொருந்திக் குற்றமற்ற திருக்காவலூரினிடத்தே யொருபக்கஞ் சோதிமண்டல மென்னும்படி மிக்க மணிகளா லலங்கரிக்கப்பட்ட கொடிகளைக்கொண்டுவந்த நூறுவானவராற் சிறந்ததாகவும், ஒருபக்கஞ் சிவணைக் கொடுக்கு நிழல்செய்யுங் கதிர்க்குடையைக் கொண்டுவந்த வேறேயொருநூறு வானவராற் கூடப்பட்டதாகவும், ஒருபக்கமணியினுமழகிய வானவர்வீசும் நூறுசாமரைகளால் நெருங்கப்பட்டதாகவு

ம்,ஒருபக்க மேகம்போலமுழங்கு முரசத்தோடும் பலபறைகளோடு மவ ள்திருநாமங்களைப் பலசம்மனசுகள் பாடிப்புகழப்பெற்றதாகவும்,ஒருபக் கந்துளைகொண்ட புள்ளாங்குழல் முதலியகுழல்களு மேழுநரம்புவீணை களு மற்றவீணைகளு மொலிக்கப்பெற்றதாகவும், ஒருபக்கம் அலைகளலை வதுபோல முத்துமாலையையணிந்தவானவர்கூட்ட மணியணியாகவந்த வள்பாதங்களை வணங்கப்பெற்றதாகவும், வாசனைவீசுந்தன்னழகிய திரு வடித்தாமரைகள் அவற்றின் வாகனமாகிய சந்திரன்மே லெழுந்துவர வ ந்துதங்கி நமக்குச் சமீபமாயினள். தேவவருளையும் பொருளையும் புக ழையும் கல்வியையும் நிலையையுந் தேடுவோரே! கைகாலில்லாமலு மக் களில்லாமலு மிக்கதுயர்கொண்டு வருந்துவோரே ! நீவிர்யாவரு மவளை யடுத்துக் கருணாகரியாய் மோக்ஷந் தருபவளா யிரக்கமுடையவளாய் மு டிவில்லாவின்பமுடையவளாய்விளங்கு மவள்திருவடித்தாமரைகளையெ ப்போதும்வணங்கிக் கும்பிடுவீராகவென்றவாறு.

1. தெளிந்ததென்பது மெலித்தல்விகாரமும், 2. உள்ளியென்பது தொ குத்தல் விகாரமும் பெற்றுவந்தன.

3. வடியென்பதை“விரை”யென்பதின் வினையாக்கி-விரைவடிவடிவடிஎன் பதற்கு,வாசனைவடிகின்ற அழகியபாதங்களெனப்பொருள்கூறுதலுமொன்று.

4. ஈர்விகுதி ஏவற்பன்மையில் வருதலை “ஏவற்பன்மைக் கீர்தீர்மின்மி னீர்” என்னுந்தொன்னூல் விளக்கச்சூத்திர விதியாற்காண்க. மற்றவிடத்துமிப் படியே. (௩அ)

(மட்க்கு- நேரிசைவெண்பா.)

தொழுவார்தொழுவாரிற் றொற்பகைநோய்தீரா
1 தழுவாரழுவாரிங்கில்லை- செழுமாதின்
காவலினை யுற்றார் கழிகுலத்தாரேனும்வான்
காவலனையொப்பார்களித்து.

(ப-ரை.) அழுவார் - அழுபவர்களே—தொழுவார் - (திருக்காவலூர்நாய கியைப்) பணிபவர்களை—தொழுவாரில் - பணிபவர்களுள்ளும்—தொல் - பழ மையான—பகை - விரோதமும்—நோய் - துன்பமும்— தீராது - ஒழியாம ல்—அழுவார் - அழுபவர்—இங்குஇல்லை - இவ்விடத்திலில்லர்—செழுமாதின்- மாட்சிமையுள்ள இந்நங்கையினது— காவலினை-திருக்காவலூரை— உற்றார் - சேர்ந்தவர்கள்— கழிகுலத்தாரேனும் - இழிகுலத்திற் பிறந்தவராயிருந்தாலு ம்—களித்து - களிப்புக்கொண்டு—வான்காவலனை - வானுலகத்தரசனை—ஒப் ப்பார் - நிகர்ப்பர் எ - று.

(பொ-ரை.) அழுகின்றவர்களே! திருக்காவலூர்நாயகியைப் பணியு மடியாரைப் பணிபவர்க்குள்ளே, யாதிப்பகையுந் துன்பமுந் தீராம லழு பவரிங்கேயில்லை. இழிகுலத்தாரு மாட்சிமையுள்ளவந்நங்கையினது திரு

க்காவலூரைச் சேர்ந்தாராயிற் களிப்புற்று வானுலகவரசரைப்போல் வாழ்வாரென்றவாறு.

1. அழுவாரழுவாரென்னு மிருமொழியுள் விளிவேற்றுமைப்பொருளதாகக்கொண்டது பின்னின்றதையெனவறிக. (௩௬)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

களிவிளைத்தனள்கலிவதைத்தனள் கதியமைத்தனளாயினள்
வெளிவிளக்கினவெயிலுதித்தன விரைமுகத்தனகாவலூ
ருளியுதித்துளியுடலிடுக்கணு முயிரலக்கணுநீத்தவா
விளிவிளைத்தனளிகல்வடுப்பகை யிடரொருப்படவொழியுமே.

(ப-ரை.) களி-மகிழ்ச்சியை—விளைத்தனள் - (பூமியிலுள்ளோர்க்கு) உண்டாக்கினவளும்—கலி - வறுமையை— வதைத்தனள் - கொன்றவளும்—கதி-மோக்ஷத்தை—அமைத்தனள் - (கிடைக்கச்) செய்தவளும்—ஆயினள் - ஆன தேவமாதா—வெளி - வானுலகை—விளக்கின - விளங்கச்செய்த—வெயில் - சூரியனைப்போல — உதித்தன - (வந்து) தோன்றிய— விரை - வாசனையையுடைய—முகத்தன - இடத்தைவாய்ந்த—காவலூர்உளி - திருக்காவலூரினிடத்து—உதித்துளி - (போய்த்) தோன்றியவிடத்து—உடல்இடுக்கணும் - உடலின் துன்பமும்—அவா - ஆசைப்பெருக்கத்தை— நீத்து - நீங்கி— உயிர்அலக்கணும் - உயிர்த்துன்பமும்—இளி - இகழ்ச்சியை—விளைத்தனள் - உண்டாக்கிய ஏவாளால்வந்த—இகல் - வலிபொருந்திய—வடு - பாவத்தாலாகிய—பகை - விரோதமாகிய—இடர் - துன்பங்களோடு—ஒருப்பட - ஒருமிக்க—ஒழியும் - நீங்கும் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) பூமியிலுள்ளோர்க்கு மகிழ்ச்சியை யுண்டாக்கினவளும் வறுமையைத் தீர்த்தவளும் மோக்ஷங்கிடைக்கச் செய்தவளுமான தேவமாதா வானுலகைவிளக்குஞ் சூரியனைப்போலவந்துதங்கிய வாசம்வீசுந்திருக்காவலூரிற் போய்த்தோன்றினல் (நோய்முதலிய) வுடலின் துன்பமும் அவாநீங்கி யுயிரின்துன்பமும் பழிப்பையுண்டாக்கிய ஏவாளால் வந்த வலியபாவத்தாலுண்டான பகையாகிய துன்பத்தோ டொருமிக்க வொழியுமென்றவாறு.

தேவமாதா மகிழ்ச்சியைவிளைத்தவளாதலால் வியாதிமுதலியவற்றாலாகிய துன்பமும், வறுமையைப் போக்கினவளாதலால் அவாவும்அதன்காரியமாகியஇம்மையுயிர்த்துன்பமும், மோக்ஷங் கிடைக்கச்செய்தவளாதலால் அதற்குத்தடையாகிய ஏவாளால்விளைந்தபாவத்தாலாகியமறுமைத்துன்பமும் அவளுறையிடத்தையடைந்தார்க்கு ஒருப்பட வொழியுமென்றாரெனவும்; வியாதிமுதலியவுடற்றுன்பமும் அவாவினுலுண்டாகு முயிர்த்துன்பமும்போல இம்மையிற்றானே யொழியாது ஏவாளாலுண்டான பாவத்துன்பம் மறுமையிலு நிலைபெற்றுநிற்கையால் அதன்கொடுமைதோன்ற "இகல்வடுப்பகையிட" ரென்றா

றெனவும் ஒருவன் வறுமையை யுணர்தற்குக்காரணம் அவாவாதலின் வறுமை யலக்கணும் ஒழியுமே யென்றது "உயிரலக்கணுநீத்தவா" "ஒழியுமே" யென்றுரெனவும் அறிக.

(கட்டளைக்கலித்துறை.)

ஒழியாமுதலாய்த்தேவாதிக்கநீதிதா னுற்பவமா
யழியாதொருவற்கேதாயுமகளுமா யாரமுதாய்ப்
பழிநாகவெவ்விடமாற்றுமருந்தாய் பரகதிக்கோர்
வழியாய்த்துணையாய்நமைக்காப்பக்காவலூர் வைகினளே.

(ப-ரை.) தேவ ஆதிக்கம் - தேவாதிபத்தியத்தையுடைய— நீதி - நீதிசுரூபன்—ஒழியாமுதலாய் - (தனக்குக்) கெடாதமுதல்வனுகியும்—உற்பவமாய்- (தன்னிடத்தில்) உற்பத்தியாகியதனுல்— ஒருவற்கே - அவ்வொருவனுக்கே— அழியாது - (கன்னிமை) கெடாமல்—தாயும்மகளும் ஆய்-மகளுந்தாயுமாகி— ஆர் - பூமியின்கண்—அமுதாய் - அமிர்தமாய்—பழி - பாவக்குற்றமாகிய— நாகம்வெவ்விடம்- (மாயப்) பாம்பின்கொடியவிஷத்தை—மாற்றும்-தீர்த்த— அருந்தாய் - (நம்முடைய) அருமையுள்ளதாயானவள்—நமை - நம்மை—காப்ப - காக்க— பரகதிக்கு - மோக்ஷத்திற்குச் (செல்லும்)—ஓர்வழியாய்-ஒருவழியாகவும்—துணையாய் - சகாயமாகவும்—காவலூர் - திருக்காவலூரில்— வைகினள் - தங்கினுள் எ - று. தான் ஏ அசைகள்.

(பொ-ரை.) தேவாதிபத்தியத்தையுடைய சர்வேஸ்வரன் தன்னைப் படைத்த வழியாதபிதாவாகியும் தன்னிடத்தில் மனிதனுக வுதித்ததினுலவ்வொருவனுக்கே மகளுந்தாயுமாகி, ஆதிப்பழியாகிய மாயப்பாம்பின் கொடியவிஷத்தைத்தீர்த்த பூவுலகமிர்தமாய்விளங்கு, மருமையான நம்மன்னை- நம்மைகாப்பதற்காக மோக்ஷத்திற் கொருவழியாகவுந் துணையாகவுந் திருக்காவலூரின்கட் டங்கினுளென்றவாறு.

ஆதியிலே பிசாசமானது பாம்புருவங் கொண்டமையா லதுகாரணமாக வந்து மனிதருயிரைக்கொல்லும் பாவத்தை "நாகவெவ்விட" மென்றும், அமிர்தமூர்ச்சைதீர்க்கு மருந்தாதல்போலத் தேவமாதா வவ்விஷத்தாலாகுஞ் சாவினைத்தீர்த்தலால் "அமுதாய்ப்பழிநாக வெவ்விடமாற்றும்" என்றும், இவ்வமிர்தம் இவ்வுலகத்தில் தோன்றியிருந்தமையால் "ஆரமுதா" யென்றுங் கூறினுரெனவறிக. (சுக)

(மருட்பா.)

வைகலெனவந்து மன்னுயிரார்கங்குலறும்
வைகலைச்செய்தேவொளியை வாய்த்துயிர்த்தே-வைகினுள்
காவலூருறை காதலார்துறை
யோவலீர்களி யோதியாரொளி
தெளித்தநூலி திறத்தசீலி

களித்தமாலை கயத்தவேலை
மந்திரமறைமொழி 1 மண்டலகுறையொழி
சந்திரவடியினள் 2 சந்துடுமுடியினள்
காதனாயகி கதிதரும்
வேதநாயகி மெல்லடியணிவமே.

(ப-ரை.) காவலூர்- திருக்காவலூரில்—உறை- தங்கிய—காதல்-ஆசை—ஆர் - பொருந்திய—துறை - (மோக்ஷ) வழியும்—ஓவல்ஈர் - வருத்தத்தையறுக்கும்—களி - மகிழ்ச்சியும்—ஓதி - ஞானமாகிய—ஆர் - சோதியையுடைய—ஒளி - சூரியனும்—தெளித்த - (மனத்தைத்) துப்புரவாக்கிய—நூலி- வேதநூலையுடையவளும்— திறத்த - குணம்பொருந்திய— சீலி - ஞானவொழுக்கமுடையவளும்—களித்த - களிக்கப்பெற்ற—மாலை - (தாவீதரசன்) உப்பரிகையும்—கயத்த-மேன்மையையுடைய— வேலை-கடலும்— மந்திரம் - மந்திரத்தில்—அறை - சொல்லப்படும்—மொழி - வார்த்தையும்—மண்டலம் - பூமியிலுள்ளவரினுடைய— குறை- (ஒளியில்லாமைமுதலிய) குறைகளை—ஒழி - ஒழிக்கும்—சந்திரன் - நிலாவைமிதித்த—அடியினள்- பாதத்தையுடையவளும்—சந்தம் - அழகினையுடைய—உடுமுடியினள் - நக்ஷத்திரமுடியை யுடையவளுமானவள்—வைகல்என - அக்காலம்விடியற்காலமென்றுயர்ந்தோர் சொல்லும்படி—வந்து - (ஒருவிடியல் நக்ஷத்திரத்தைப்போலப் பூமியில்) வந்து—மன் உயிர் - நிலைபெற்றவுயிரையுடையமனிதர்க்கு— ஆர் - பொருந்திய—கங்குல் - துன்பமென்னும்இரவானது—அறும் - ஒழிதற்கேதுவான—வைகலை- நாளை—செய் - செய்யும்—தே ஒளியை-தேவசூரியனை—வாய்த்து- (கருப்பமாகத்தன்னிடத்) தடைந்து—உயிர்த்து-ஈன்று—வைகினள் - தங்கினவள்—காதல்நாயகி - அன்புள்ளதலைவியும்—கதி - மோக்ஷத்தை—தரும் - கொடுக்கும்— வேதநாயகி - வேதத்தலைவியுமானஅவ்வன்னையினுடைய—மெல்அடி - மெல்லியபாதாரவிந்தங்களை—அணிவம்- (சிரத்தி) லணிந்துகொள்வோமென்றவாறு. ஏகாரம் இரண்டும் அசைகள்.

(பொ-ரை.) திருக்காவலூரில் வந்துதங்கிய மோக்ஷவழியும், வருத்தத்தைப் போக்கு மகிழ்ச்சியும், ஞானபிரகாசசூரியனும், மனத்தைச்சுத்தமாக்கும்வேதத்தைக்கொண்டவளும், ஞானவொழுக்கமுடையவளும், எவரு மகிழத்தக்க தாவீதிராஜனுப்பரிகையும், மேன்மைக்கடலும், மந்திரத்திற் கூறப்படும் சொல்லும், பூமியின் குறையைத்தீர்க்குஞ் சந்திரனை மிதித்த பாதத்தாளும், அழகிய நக்ஷத்திரகிரீடத்தாளு மானவள்-மனிதர்க்குத்தோன்றிய பாவத்துன்பமென்னு மிராத்திரியின் முடிவான விடியற்கால மானதென்னும்படி யொருவிடியனக்ஷத்திரம்போலப் பூமியிற்றோன்றி, யவ்விரா வொழித்தற்கேதுவான நாளைச்செய்யுந் தேவசூரியனைக் கருப்பங்கொண்டீன்று தங்கினவளேயாம். அன்புள்ளதலைவியும் வேதத்தலைவியுமான வவ்வன்னையின் பாதாரவிந்தங்களைச் சிரத்தி லணிந்துகொள்வா மென்றவாறு.

1. மண்டலகுறையொழியென்னும் விசேடணத்திற்கு விசேடியஞ் சந்திரனென்பது பெற்றும், பின்னர் "உடு" வென்பது சந்தமென்னு மடைகொடுத்துக் கூறப்பட்டதாதலின். இவ்வாறன்றி யவ்விசேடணத்திற்கு அடியினையே விசேடியமாகக் கொள்ளின்; அது மிக்கசிறப்புடைத்து. இப்படிக்கூறுங்கால், குறையொழி யென்பதற்கு ஞானமின்மை மகிழின்மை வீடின்மை முதலிய குறைகளை யொழிக்கும்எனப் பொருள்கூறுக.

2. சந்தமென்னுமொழி கடைகுறைந்துவந்தது. (சஉ)

(மடக்கு-எண்சீரடியாசிரியவிருத்தம்.)

அணிவளங் 1 கணாள் மணிவளங்கணா
ளருடுதைத்தனள் மருள்வதைத்தனள்
பணி 2 வணங்கணாள் கணியணங்க 3 ணாள்
பழிவிலக்கவும் வழிதுலக்கவும்
துணியவீரமா யணியவாரமாய்
சுருதிவாயினாள் பருதிவேயினாள்
கணியலங்கலாள் 4 மணிவிலங்கலாள்
5 காவலூரினா டேவநாரியே.

(ப-ரை.) காவலூரின் - திருக்காவலூரினை—ஆள் - ஆள்கின்ற—தேவநாரி - தேவப்பெண்ணானவள்—அணி- அழகாகிய—வளம்-மாட்சிமைபொருந்திய—கணாள் - (மோக்ஷ) இடத்தையுடையவள்— மணி - நன்மையைச்செய்கின்ற—வளம்- அழகினையுடைய—கணாள்-கண்களையுடையவள்— அருள்-தேவகிருபையை— துதைத்தனள் - (நம்மிடத்தில்) நெருங்கச்செய்தவள்—மருள் - பேயை—வதைத்தனள் - வதைத்தவள்— பணி - (பேய்ப்) பாம்பு—வண்ணம் - (மனிதர்க்கு) நன்மையை—கள் - திருடிய— நாள் - காலத்தில்—கணி - (அவர்க்குக்) கணிக்கப்பட்ட— அணங்கு - துன்பங்கள்— அணாள்-சேராதவள்—பழி - (நமதுபாவப்) பழியை—விலக்கவும் - தீர்க்கவும்—வழி-நல்வழியை—துலக்கவும் - விளக்கவும்—துணி - துணிந்த—அ-ஈரம்— அந்த-அன்பினையுடைய—ஆய் - தாய்—அணிய - அழகிய—ஆரம் - முத்துமாலை—ஆய் - ஆராயப்படும்—சுருதி - வேதம்விளங்கும்— வாயினாள் - வாயையுடையவள்—பருதி - சூரியனை—வேயினாள் - (உடையாக) வணிந்தவள்—கணி- மதிக்கத்தகும்—அலங்கலாள் - இரக்கமுடையவள்—மணி - அழகு—விலங்குஅல்லாள் - நீங்காதவள் எ - று.

(பொ-ரை.) திருக்காவலூராளுந் தேவகன்னியானவள் மாட்சிமைகொண்ட மோக்ஷத்தையுடையவள்; நன்மைசெய்யு மழகினைப்பெற்ற கண்களையுடையவள்; தேவகிருபை நமக்குக்கிடைக்கச்செய்தவள்; பேயைவதைத்தவள்; பாம்பினுருவைக்கொண்ட பேயானது ஆதாமேவாளை வஞ்சித்து நன்மையைக்கெடுத்த காலத்திற் சர்வேஸ்வரனுடைய கோபத்தால் மனிதர்க்குவந்ததுன்ப மொன்று மணுகாதவள்; நமது பாவப்பழியைத் தீர்க்கவும் நல்வழியை விளக்கவுந் துணிந்த வன்

புள்ளவன்னே; அழகியமுத்துமாலே; வேதம்விளங்கும் வாயையுடைய வள்; சூரியனையுடையாக வணிந்தவள்; இரக்கமுடையவள்; நீங்காதவழ குடையவ ளென்றவாறு.

1. கண்ணுள்; 2. வண்ணம்; 3. அண்ணுள் என்னுமொழிக ளிங்கே தொகுத் தல்விகாரம்பெற்று வந்தன. 4. மணிவிலங்கலாள் என்பதற்கு நன்மைக்குன்ற மெனவும்; 5. காவலூரினுள் என்பதற்குக் காவலூரிலிருந்து நம்மையாள்கின்ற வெனவும் பொருள்கூறினுமமையும். காவலூரினுளென்பதையொருமொழியா கக்கொண்டு திருக்காவலூரிலுள்ளவளாகியளெனப்பொருள்கூறிற் பொருந்து மாயினுந் "தேவநாரியே" யெனப் பின்னர்க்கூறியவதனு லிங்கேவேறுபொரு ள்கூறினுமெனவறிக. (௬௫)

(ஒன்பதின்சீரடி யாசிரியச்சந்தவிருத்தம்.)

நாரியிவணய வாரியிவடயை
நாரியிவடிரு மாரியிவளுறை காவலூர்ச்
சாரிவரவரு தேரினிருபுடை
தாரினமரர்கள் வேரிமதுமலர் தாழ்விலா
வாரி 1 யிமிர் 2 குழ றேரியெழுபுகழ்
மாரிகொடிகுடை மாரிகவரிகள் வாயெலா
நேரிலெழிலெழு காரினொலி 3 யலே
நீரினொலிமிகு தேரினிவள்வரு மரவமே.

(ப-ரை.) நாரி - அன்புடையவளும்—இவண் - இவ்விடத்து—நயம்வாரி- இன்பக்கடலுமாகிய—இவள்-இந்நங்கை—தயைநாரி - (தேவகிருபைக்குக்கா ரணி (யாகிய தேவமாதாவாகும்)—இவள் - இவளைக் கொண்டிருக்கிற—திரு- சிறப்பாகிய—மாரி - மேகமோவெனில்—இவள் - இவ்வன்னே—உறை - (தா ன்) வசிக்கின்ற—காவலூர் - திருக்காவலூரில்—சாரிவர - பவனிவர—வரு- வந்த—தேர் - (இவளது) விமானமாகும்—இன் - இனிய—இருபுடை - இர ண்டுபக்கத்தினுமோவெனின்—தாரின் - மாலையையுடைய—அமரர்கள் - வா னவர்களும்—வேரி- (அவரால்அர்ச்சிக்கப்படுகிற) வாசனையையுடைய—மது- தேனைப்பொழிகின்ற—மலர் - புட்பங்களுமாம்—தாழ்வுஇலா - (இன்பம்) கு றைவில்லாமல்—வாரி - சமுத்திரத்தைப்போல—இமிர் - ஒலித்தலோவெனி ன்—குழல் - குழலிசையும்—தேரி - (அவராற்) சொல்லப்பட்டு—எழு - எழு கின்ற—புகழ் - புகழொலியுமாகிய—மாரி - மழையாம்—வாய் - பொருந்தி ய—எலாம் - மற்றிவையெல்லாமோவெனின்—கொடிகுடைமாரி- கொடிகள் குடைகளாகிய மழையும்—கவரிகள் - சாமரைகளுமாம்—நேர்இல் - ஒப்பில் லாத—எழில்எழு - அழகுடனெழும்—காரின்ஒலி - மேகவொலியோவெனி ன்—அலைநீரின்ஒலி - அலைஜலத்தையுடைய கடலொலியினும்—மிகு - (ஒலி) மிகுகின்ற—தேரின் - (இந்த) விமானத்தின்மேல்—இவள் - இவ்வன்னே—வரு ம் - வருதலினுலுண்டாகும்—அரவம் - ஒலியாகும்—எ-று. ஏகாரம் ஈற்றசை: கடைநிலைத்தீவகமாகக் கொளவந்தவேற்றேகாரமெனினுமமையும்.

(பொ-ரை.) அன்பின்வடிவமுள்ளவளும் இவ்விட்த்தே யின்பக்கட லுமாகிய இந்நங்கை, தேவகிருபைக்குக் காரணியாகிய தேவமாதாவாகு ம். இவள் வீற்றிருக்கப்பெற்ற சிறந்தமேகமோவெனில் இவ்வன்னை (தா ன்) வசிக்கின்றதிருக்காவலூரிற் பவனிவரும்படிவந்த விவளது விமான மாகும். அத்தேரினினிய விரண்டு பக்கத்திலுமோவெனில் மாலையையு டைய சம்மனசின் கூட்டமும் (அவராலர்ச்சிக்கப் படுகின்ற) பரிமளத் தேனைப்பொழியு மலர்க்கூட்டமுமாகும். (இன்பங்) குறையாமற் சமு த்திரத்தைப்போ லொலித்தலோவெனிற் குழலிசையும் (அச்சம்மனசு களாற்) சொல்லப்பட்டெழுகின்ற புகழொலியுமாகும். பொருந்தியமற் றிவையெல்லாமோவெனிற் கொடிகள் குடைகளின் கூட்டமுஞ் சாம ரைகளுமாம். ஒப்பில்லாத வழகுடனெழு மேகவொலியோவெனிற் கட லொலியினு மிகுமுழக்கத்தைக்கொண்ட இந்த விமானத்தின்மே லிவ் வன்னை வருதலாலுண்டாகின்ற வொலியாகு மென்றவாறு.

இச்செய்யுள் தேவமாதா மேகவாகனத்திலேறித் தான்வீற்றிருக்குந் திரு க்காவலூரிற் சாரிவரக்கண் டிம்முழக்கமுதலியனயாவையோவென ஐயுற்று வினவியவொருவர்க்கு மற்றொருவர்கூறுங் கூற்றாகக்கூறப்பட்டது: முன்ன ரையுற்றோரே பின்னர்த் தெளிந்து கூறியகூற்றாகக்கொளினுமமையும்.

இது தெளிவென்னும் பொருளினும் வினாவில்விடையென்னும் அணியினு முடிந்த செய்யுள்.

1. இமிரென்பது விகுதிகுன்றிய தொழிற்பெயர்.
2. குழல் புகழ் என்பவை ஆகுபெயர்கள்.
3. அலைநீரென்பது அன்மொழித்தொகை. (சச)

(நேரிசைவெண்பா.)

அரவம்பட்டெழுந்தா 1 ளாகம்படுத்தும்
அரவம்படச் 2 சீ றடியாள்-அரவத்தாற்
3 பாருலகும்பேருலகும் 4 பாவனையாத் தானணுகி
நேரொழியுங்காவனலூர் நீர்.

(ப-ரை.)ஆகம்-மனத்தை—படுத்தும்-கொல்லும்—அரவம்-பாம்பானது—பட- கெட—சீறு - கோபித்த—அடியாள் - பாதத்தையுடையதேவதாய்—அர வம் - ஆரவாரம்— பட - உண்டாகும்படி— எழுந்தாள் - (திருக்காவலூரில்) எழுந்தருளினாள்—பார்உலகும் - பூவுலகத்தாரும்—பேர்உலகும் - பெரியவா னுலகத்தாரும்—பா - பாக்களால்—வனையா - அலங்கரிக்கவியலாத—தான்- அவ்வன்னை—அரவத்தால்-ஆரவாரத்துடன்—அணுகி - சேர—காவல்நல்லூர்- நல்லதிருக்காவலூரினது—நீர்-தன்மை—நேர்ஒழியும் - நிகரொழியும். எ-று.

(பொ-ரை.) நல்லமனத்தையழிக்கும் பேயாகியபாம்பு வருந்தக் கோ பித் ததன்றலையை நசுக்கியதிருவடியையுடைய தேவமாதா மிக்கவாரவா

ரத்தோடுந் திருக்காவலூரிலெழுந்தருளினள். பூவுலகத்தாரும் வானுலகத்தாரும் பாக்களைக்கொண் டலங்கரிக்கக்கூடாத மேன்மையையுடைய தான் வந்துசேர்ந்தமையால் திருக்காவலூரின்தன்மை யொப்பற்றோங்குமென்றவாறு.

1. "ஆகம்" என்றதுமார்பு: அதுஇங்கே மார்பினுள்ளுள்ளமனத்தையுணர்த்தலால்ஆகுபெயர். அகம்என்னுமொழி நீட்டல்விகாரம்பெற்றதெனினு மமையும். பிசாசமாகிய விப்பாம்பு மற்றைப்பாம்புகளைப்போலல்லாமல் நல்லமனத்தைக்கோறலா லதனை "ஆகம்படுத்துமரவ" மென்றானென வறிக.

2. சேறடியாள் என்றவிடத்தே முதற்பொருளின்குணமாகிய சேறுதல் சினைப்பொருளோடு வந்தமையான் முதன்மறிநிலையணி.

3. பாருலகுமென்று முன்னர்க்கூறியவதனாற் பேருலகென்றது வானுலகத்தாரென்பதுபெற்றாம்.

4. பொதுப்படப் பாவென்றானோ மிதுபாக்களையும் பாவினங்களையுஞ் சுட்டற்குவந்ததெனக் கொள்க. (சடு)

(இரங்கல் - அந்தாதிமடக்கு - எண்சீரடி யாசிரியவிருத்தம்.)

நீராருந்தடமே தடஞ்சூழு1நியமே
2நியமாளுந்திருவே திருச்சேருங்காவ
லூராரும்பொழிலே பொழிலாருமுழையே
யுழைபாயுங்களியாற் களியேனோநானே
யாராருந்துயராற் றுயரேறவழியுற்
றழியாதகதியிற் கதியாளமதியோர்
தாராருமடியே கதிராருமடியே
3தாராருமுடியே யுயிர்மாசில்சுடரே.

(ப - ரை.) மதி - சந்திரனுக்கு—ஓர் - ஒப்பற்ற—தார் - மாலையைப்போல—ஆரும் - தங்கிய—அடி - பாதங்களும்—கதிர் - சூரியனாகிய—ஆரும்-(ஒளி) தங்கிய—மடி - ஆடையும்—தாரா - நக்ஷத்திரங்கள்—ஆரும் - தங்கிய—முடி - கிரீடமும்—ஏய்உயிர் - பொருந்திய (வென்) னுயிரையொத்தவளே—மாசு - (சுடுதல்முதலிய) குற்றம்—இல் - இல்லாத—சுடரோ - சூரியனே—நீர் - ஜலமானது—தடம் - தடாகங்களை— ஆரும் - பொருந்தி யிருக்கின்றது—தடம் - தடாகங்கள்—நியமம் - (உனதுதிருக்) கோயிலை—சூழும் - சூழ்ந்திருக்கின்றன— நியமம் - (உனதுதிருக்) கோயில்—திரு - செல்வத்தை—ஆளும் - உரிமையாகப் பெற்றிருக்கின்றது— திரு - செல்வம்— சேரும் - பொருந்திய— காவலூர் - திருக்காவலூரானது—பொழில் - சோலைகளை—ஆரும் - பெற்றிருக்கின்றது—பொழில் - சோலைகள்—உழை - மான்களை—ஆரும் - பெற்றிருக்கின்றன—உழை - மான்கள்—களியால் - மகிழ்ச்சியினாலே—பாயும் - பாய்கின்றன—நான் - யான்—ஆர் - பூமியில்—ஆரும் - தங்கிய—துயரால் - துன்பஞ்செய்யும்பொருளால்— துயர்ஏறு - துன்பமிகுகின்ற—அவ்வழி - அந்தமார்க்கத்தி

ல்—உற்று - சென்று— அழியாத - கெடாத—கதியில் - நடையால்—கதி - பரகதியினை—ஆள - உரிமைப்படுத்திக்கொள்ள—களியேனோ- மகிழேனோ—எ - று. ஏகாரம் ஏழும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) சந்திரன் றுங்கியிருப்பதா ல்தற்கோர்மாலையை யொத்த திருவடிகளையுஞ் சூரியனாகிய வுடையையும் நக்ஷத்திரகிரீடத்தையுமு டையவளா யென்னுயிரையொத்தவளே ! சூடுமுதலிய குற்றங்கணீங்கிய சூரியனே! நீரானது தடாகங்களையுடையது. தடாகங்களோவுனது கோயிலைச் சூழ்ந்திருக்கின்றன. உனது திருக்கோயிலோ செல்வத்தை யுரிமையாகப் பெற்றிருக்கின்றது. செல்வம்பொருந்திய உனது திருக்காவலூரானது சோலைகளைப்பெற்றிருக்கின்றது. சோலைகளோ மான்களை யுடையன. மான்களோ வவ்விடத்தே களிப்போடும்பாய்கின்றன. நானுலகில் வருத்தும் பலபொருள்களாலுந் துன்பமிகும்வழியிற்சென் றழிந்துபோகாதபடி ஞானவொழுக்கத்தாற் பரகதியினை யுரிமையாக்கிக் கொள்ள மகிழேனோ ? வென்றவாறு.

1. 2. "நியமம்" என்பவையும் 3. "தாரா" என்பதுங் கடைகுறைந்து வந்தன. (௬௬)

(நேரிசைவெண்பா.)

சுடர்முடியாயோர்குகையு ணீயீன்றதோன்றற்
படர்முடியார்வந்துபணிந்தா-ரிடர்முடியா
தின்றுணர்வார்காவனலூ ரெய்திப்பணியாரோ
குன்றுமெனக்கொண்ட கோது.

(ப-ரை.) சுடர் - விளங்குகின்ற—முடியாய் - கிரீடத்தையுடைய தேவதாயே—படர் - (ஒளி) படர்ந்த—முடியார் - கிரீடத்தையுடைய (அரசர்களும்) —ஓர்குகையுள்வந்து- ஒருகெபியில்வந்து—நீயீன்ற - நீபெற்ற—தோன்றல் - திருக்குமாரனை—பணிந்தார் - தொழுதார்கள்—இடர் - துன்பத்தை—முடியாது - ஒழியாமல் —இன்று - இப்பொழுது—உணர்வார் - உணர்பவர்—கொண்ட - (தாம்) கொண்ட—கோது - குற்றங்கள்—குன்றும்என - குறையுமெனக்கருதி—காவல்நல்ஊர் - (உனது) திருக்காவலூரை—எய்தி - அடைந்து—பணியாரோ - வணங்கமாட்டாரோ. எ - று.

(பொ - ரை.) பிரகாசஞ்செய்யு நக்ஷத்திரகிரீடத்தையுடைய தேவதாயே ! பொன்முடிசூடிய விராஜாக்களு முன்ன ரொருகுகையிலேவந்து நீயீன்ற திருக்குமாரனைப் பணிந்தார்கள். இப்போது முடியாததுன்பப்படுபவர் தாங்கொண்ட துன்பங்கள் தீருமென்றெண்ணி நினது திருக்காவலூரில்வந்து பணியமாட்டார்களோ? வென்றவாறு.

" படர் முடியார்" என்பதும் "இடர்முடியா தின்றுணர்வார்" என்பதும் சிலேடைவகையாற் பொருளொத்தல்பற்றிக் குகையில் வந்துபணிந்தவிவர் காவலூரில்வந்து பணியாரோஎனத் தொனித்தலுங் காண்க. (௬௭)

(கட்டளைக்கலித்துறை.)

கோ 1 தெனயாவு முளத்தறக் கொய்மினீர் கோண்முடியாள்
போதெனப் 2 பூத்தசெந் தாளணிந்தேத்தவே பொய்ப்பொருள்சேர்
3 காதலுங்காமமுங் கோபமுங்காவற் களிச்செருக்குந்
4 தீதெனச்சேரா திருக்காவலூரம்மன் சீரடியே.

(ப-ரை.) கோள்முடியாள் - நக்ஷத்திரங்களாகிய முடியையுடைய தேவதாயினுடைய—போதுஎன - தாமரைமலரென்னும்படி—பூத்த - மலர்ந்த—செந்தாள் - செவ்வியபாதங்களை—அணிந்து - (சிரசின்மேல்) தரித்து—ஏத்த- துதிக்க—கோதுஎனயாவும் - குற்றமென்னும்யாவும்—உளத்து - (நுமது) மனத்தில்—அற - நீங்க—கொய்மினீர் - (அவற்றை) அறுங்கள்—திருக்காவலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய—அம்மன் - அத்தாயினுடைய—சீர் - நன்மைபொருந்திய—அடி - பாதங்கள்— பொய் - பொய்யாகும்—பொருள் - பொருளின்கண்— சேர் - சேரும்—காதலும் - அவாவும்—காமமும் - மோகமும்—கோபமும்-வெகுளியும்— காவல் - (தன்னையுடையார்க்குச்) சிறைச்சாலையையொத்த— களி - மயக்கத்தால்வரும்— செருக்கும் - மதமும் (இவைமுதலியயாவும்)—தீதுஎன - (தனித்தனி) தீயதென்று—சேரா - (அதனையுடையவரைச்) சேரமாட்டாவாம் எ - று. ஏகாரம் இரண்டும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) திருக்காவ்லூரிலெழுந்தருளிய தேவதாயின் பாதாரவிந்தங்களைத் தலைமேலணிந்துதுதிக்கக் கருதுவோரே ! நீவிர் அதுசெய்ய வேண்டின் முன்னர்க் குற்றமென்னப்பட்ட யாவற்றையும் நீங்குங்கள்: ஏனெனில், நக்ஷத்திரகிரீடத்தையுடைய வவ்வன்னையினுடைய நல்ல திருவடிகள் அவாவுங் காம கோப மதமுதலியவுமாகிய விவற்றுளொவ்வொன்றுந் தீதெனமுனிந் ததனையுடையாரைச் சேராதனவென்றவாறு.

1. "என" வென்ப திங்கே "அழுக்காறெனவொருபாவி" யென்பதுபோலப்பெயர்ப்பொருளில் வந்தவிடைச்சொல்லாதலின் வினையெச்சமன்று.

2, பூத்தவென்பது சமாதியணிபற்றிவந்ததெனக் கொள்க.

3. காதல்முதலிய நான்கு தீயகுணங்களைமாத்திர மெடுத்துக்கூறினாரேனும் "மொழிந்த பொருளோ டொன்றவவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்த" லென்னுமுத்தியாற் குரோத மாற்சரியமுதலியவுங்கொள்க.

4. "காதலுங்காமமுங் கோபமுங்காவற் களிச்செருக்கு" மென் றெண்ணும்மைதந்து கூறிய விவ்வாசிரிய ரதற்கியையத்தீயஎனப் பன்மைப்பெயராற்கூறுது தீதென் றொருமையாற்கூறினர், காமமுதலியதீயவற்று ளொன்றையுடையாரிடத்து மவள்பாதங்கள் சேராவென்பதறிவித்தற்கு. (சஅ)

(வஞ்சிப்பா.)

சீர்விளக்கிய செல்வியாய்ப்
பார்விளக்கிய பாவையே
தென்காவிரி திரண்டொலிப்ப

மன்காவிரி மலர்கமழப்
பூந்தாதகி புடைநிழற்றத்
தீந்தாதகில் சினைகுளிர்ப்ப
வருட்காவலூ ரமைந்தளிப்பத்
திருக்காவலூர் சேர்ந்தனளே
சேர்ந்தபின்
ஞானேபூண்பழி நையவெண்மதி
தானேபூண்பதந் தான்றராளோ
திருவடியொளிவுளந் தெளிவுறக்கண்டாற்
கருவடியிருளறக் I கண்டு
மரு2வடிமலரடி வான்கதியந்தமே.

(ப-ரை.) சீர் - (வானுலகச்) செல்வத்தை—விளக்கிய - விளங்கக்காட்டிய— செல்வியாய் - சீரியாய்— பார் - பூமியை— விளக்கிய - விளங்கச்செய்த— பாவையே - நங்கைதானே— ஊர் - ஊரில்— அமைந்து - பொருந்தி—அருள் - அருளோடுங்கூடிய—காவல் - காப்பினால்—அளிப்ப - நம்மையிரக்ஷித்தற்காக—தென் - அழகிய— காவிரி - காவேரியாறனது—திரண்டு - வெள்ளத்தாற் கூடப்பட்டு— ஒலிப்ப - சப்திக்கவும்— மன் - நிலைபெற்ற— கா-சோலைகள்—விரி - மடலவிழ்ந்த—மலர் - புட்பங்களைக்கொண்டு— கமழ-பரிமளிக்கவும்—பூ - மலர்களையுடைய—தாதகி - ஆத்திமரங்கள்—புடை-பக்கங்களில்—நிழற்ற - நிழலைச்செய்யவும்—அகில் - அகில்விருக்ஷம்—தீந்தாது - மதுரம்பொருந்தியமகரந்தங்களாலும்—சினை - அரும்புகளாலும்—குளிர்ப்ப-குளிர்ச்செய்யவும்—திருக்காவலூர் - திருக்காவலூரில்—சேர்ந்தனள்- சேர்ந்தாள்—சேர்ந்தபின் - (அவ்வாறு) வந்துசேர்ந்தபின்னர்—நான் - யான்—பூண் - பூண்ட—பழி - குற்றங்கள்—நைய - கெட—வெள்-வெள்ளிய—மதி-நிலாவானது—பூண் - அணிந்துகொண்ட—பதம் - (தன்) பாதங்களை—தான்-அந்நங்கை—தா ராளோ - (எனக்குத்) தரமாட்டாளோ—திரு - அழகிய—அடி - பாதங்களினது—ஒளிவு - காந்தியை—உளம் - (என்) மனம்—தெளிவு உற - தெளிய—கண்டால் - (யான்) பார்த்தால்— கரு-கருமை—வடி-ஒழுகுகின்ற—இருள் - அந்தகாரம்— அற-நீங்க— கண்டு - செய்து—மரு-வாசனை—வடி - ஒழுகப்பெற்ற—மலர் - (தாமரை) மலர்போன்ற—அடி - (அப்) பாதங்களே—வான் - மேலாகிய—கதி - பரகதியினது— அந்தம்-அழகாகும் (எனக்கு) எ - று. ஏகாரம் நான்கும் தான் ஒன்றும் அசைகள்.

(பொ-ரை.) வானுலகச்செல்வத்தை விளங்கக்காட்டிய செல்வியாய்ப்பூமியைவிளங்கச்செய்த நங்கைதானே யோரூரிலிருந்து நம்மைக்காத்தருளக்கருதி, யழகிய காவிரியாறனது வெள்ளந்திரண்டொலிக்கவும் நிலைபெற்றசோலைகள் மலர்ந்தபுட்பங்களாற் பரிமளிக்கவும் மலர்ந்தவாத்திமரங்கள் பக்கங்களிலே நிழலைச்செய்யவும் அகில்விருக்ஷம் தாதுக்களாலும் அரும்புகளாலுங் குளிர்ச்செய்யவும் திருக்காவலூரில்வந்து சே

ர்ந்தாள். அப்படி வந்து சேர்ந்தபின்னர், அந்நங்கை நான்கொண்ட பாவங்களொழிய வெள்ளைச் சந்திரன் தரித்துக்கொண்ட தன்பாதங்களை யெனக்குத்தாராளோ? அழகிய வப்பாதங்களி னொளியை யென்மனமாரக்கண்டால் அந்தகாரநீங்கிப் பரிமளிக்கும் அத் தாமரைப்பாதங்களே யெனக்கு மேலானபரகதி யழகாகு மென்றவாறு.

1. "கண்டு" என்னும் வினையெச்சம், 2. "வடி" யென்னும் பெயரொச்சவினையைத், தன்னெச்சமாகக் கொண்டது. (சு௯)

(சித்து- அறுசீரடி யாசிரியவிருத்தம்.)

அந்தமிலா்வன்னமிலா வாடையிலாநல்குரவுற் றழனைந்தீர்காண்
சுந்தரனாநிழற்காவலூரிருக்கு மருஞ்சித்தன் றொழிலைக்கேண்மின்
1 இந்ததின்வெண்கலமூன்றுஞ் செம்பொன்றுங்2 கஞ்சத்தா ளிரண்டுஞ்சேர்த்திச்] [கண்டீர்.
சந்ததம்வெண் பித்தளையு மிரும் 3புஞ்செம் பொன்னாக்கித் தருவான்

(ப-ரை.) அன்னம்இல்லா - சோறில்லாத—ஆடைஇல்லா - உடையில்லாத—நல்குரவு - வறுமையை—உற்று - அடைந்து—அந்தம்இல்லா - முடிவில்லாமல்—அழல்-நெருப்பில்—நைந்தீர்-வருந்தினவர்களே—காண்-பார்க்கும்—நிழல்-செல்வத்தைக்கொண்ட—காவலூர் - திருக்காவலூரில்— சுந்தரனா-அழகனாக—இருக்கும்-இருக்கின்ற—அரும்-அருமையான—சித்தன் - சித்தனுடைய—தொழிலை-செய்கையை—கேள்மின் - கேளுங்கள்—இந்ததின்-கரியின்மேல்—வெண்-வெள்ளிய—கலம்மூன்றும்-மூன்றுஉண்கலங்களையும்—செம்பொன்றும் - ஒருசெப்புப்பானையினையும்—கஞ்சம் - வெண்கலத்தாலாகிய—தாள்இரண்டும் - இரண்டுதாழ்ப்பாள்களையும்—சேர்த்தி-சேர்த்து—வெண்பித்தளையும்-(அவற்றுடன்) வெள்ளைப்பித்தளையையும்—இரும்பும்-அயத்தையும்—சந்ததம்-எப்போதும்— செம்பொன்ஆக்கி - செம்பொன்னாகச்செய்து— தருவான்-கொடுப்பான் எ - று. கண்டீர், முன்னிலைப்பன்மையில்வரும் அசையிடைச்சொல்.

(பொ-ரை.) அன்னவஸ்திரமில்லாத வறுமையைக்கொண்டு முடிவில்லாம லுலைக்கள நெருப்பில்வருந்தினவர்களே! செல்வம்பொருந்தியதிருக்காவலூரி லழகனாகவிருக்கு மரியசித்தனது செய்கையைக் கேளுங்கள்: கரியின்மேல் மூன்றொளிவுள்ள கலங்களையு மொருசெம்பையு மிரண்டுவெண்கலத்தாட்பாளையும் வைத்து இவற்றோடு வெள்ளைப்பித்தளையையு மிரும்பையுமெப்போதுஞ்செம்பொன்னாகச்செய்துகொடுப்பான். எ - று.

(இதுசிலேடையாதலால்மற்றொருபொருள்வருமாறு.)

(ப-ரை.) நல்கு - (கடவுளால்) தரப்பட்ட—உரவு - அறிவை—உற்று-பொருந்தியும்—அன்னம்இல்லா - சோறுண்ணுமலும்—ஆடையில்லா - உடை

தரித்தில்லாமலும்—அழல் - நெருப்பில்—அந்தம்இல்லா - முடிவில்லாமல்—நைந்தீர் -வருந்தியவர்களே—கான் சுந்தரனு நிழற் காவலூ ரிருக்கும்-குளிர்ச்சியைக்கொண்ட திருக்காவலூரி லெவரும்பார்க்கு மழகனுகவிருக்கும்—அரும்-அருமையான—சித்தன் - ஞானியினது—தொழிலை - செயலை—கேள்மின்-கேளுங்கள்—இந்ததின் - சந்திரனாகிய—வெண் - வெள்ளிய—கலம்-அணியின்கண்—ஊன்றும் - ஊன்றிய—செம்பொன்-நற்பொன்னைப்போல—தும்-ஒளிவிடுகின்ற—கஞ்சம்-தாமரசபுஷ்பம்போன்ற—தாள் - (திருக்காவலூர்நாயகியினுடைய) பாதங்கள்—இரண்டும் - இரண்டிலும்—சேர்த்தி - சேர்த்து—சந்ததம்- எப்பொழுதும்—வெண்-அறிவில்லாமையாகிய—பித்தனையும் - பைத்தியங்கொண்டிருக்கிறவளையும்—இரும் - பெருமைபொருந்திய—புஞ்செம் - திரட்சியாகிய—பொன்-பொன்னைப்போல—ஆக்கி - செய்து—தருவான் - (நன்மையை) யருளுவான் எ - று. கண்டீர். முன்னிலைப்பன்மையில் வரும் அசை யிடைச்சொல்.

(பொ-ரை.) சட்வுளாலே தரப்பட்டவறிவையடைந்திருந்தும் சோறுண்ணுமலும் ஆடையணியாமலு முடிவில்லாமல் நெருப்பிலிருந்து தவஞானிகளென்று வருந்துபவர்களே! குளிர்ச்சியைக்கொண்ட திருக்காவலூரிலிருக்கு மருமையான ஞானியினது தொழிலைக்கேளுங்கள்: சந்திரனாகிய வெள்ளியவாபரணத்தின்மேலூன்றிய பொன்னையொத்து விளங்குவனவுந் தாமரைமலர்போன்றனவுமாகிய திருக்காவலூர்நாயகியின் பாதங்களிற்சேர்த் தெப்போது மறிவில்லாத பைத்தியகாரியையுந் திரண்ட பொன்னைப்போலாக்கி யவள்வேண்டிய நன்மைகளையருளுவான். இது வவன்செய்யுந் தொழிலென்றவாறு. [நீவிரவனிடத்திற் சென்றாலுங்களையு நல்லவராக்கி நீவிர்விரும்பிய நன்மைகளையும் அருள்வானென்றபடி.]

1. இந்தது - என்பதில்—அதாஎன்பதுபகுதிப்பொருள்விகுதி.

2. கஞ்சத்தாளிரண்டும் - என்பதற்கு— இரண்டுகைத்தாளத்தையுந்தாட்பாளையுமென முதலுரையிற் பொருள்கூறுதலுமொன்று. இப்படிக்கூறுங்கால் கஞ்சந்தாளென்பதின் நகரம்வலித்தல்விகாரம்பெற்றுவந்ததெனக்கொள்க.

3. சகமென்பது "செகம்" எனவும்-கஞ்சமென்பது "கஞ்செம்" எனவும் வருதல்போ லிங்ஙனம் புஞ்சமென்பதில்—எகரம் அகரப்போலியாய்வந்ததெனக்கொள்க. (௩0)

(சம்பிரதம் - கட்டளைக்கலித்துறை.)

ஈரிடத்தியத்தை வெட்டிடவெள்ளியா யீவன்றரா
நேரிடப்பித்தளைமாசறப்பொன்னென நேர்நிறையாய்
நீரிடும்வித்தைக் கிவையாக்கிக்காவலூர் நீர்த்தினிதா
ஞரியின்கண்ணிரந் துண்பெனிச்சம்ப்ரத நான்செயவே.

(ப - ரை.) நீர் - நிவிர்—தரா - தராவை—நேரிடு - ஒத்த—அப்பித்தளை - அந்தப்பித்தளையை—மாசுஅறு - குற்றமற்ற—அப்பொன்என - அந்தப்பொன்னென்றுகொள்ள—நேர்நிறையாய்- சரிநிறையாக—இடும் - கொடுக்கும்—வித்தைக்கு - வித்தையினிமித்தமாக— இடர்த்து - பெருமையையுடைய—ஈர்

ஈயத்தை - (காரீயம்வெள்ளீயமென்னு) மிரண்டீயத்தையும்—வெட்டிட- வெட்டிச்சோதித்துக்கொள்ளும்படி— வெள்ளியாய் - வெள்ளியாகவே—ஈவன்- கொடுப்பன்— இச்சம்பிரதம் - இந்தச்சித்தை— நான் - யான்— செய - செய்ய— இவை - இப்படிப்பட்டவைகளை— ஆக்கி - செய்து— காவலூர் - திருக்காவலூராகிய— நீர்த்து - குணத்தையுடையதலத்தை— இனிது - மேன்மையாக— ஆள் - ஆளும்— நாரியின்கண் - நங்கையிடத்தில்— இரந்து - யாசித்து—உண்பன் - புசிப்பன் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) (சம்பிரதஞ்செய்வேமென்பவர்களே!) தராவைப்போல வெண்மையாயிருக்கும் பித்தளையைக் குற்றமற்றதங்கமென்று கொள்ளச் சரியெடையாகக்கொடுக்கும் வித்தையையுடையவுமக்குக் காரீயம் வெள்ளீயமென்னு மிரண்டீயத்தையும் வெட்டிச்சோதித்துக்கொள்ளும்படி வெள்ளியாகவே கொடுப்பேன். நானிந்தச் சம்பிரதத்தைச்செய்ய விப்படிப்பட்டவைகளைச்செய்து திருக்காவலூரென்னுந் திருப்பதியையாளு நங்கையினிடத்தி லிரந்துண்பேனென்றவாறு.

இவ்வுரையில் a மாசுஅறு b அப்பொன் என்றது தங்கத்தையெனவறிக.

(இதனுட்பொருள்.)

(ப - ரை.) நேரிடு - (எமக்குச்) சம்பவித்த— அ - அந்த— 1 பித்தளை- ஆசைப்பெருக்கமும்— 2 மாசு - தரித்திரமும்—அற - நீங்க— பொன்னென- பொன்னருள்கவென்றிரப்போர்(கேட்க)—நேர்-(யார்க்கும்) உடன்பாடான— நிறையாய் - மாட்சிமையாக—நீர் - நீவிர்—இடும்-அவருக்குத்தரும்—வித்தைக்கு-(உமது) அறிவிற்காக—ஈரிடு-(உயிரை)யறுக்கும்—அ-அந்த—3தீயத்தை- பாவத்தை— வெட்டிட - அறுத்தொழிக்க— 4 வெள்ளியாய் -குருவாக—5தரா - (உமக்குத்) தராதவற்றை— ஈவன் - நான்தருவேன்— இச் 6 சம்பிரதம் நான்செய - இந்தஞானத்தை நானருளிச்செய்ய— இவையாக்கிக்காவலூர்நீர்த்து இனிதுஆள் நாரியின்கண் இரந்து உண்பன் -இப்படிப்பட்டவைகளைச்செய்து திருக்காவலூரென்னுங் குணம்பொருந்திய தலத்தை மேன்மையாயாளு நங்கையினிடத்தே யாசித்துப்புசிப்பேன். எ - று.

(பொ - ரை.) எமக்குச்சம்பவிக்கு மாசைப்பெருக்கமுந் தரித்திரமுநீங்க வெமக்குப் பொன்னருள்கவையாவென் றிரப்போர் கேட்க-யாவர்க்குமொப்பமான மாட்சிமையோடே யவர்க்குப் பொன்னைக் கொடுக்குந் தருமசிந்தனையான வறிவுள்ள வுமக்கு உயிரையறுக்கும்பாவத்தை யறுத்தொழிக்கக் குருவாகி உமக்குக் கொடாதவேதகாரியங்களை நான்தருவேன். இந்த வேதகாரியங்களை நானருளிச்செய்ய, இப்படிப்பட்டவைகளைச்செய்து திருக்காவலூரென்னுந்திருப்பதியை யினிதாயாளு நாயகியினிடத்தே யாசித்துப் புசிப்பேனென்றவாறு.

1. பித்தளைக்கு இரதியென்றொருபெயரும் இரதியென்பதற்கு ஆசைப்பெருக்கமென்னும் பொருளு முள்ளமையிற் - "பித்தளை" யென்பதற்கு "ஆசைப்பெருக்கமும்" எ - ம்.

2. மாசு - என்பதற்குச் சிறுமையென்றொருபொருளும் - சிறுமைஎன்பதற்குத் தரித்திரமென்னும்பொருளு முள்ளமையின் - "மாசு" என்பதற்குத் "தரித்திரமும்" எ - ம்.

4. வெள்ளியென்னுஞ் சுக்கிரனுக்கு ஆரியனென் றொருபெயரும் ஆரியனென்பதற்குக் குருவென்றொருபெயரு முள்ளமையின் - "வெள்ளியாய்" என்பதற்குக் "குருவாக" எ -ம்.

6. சம்ப்ரதம் என்பதற்குச் சித்தென்றொருபெயரும் சித்தென்பதற்கு ஞானமென்றொருபொருளுமுள்ளமையின் "இச்சம்ப்ரத" மென்றதற்கு இந்தஞானத்தை. எ - ம். இவ்வுரையிற் கூறினு மெனவறிக. இதுகுறிப்பு.

3. தீயதுஎன்னு மொழியீற்றுத் தகரமெய் "நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள்" என்றுதொடங்கிய நன்னூற்சூத்திரத்துள் "மிகவே"என்றவிதப்பானிரட்டிவந்தது.

5. தரா என்பது, வினைமுற்றாலணையும் பெயர். (ருக)

(நேரிசைவெண்பா.)

1 நானாதயைதளிர்ப்ப ஞானநிழல்குளிர்ப்பத்
தேனார்வரமரும்பச் சீர்கனிய - வானாரு
மஞ்சலிசெய்யுன்றா ளருட்காவனாயகியே
யெஞ்சிலதோர்சோலை யெனக்கு.

(ப-ரை.) காவல்- திருக்காவலூரிலெழுந்தருளிய—அருள்- கிருபையையுடைய—நாயகியே- இறைவியே—வானாரும்- வானவரும்—அஞ்சலிசெய்- வணங்கிய—உன்-நின்னுடைய—தாள்- பாதம்—எனக்கு- என்றனக்கு—நானா- பலவகைப்பட்ட—தயை- கிருபை—தளிர்ப்ப- துளிர்க்கவும்—ஞானம்- ஞானமாகிய—நிழல்-நிழல்—குளிர்ப்ப- குளிர்செய்யவும்—தேன்-தேனைப்போல—ஆர்- பொருந்திய—வரம்- வரங்கள்—அரும்ப-முகைப்பவும்—சீர்-நன்மை—கனிய- பழுக்கவும்—எஞ்சிலது- குறையில்லாததாகிய—ஓர்- ஒப்பற்ற—சோலை-சோலையேயாகும் எ-று.

(பொ - ரை.) திருக்காவலூரி லெழுந்தருளிய கருணாகரநாயகியே! வானுலகத்தாராலும் வணங்கப்படு முனது திருப்பாத மெனக்குப் பலவகைப்பட்ட தயைதளிர்க்கவும் ஞானநிழல் குளிர்செய்யவுந் தேனைப்போல வுயிர்க்கினிமையைச்செய்யும்வரங்களரும்பவும் நன்மைகள் பழுக்கவுங் குறையாதவொரு சோலையேயாகுமென்றவாறு.

I. தயையாகியகாரணம் - பாவிகளைமனந்திருப்பல் பிணிதீர்த்தல் முதலிய பலவாகக்காரியப்படுதலால் நாநாதயையென்றார். நாநாவென்பதை-நிழல்-வரம் - சீர் - என்பவற்றோடுங் கூட்டிக்கொள்க. (ருஉ)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

நக்கனமுத்தே யொப்பமுதைத்தே நக்குநிழற்கா காவனலூர்ப்
புக்ககொடிக்கே தக்கவெழிற் 1 கோர் பொற்புவமித்தே புகழ்வாரா

ரக்க 2 மலர்க்கே முத்துநகைக்கே யத்தமுதற்கே யரிதாகத்
தொக்களவிற்கே மிக்ககவிற்கே தொக்கவனைத்தே தோற்பனவே.

(ப-ரை.) நக்கன - விளங்கிய—முத்தேலப்ப - முத்துக்களையேநிகர்க்க—முனைத்து - அரும்பிட்டு—நக்கும் - நகைக்கும்—நிழல் - நிழலையுடைய—கா- சோலைகள்சூழ்ந்த— காவல்நல்லூர்- நல்லதிருக்காவலூரில்— புக்க-புகுந்த—கொடிக்கே - பூங்கொடியையொத்த தேவகன்னிக்கே— தக்க-தகுதியாகிய—எழிற்கு - (அவளுடையஞான) அழகுக்கு— ஓர் - ஒரு—பொற்பு - அழகை—உவமித்து - உவமானப்படுத்தி— புகழ்வார் - துதிப்பவர்—ஆர்- யாவர்— அக்கம் - அவளுடையகண்களாகிய—மலர்க்கே - தாமரைமலர்களுக்கே—முத்து நகைக்கே- பற்களாகியமுத்துகளுக்கே— அத்தமுதற்கே- கைமுதலியவற்றிற்கே—அரிதாக - உவமானப்பொருள் இல்லாததாக— தொக்குஅளவிற்கு - சரீரமட்டுக்கு—மிக்ககவிற்கே - மிகுந்தஅழகிற்கே— தொக்க - (உலகிற்) கூடிய—அனைத்து - யாவும்—தோற்பன - தோற்கும் (ஆதலால்) எ - று. ஏகாரம் நான்கும் - ஈற்றசைகள்.

(பொ-ரை.) விளங்கியமுத்துக்களையே நிகராகவரும்பிட்டு நகைக்கின்றனவும் நிழல்செய்வனவுமாகிய சோலைகளையுடைய திருக்காவலூரிற் புகுந்துதங்கிய பூங்கொடியையொத்த தேவகன்னிக்கேதகுதியாகிய வவளது ஞானவழகிற் கொன்றனழகை யுவமானப்படுத்திப் புகழ்பவர் யாவர்? அக்கன்னியினுடைய கண்மலர்கள் முத்துப்பற்கள் கைமுதலியவுறுப்புகளென்னுமிவற்று ளொவ்வொன்றற்கே யுவமானமில்லதாக வவளது சரீரசம்பந்தமானவழகிற்கே யுலகிற்றங்கியயாவுந் தோற்றுப்போகு மாதலாலென்றவாறு.

1. ஓர்பொருளையுவமித்தே புகழ்வாரா- ரென்னுது. "ஓர்பொற்பை" யென்றூர்- அழகென்றுலகிற் கூறப்படுமவற்றுள்ளு மொன்றை நிகராகச்சொல்லத்துணிவா ரொருவருமில்லையென்ப தறிவித்தற்கெனக்கொள்க.

2. "மலர்க்கே" "நகைக்கே" "அத்தமுதற்கே" "அளவிற்கே" என்பவற்றுள் ஏகாரங்கள் பிரிநிலைக்கண் வந்தன. (ருரு)

(மடக்கு-விருத்தக்கலித்துறை.)

1. அனமாடுந்தடவாயி னலமாடு2மடக்கோயின் மேலார்ந்த
கனமாடுங்கொடியாடக் கணமாடுமுடியாளைக் காண்பேனே
மனமாடுமறவாழி வடிவாகவறவாழி சேர்ந்தாடப்
புனமாடுந்திருக்காவற் 3 புனமாடிப்பெருக்காவ லாற்றேனே.

(ப-ரை.) அன்னம்- அம்ஸபக்ஷிகள்—ஆடும்- விளையாடப்பெற்ற—தடம் - பெருமைபொருந்திய—வாயில் - வாயிலையும்—மடம் - மடத்தையுமுடைய—நலம்- இன்பத்தை—ஆடு - செய்கின்ற—கோயில்மேல் - ஆலயத்தின்மேல்—ஆர்ந்த - தங்கிய—கனம் - மேகத்தினிடத்து—ஆடும்- ஆடிய—கொடி-துவசத்தைப்போல—ஆட - (நான்களிப்பினுற்) கூத்தாட—கணம்-நக்ஷத்திரங்கள்—

ஆடு-ஆடிய—முடியானை - முடியையுடைய (தேவதாயை)—காண்பேனோ - காணுவேனோ—மனம் - (என்) மனத்தில்—ஆடு-அசையும்—மறம்-பாவமாகிய—ஆழி-கடல்—வடிவாக - வடிந்துபோகவும்— அறம் - புண்ணியமாகிய—ஆழி-கடலை—சேர்ந்து-நெருங்கி—ஆட - (அதில்நான்) முழுகவும்—புனம்- தோட்டங்களை—ஆடும் - செய்யும்— திருக்காவல் - திருக்காவலூரிலுள்ள—புனம்-நீரில்—ஆடி - குளித்து—பெருகு - (இன்பத்தை) மிகுவிக்கின்ற—ஆவல்- (என்) ஆசையை - ஆற்றேனோ—தணிக்கேனோ எ - று.

(பொ-ள) அன்னங்கள் விளையாடப்பெற்ற பெரியவாயிலையு மடத்தையுங்கொண் டின்பத்தைச்செய்யுந் திருக்கோயிலின்மேற்றங்கி மேகத்திலாடுந் துவசங்களைப்போல நான் களிப்பினுற் கூத்தாட நக்ஷத்திரமுடியையுடைய தேவதாயைக்காணுவேனோ? என்மனத்திலுள்ள பாவக்கடல் வடியவும் புண்ணியக்கடலில் யான்முழுகவுந் தோட்டங்கள்தங்குந் திருக்காவலூரிலுள்ள நீரிற்குளித் தாசைதீரேனோ? வென்றவாறு.

1. அனம் என்பது தொகுத்தல்விகாரம்பெற்றமொழி.

2. மடம்-முனிவரிருப்பிடம்.

3. புனமென்பது நீரொன்னும்பொரு ளுருதலைப் "புனக்கரந்தழுவமேற் பொலியசீரியம்" "புனத்தெழுதிவைத்தபொரு ளொத்தவ்வேதம் புறத்தொழிந்தார்" என்னும் தேம்பாவணிப்பாட்டுறுப்புகளிற் காண்க. ஆங்கவை-எதுகை நோக்கி விகாரப்பட்டுவந்தனவெனி லீங்கிஃது மடக்குநோக்கி விகாரப்பட்டு வந்ததெனக்கொள்க. (ருச)

(வெளிவிருத்தம்.)

ஆற்றார்களிப்ப வினைத்தீயாற்றுமே னாயகியே
தேற்றார்தெளிப்ப மறைநூற்றேற்றுமா நாயகியே
மாற்றார்வினைநீத் துயிர்நோய்மாற்றுவா னாயகியே
யூற்றார்காவ னலூர்க்கின்பூற்றுமா நாயகியே.

(ப-ரை.) ஊற்று- நீரூற்று—ஆர்- பொருந்திய—காவல்நல்லூர்க்கு-திருக்காவலூர்க்கு— இன்புஊற்று - பேரின்பஊற்றாகிய— மா - செல்வம்பொருந்திய—நாயகி- இவ்விறைவியானவள்—ஆற்றார் - வருந்தினவர்—களிப்ப - மகிழ—வினைத்தீ - பாவமென்னுநெருப்பை—ஆற்றும் - தணிக்கும்— மேல்-மேன்மையையுடைய—நாயகி-இறைவியாகும்—தேற்றார் - தெளியாதாரை—தெளிப்ப - தெளிவுள்ளவராகச்செய்ய—மறைநூல்- வேதநூலைக்கொண்டு—தேற்று - தெளிவிக்கும்—மா - வல்லமைபொருந்திய—நாயகி - தலைவியாகும்—மாற்றார் - பகைவரின் — வினை - போரை—நீத்து - நீங்கி— உயிர் - ஆன்மாவினது—நோய் - பிணியை— மாற்று - தீர்க்கும்— வான்நாயகி - வானுலகவரசியாகும் எ - று. ஏகாரங்கள் அசைநிலைகள்.

(பொ-ள.) நீரூற்றுப்பொருந்திய திருக்காவலூர்க்குப் பேரின்பவூற்றாகிய செல்வநாயகியானவள், வருத்தப்படுவோர் மகிழப் பாவநெருப்

பைத் தணிக்கு மேலானவிறைவியாகும்: தெளிவில்லாதவர் தெளிவடை யவேதநூலாற் றெளிவிக்கும்வல்லமைகொண்ட தலைவியாகும்: உலகம் பேயுடலென்னுஞ் சத்துருக்களின்யுத்தத்தை விலகி யான்மாவின் வியாதியைத்தீர்க்கும் வானுலகநாயகியாகு மென்றவாறு.

முதன்மூன்றடி யீற்றிலுள்ளஏகாரங்கள் மூன்றையும் எண்ணுநிலைப்பொருவின வாகவும் நான்காமடியீற்றிலுள்ள ஏகாரத்தைத் தெரிநிலைப்பொருளதாகவுங் கொளினும்பொருளிழுக்காது. (ருரு)

(காப்பியக்கலித்துறை.)

மானரஞ்ச வஞ்சனிமண்பேய் மயலஞ்சக்
கானார்காவ லூரிடைகண்டே னொருமானை
மானாரேதோ வித்திறமென்றேன் மடமானாய்
வானோரேத்துங் கோளரியீன்றாள் வரத்தென்றார்.

(ப-ரை.) மானர் - பகைவர்கள்—அஞ்ச - பயப்படவும்— வஞ்சனி (மயல்) - பெண்ணால்வருமயக்கமும் - மண் (மயல்)— பூமியினால்வருமயக்கமும் பேய்மயல்—பிசாசத்தால்வருமயக்கமும் - அஞ்ச—பயப்படவும்-ஒருமானை—ஒருபெண்ணை - கான்—வாசனை - ஆர்—பொருந்திய - காவலூர்இடை—திருக்காவலூரினிடத்து - கண்டேன்—(நான்)பார்த்தேன்-மான்—இப்பெண்-ஆர்-யாவள் - இத்திறம்—இப்படிப்பட்டதன்மை - ஏதோ—(ஒருபெண்ணுக்கிருப்பதற்குக்காரணம்) யாதோ - என்றேன்—என்றுகேட்டேன் - மடம்—கந்யாஸ்திரிமடத்திற்கேயுரிய - மானாய்—கன்னியாகவேயிருந்து - வரத்து-(தான்) பெற்றவரங்களால் - வானோர்—வானுலகத்தாரால் - ஏத்தும்— துதிக்கப்படும் - கோளரி— சிங்கமாகியகடவுளை - ஈன்றாள்என்றார்— பெற்றவளிவளென்றார் (அங்கிருந்தவர்) எ-று.

(பொ-ரை.) என்னுடைய பகைவர்களும் பெண்மண் பேய்களால் வருமயக்கமும் அஞ்சிநீங்கும்படி யொருபெண்ணைத் திருக்காவலூரிற் கண்டேன். இந்தப்பெண்யாவள்? ஒருபெண்ணுக் கிப்படிப்பட்ட மேலானதன்மை யிருப்பதே?தென்று வியந்து கேட்டேன். மடத்திற்குரிய கந்யாஸ்திரியாய்த் தானடைந்த வரங்களால் வானோர்துதிக்குஞ் சிங்கமாகிய கடவுளைப்பெற்றவ ளிவளென்று ரங்கிருந்தவ ரொன்றவாறு.

பகைகொளுமுயர்திணைப்பொருளனைத்தோ டஃறிணைப்பொருளனைத்தையுந்தழீஇச் சிறப்பினால் "மானர்" என்றவர் மீளவும்"வஞ்சனிமண்பேய்மயல்" எனவிதந்ததென்னையோவெனின், பகையென்றது பெரும்பாலு மாத்துமப்பகை யென்ப தறிவித்தற்கெனவும், அவற்றுள்ளும் முன்னர்வஞ்சனி மயலென்றது இங்கேகாட்சிப்பொருள் பெண்ணுதலால் மாதரால்வருமய லஞ்சிற்றோவில்லையோவென்னு மையமறுத்தற்கெனவும், மண்பேய்மயலென்று பின்னர்க்கூறியது பெண்மகள் மகளிரால்வரு மயக்கத்தைத்தவிர்ப்ப தத்துணையருமையதன்று மற்றவற்றிலெத்துணையளோவென்று கருதாதபடியெனவுமறிக.

"வந்தது கொண்டுவராதது முடித்தல்" என்னுமுத்தியாற் கூறப்பட்டதெனக்கொண்டு மானுமொன்றதற்கு வஞ்சனிமண்பேய்மயலல்லாதபகையனைத்தையுங்கொளினுமிழுக்காது. இஃது அகத்தும் புறத்தும்பகைகொண்ட வொருபாவியானவ னிவ்வம்மனைக்கண்டகாலத் தவனிடத்து நிகழ்ந்த வதிசயத்தால்வியந்துரைத்ததாகக் கூறப்பட்டது. (ருசு)

(நேரிசை வெண்பா.)

தாராகத்தண்மதிப்பூந் தாளணியவென்னெஞ்சே
யாராய்ந்துநின்குறைகண் டஞ்சற்க - பாராயோ
வானுள்வாள்காவலூர் வந்தெழுந்தாடாளணியாக்
கூனுங்குறைமதியைக் கொண்டு.

(ப-ரை.) என்நெஞ்சே-என துமனமே—தண்-குளிர்ச்சிபொருந்திய—மதி-சந்திரனை மிதித்த—பூந்தாள் - தாமரைமலரையொத்த (தேவமாதாவினுடைய) பாதங்களை—தார்ஆக-மாலையாக—அணிய- நீயணிந்துகொள்ள—ஆராய்ந்து-ஆராய்ச்சிசெய்து—நின்குறை - உன்னிடத்துள்ளகுற்றத்தை—கண்டு - பார்த்து அஞ்சற்க - பயப்படாதே—வான் - வானுலகத்தை—ஆள்வாள் - ஆள்பவளாகியவத்தேவதாய்—கூன்ஆம் - வளைவாகிய—குறை - குறையையுடைய—மதியை - சந்திரனை—தாள்அணியா - பாதவணியாக—கொண்டு - பெற்று—காவலூர்வந்து - திருக்காவலூரில்வந்து—எழுந்தாள் - ஆலயத்திலெழுந்தருளினாள்—பாராய் - (அதனை) நீபார் எ - று. ஓகாரம் அசை.

(பொ - ரை.) என்மனமே! தேவதாயின் சந்திரனை மிதித்த திருவடித்தாமரைகளை மாலையாக நீயணிந்துகொள்வதற்காராய்ந் துனதுகுறைவைக்கண்டு நீயஞ்சாதே. வானுலகத்தையாள்பவளாகிய வவ்வன்னை வளைவாகிய குறைபொருந்திய சந்திரனைக்காலணியாகக் கொண்டு திருக்காவலூரில் எழுந்தருளினாள். அதனை நீ பாரென்றவாறு.

குறைமதியை யவள் தாளணியாக வணிந்துகொண்டமையா லுன்னிடத்துள்ளகுறையையுங் கருதாள் நீயவள்பாதங்களைத் தாராகவணிந்துகொள்ளென்பதுகருத்து. இக்கருத்துக் குறிப்பினாற் றோன்றலா லிது வுதாரவணி. (ருஎ)

(தாழிசை.)

கொண்டலாடிவிலங்கல்கொண்ட குளிர்ந்தகொண்டல்பரந்[1]தெழாக்
கொடி[2] படர்ந்துவளர்ந்த [3] முல்லை[4]நகைத்துவாசமுகைத்துரா
யுண்டதேறலுமிழந்தகொம்ப ரொசிந்துவண்டுமுழங்கலோ
டுளியொருங்குமகிழ்ந்துகான [5] முகைத்துநீரியகாவலூர்
விண்டளங்கள்விரும்பியண்டி விளங்கிமண்டிவிசும் [6] புலாம்
விதுவணிந்தபதங்கடாழ விழைந்துபாடவணங்கிநா
மண்டநூலிவியந்தசூலி விரிந்தசீலிவழங்குதே
வரியமாரிபரந்தவாரி புரந்தநாரிதொழேங்கொ[7]லோ.

(ப-ரை.) விலங்கல்- மலைகளை—கொண்ட - தமக்கிடமாகக்கொண்ட—குளிர்ந்த- தண்ணிய—கொண்டல்- மேகங்களானவை—கொண்டல் - கீழ்காற்றால்—ஆடி- அசைந்து—பரந்து-பரவி—எழா- எழும்ப—கொடி-கொடிகள்—படர்ந்து-பரவி—வளர்ந்த-உயர்ந்த— முல்லை-முல்லைகளினுடைய—நகைத்து-மலர்ந்து—வாசம்-பரிமளத்தை—உகைத்து-செலுத்தி—உராயுண்ட-(ஒன்றுடனொன்று)தேயுண்ட—தேறல்-தேனை— உமிழ்ந்த - சொரிந்த—கொம்பர்-பூங்கொம்புகளில்—வண்டு-தும்பிகள்—ஒசிந்து-அசைந்து—முழங்கலோடு-பாடுதலுடனே—உளிஒருங்கு-இடமெல்லாம்—மகிழ்ந்து-களித்து—கானம் - இசைகளை—உகைத்து-செலுத்த—சீரிய-குணம்பொருந்திய—காவலூர்-திருக்காவலூரில்—விண் - வானுலகத்திலுள்ள—தளங்கள்-சம்மனசின்கூட்டங்கள்—விரும்பி- மகிழ்ந்து - அண்டி- (வந்து) நெருங்கி—விளங்கி - பிரகாசித்து—மண்டி-நெருங்கி—விசும்பு- ஆகாயத்தில்—உலாம்-உலாவும்—விது- சந்திரனை—அணிந்த- (பாதுகமாக) வணிந்த—பதங்கள்• (அவ்வூராசியின்) பாதங்களை— வணங்க-வணங்குபவர்களாயிருக்கவும்—விழைந்து- மகிழ்ந்து—பாட-(அவளைத்துதித்துப்பாடுபவர்களா) யிருக்கவும்—அண்டம் - வானுலகத்திற்குரிய—நூலி-(வேத) நூலையுடையவளும்—வியந்த-வியக்கப்பட்ட—சூலி- கர்ப்பத்தையுடையவளும்—விரிந்த- விளங்கிய—சீலி - ஞானவொழுக்கமுடையவளும்—வழங்கு-நன்மையைப்பொழியும்—அரிய-அருமையான—தேமாரி-தேவமேகமும்—பரந்த- வரம்பெருகிய—வாரி- கடலுமான—புரந்த -(இவ்வுலகத்தைக்) காத்த—நாரி- அன்புள்ளநங்கையை—நாம்- இவ்வுலகத்திலுள்ளநாம்—வணங்கி - தாழ்ந்து—தொழேம்ஓ - கும்பிடவில்லை யிதென்னமதி எ-று. கொல் அசை.

(பொ - ரை.) மலைகளைத்தமக்கிடமாகக்கொண்ட குளிர்ந்தமேகங்கள் கீழ்காற்றாலசைந்து பரந்தெழும்பக்கண் டங்கே கொடிகள்படர்ந்து வளர்ந்தமுல்லைகளின் (வாசனைவீசி யொன்றோடொன் றுராயப்பட்டனவுந் தேனைச்சொரிவனவுமாகிய) பூங்கொம்புகளின்மேல் வண்டுகள்பாட்டுமுழங்குதலுடனே யிடமெல்லா மகிழ்ந்திசைகளைப்பாடச் சிறப்புப்பொருந்தியதிருக்காவலூரில் வானுலகிலுள்ள சம்மனசின்கூட்டங்க ளாசையுடனேவந் தவ்வூராயாளுமரசியின் (சந்திரனைமிதித்த) பாதங்களை வணங்கி யன்புடன்துதித்துப் பாடுகையில் வானுலகிற்குரிய வேதநூலையுடையவளும் அதிசயிக்கத்தக்க கருப்பமடைந்தவளும் விளங்கியஞானவொழுக்கத்தையுடையவளும் நன்மையைப்பொழியுந் தெய்வீகமேகமும் வரம்பெருகியகடலுமா யிவ்வுலகத்தைக்காத்த வன்புள்ள வந்நாயகியை யிவ்வுலகத்திலிருக்கு நாம்வணங்கிக் கும்பிடாமலிருக்கின்றோம் ஐயோ விதென்னபேதைமை? யென்றவாறு.

1. எழாஎன்பதும், 5 உகைத்து என்பதும் வினையெச்சத்திரிபுகள்.

2. செய்து என்னும்வாய்பாட்டில்வந்த "படர்ந்து" என்னுஞ்சினைவினை வளர்ந்த "வென்னுமுதல்வினையோடு முடிந்தது ஒற்றுமையுண்மையின்.

3. "முல்லை" யென்பதின் ஆறும்வேற்றுமைத்தொகை- "கொம்ப" ரென்னும்பெயரைக்கொண்டது. இவற்றிடையிலுள்ள "நகைத்துவாசமுகைத்துராயுண்டதேறலுமிழ்ந்த" வென்பதுஇடைப்பிறவரல்.

4. நகைத்துஎன்றதுபண்பாகுபெயர்.

6. "உலாம்" என்றது;ஈற்றுயிர்மெய்சென்ற செய்யுமென்னும்வாய்பாட்டுப்பெயரெச்சம்.

7. ஓகாரம் அதிசயவிரக்கப்பொருளில்வந்தது.

முல்லைபூத்தற்குரியகாலங் கார்க்காலமாயினுந் திருக்காவலூரிடத்தே மற்றைக்காலத்தும் புட்பிக்குமென்பார் கார்காலத்துக்குரிய வாடைக்காற்றையும் அக்காலத்தில் மேகந்திரிதற்குத் தானமாகிய வாசாயத்தையுங் கூறாது முன்பனிக்காலத்திற்குரிய கீழ்காற்றையு மாரிகாலமல்லாத மற்றைக்காலத்தில் மேகமடைந்திருத்தற்குரிய மலையையுஞ்சுட்டிக் "கொண்டலாடி" எனவும் "விலங்கல்கொண்ட" எனவுங்கூறினாரெனவறிக. (கஅ)

(தென்றல் - பதினான்குசீரடியாசிரியவிருத்தம்.)

கொல்லாவலர்ந்தபடநிழனாடிக் கொண்டெலிகளுந்துபுக்கொடுங்கக் [துத்
கொழுந்தழல்புழுங்கிப்பேயின்றேருந்திக் கொதித்துலாஞ்சுடுவனச்சுரத்
தொல்லாவிஞ்சுந்திருவடியாளே துன்னியவேல்லையவ்வனமே
தொடையணிபூண்டமணமகளாகத்1தொகைநகைமுகநகைத்துவப்ப
வொல்லாவருவித்தீம்புனலோட வொசித்து2வண்டினங்கள்யாழொலிப்ப
வுயர்குயில்பாடத்துணைமயிலாட வுலாவியநறுஞ்சிறுகாலே
செல்லாவொளிப்பத்திருப்புகழ்தொழுமத்தெரிவையாள்காவலூரெய்தித்
தீவினையழற்றுமென்மனங்குளிர்ப்பத் தென்றலேயூர்தியோய்விலவே.

(ப - ரை) தென்றலே - தென்றற்காற்றே—தொல்லா - பழமையாக—விஞ்சும் - மிகுந்த—திரு - சிறப்பினையுடைய—அடியாள் - பாதங்களையுடைய தேவதாய்—எலி - எலிகளானவை—கொல்லா - (நெருப்பு)தம்மைக்கொல்லாமல்—அலர்ந்தபடம் - (பாம்புகளின்) விரிந்தபடங்களாலுண்டாகும்—நிழல்-நிழலை— நாடிக்கொண்டுவந்து - தேடிக்கொண்டுவந்து— புக்கு - அதிற்புகுந்து—ஒடுங்க - அடங்கும்படி—கொழுந்தழல் - செழியநெருப்பானது—புழுங்கி - வெப்பமாகி— பேயின்தேர் - கானலை— உந்தி - செலுத்தி—கொதித்து-கோபித்து—உலாம் - உலாவப்பெற்ற—சுடு - சுட்ட—வனம் - வனமாகிய—சுரத்து - பாலைநிலத்தை— துன்னிய - நெருங்கிய— ஏல்வை - காலத்தில்—அவ்வனமே - அந்தப்பாலைவனமே— தொடை - மாலையையும்—அணி - ஆபரணங்களையும்—பூண்ட - அணிந்த— மணமகளாக - கல்யாணப்பெண்ணாக—தொகை - கூட்டமாகிய— நகை - ஒளியையுடைய— முகம் - முகத்தில்—நகைத்து - சிரிப்பையுடையதாகி— உவப்ப - மகிழவும்— ஒல்லா - (அவ்விடத்திற்கு) இயலாத— அருவி - அருவியாறுகிய— தீம்புனல் - மதுரம்பொருந்தியநீரானது—ஓட - செல்லவும்—வண்டினங்கள் - வண்டுக்கூட்டங்கள்—ஒசித்து - (புட்பங்களை) யசைத்து— யாழ்ஒலிப்ப - வீணைவாசிக்கவும்— உ

யர் - மேன்மையையுடைய—குயில் - கோகிலங்கள்—பாட - பாடவும்—து ணை - துணையாக— மயில் - மயில்கள்— ஆட - ஆடவும்— உலாவிய - (அங் கேவந்து) உலாவிய— நறுஞ்சிறுகால் - நல்லதென்றல்— செல்லா - வழங்கா மல்— ஒளிப்ப - மறைந்துபோக— திரு - சிறப்புப்பொருந்திய— புகழ் - பு கழையுடைய— தொழும் - (வானவரால்) வணங்கப்பட்ட—அ - அந்த—தெ ரிவை - நங்கையால்— ஆள் - ஆளப்படும்— காவலூர் - திருக்காவலூரை— எய்தி - அடைந்து— தீவினை - பாவங்களால்— அழற்றும் - சுடப்படும்— எ ன் - எனது— மனம் - மனசை— குளிர்ப்ப - குளிர்க்க— ஓய்வில - ஓய்வில் லாமல்—ஊர்தி - தவழ்வை எ - று. ஏகாரம் நான்கும் - அசைகள்.

(பொ-ரை.) தென்றற்காற்றே! தொன்மையாய் மிக்க சிறப்பினையு டைய பாதங்களைக்கொண்ட தேவதாய் எலிகள் வெயிலாற் கொல்லப்ப டாமல் நிழலைத்தேடி யலைந்து பாம்புகள் விரித்தபடநிழலிற் புகுந்தொது ங்கும்படி நெருப்பெழும்பிக் கானலைத்தந்து கொதித்துலாவச் சுட்டிருந் த பாலைவனத்தை யண்டினபோ தவ்வனமானது மாலையையு நகையினை யுமணிந்த வொருகல்யாணப்பெண்ணாக வொள்ளியமுகத்திற் சிரிப்பு டையதாய் மகிழவும் அருவியாறுகிய நன்னீரோடவும் வண்டினங்கள் ம லரை யசைத்து வீணைவாசிக்கவுங் குயில்கள்பாட்வுந் துணையாக மயில்க ளாடவு மங்கேவந் துலாவின நல்லதென்றற்காற்று வழங்காமல்மறையு ம்படி நீவானவர் புகழ்ந்து வணங்கு மத்தேவதா யரசாளுந் திருக்காவலூ ரிற்சென்று பாவங்களாற் சுடப்படு மென்மனத்தைக் குளிர்க்க வெப் போதுமென்மனத்தி லூர்வையாக வென்றவாறு.

1. "தொகை நகை முகநகைத்துவப்ப" என்பதுசிலேடை யாதலால் உ ருவகப்பட்ட மணமகளின் குணத்தை யன்றி யவ்வனத்தின் குணத்தைக் கூ றுங்கால் தொகுக்கப்படு மிழிவைக்கொண்ட இடமெல்லா மலரப்பெற்றுமகி ழவும் எனப்பொருள்கூறுக. இதில் நகைத்து என்பது பண்பாகுபெயர்.

2. "வண்டினங்கள் யாழொலிப்ப" என்பது - குறிப்புருவகம்.

3. தேவமாதாவின் பாதங்கள் பாலைவனங் குளிர்தன்மாத்திரத்தானல்ல அதன்முன்னர்த்தானேசந்திரன் தாங்கவும் வானவர்வணங்கவுஞ் சிறந்தன வென்பது தோன்றத் "தொல்லாவிஞ்சுந் திருவடியாளே" எ-ம் அவ்வனத்தில் நன்னீரோடன் முதலியனவதிசயமென்பது தோன்ற- "ஒல்லா" எ-ம் அப்பா லையினு மென்மன மதிகவெப்பமுடைத்து இதனைக்குளிர்ப்பி னத்தென்றலின் பெயர் வழங்காமல்மறைந் துன்பெயர் மாத்திரமே வழங்குமென்பது தோ ன்ற "என்மனங் குளிர்ப்பத்தென்றலே யூர்தியோய்விலவே"எ-ம் "சிறுகாலே செல்லாவொளிப்ப" எ-ம் கூறினரெனவறிக. (ருக)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

1. ஓயவணங்கிட்டோயநெடும்பிணி யோயவுடன்றிடுபேய்
காயவருந்தியகாமவருந்துயர் காதலழுங்கியநோய்

தேயவழங்கியதேகமலங்கொடு தீயவொருங்கறவே
நேயவணங்குறைகாவனலூர்நிழ னேடிவதிந்துறைவீர்

(ப-ரை.) அணங்கு - அச்சத்தைச்செய்கின்ற— இடர் - (வறுமைமுதலிய) துன்பம்— ஓய - ஒழியவும்— நெடும் - நாட்பட்ட— பிணி - வியாதி— ஓய - ஒழியவும்— உடன்றிடு - போர்செய்கின்ற— பேய் - பிசாசம்—ஓய-ஒழியவும்— காய - மெலிய— அருந்திய - (தன்னையுடையாரை) யுண்ணும்— காமம் - காமநோயாலுண்டாகும்— அருந்துயர் - அருமையானதுன்பமும்— காதல் - ஆசையாகிய— அழுங்கிய - அழுதற்கேதுவாகிய— நோய் - வியாதியும்— தேய - குன்றவும்— வழங்கிய - சொல்லப்படும்—தேகம் - உடலின்சம்பந்தமான— மலம் - (சோம்பல்முதலிய) அழுக்குகளும்— கொடு - கொடுமையான— தீய - மற்றைப்பாவங்களும்— ஒருங்கு - ஒருமிக்க— அற - ஒழியவும்— நேயம் - அன்பையுடைய— அணங்கு - தெய்வப்பெண்ணாகிய தேவமாதா—உறை - வாசஞ்செய்யும்— காவனலூர்-திருக்காவலூரினது— நிழல் - நிழலை— நேடி - தேடி— வதிந்து - (அதிலே) தங்கி—உறைவீர்-வாசஞ்செய்வீராக எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) அச்சத்தைத் தரும் வறுமை முதலிய துன்பமு நாட்பட்ட வியாதிகளும் போர்செய்யும்பிசாசமு மொழியவுந் தன்னையுடையவர் மெலியும்படியுண்ணுங்காமநோயாலுண்டாகு மரிய துன்பமு மாசையென்னும்பிணியுங் குன்றவும் சோம்பல்முதலிய தேகமலங்களுங் கொடுமையான மற்றைப்பாவங்களு மடியோடறவும் நீவிர்யாவரு மன்புள்ள தேவமாதா வாசஞ்செய்யுந் திருக்காவலூர்நிழலைத்தேடி யங்கேதங்கி வாசஞ்செய்வீராக வென்றவாறு.

1. "ஓய" வென்பது பின்னருங்கூறப்பட்டமையின் இதுசொற்பொருட்பின்வருநிலையலங்காரம். (௬0)

(ஊசல்-எண்சீரடியாசிரியவிருத்தம்.)

உறைவழங்குங்காவனலூ ரரசாளீன்ற
வொப்பிலநூலோனடிதாழ்ந் தரும்பாவல்லீர்
துறைவழங்குஞ்சீ1ரொழுத்தே யசையிற்றீட்டித்
தொடைவிருத்தங்கட்டி 2 லடிப் பந்தம்பூட்டி
நறைவழங்குங்கலிவெள்ளைச் 3 சவரம்வீச
நாளுமருட்பாவைமகற் காட்டிரூசல்
முறைவழங்குந்தாழிசையால் வஞ்சிபாட
மொய்த்த 4 மயிலகவலினே டாட்டிரூசல்.

(ப - ரை.) அரும் - அருமையான— பாவல்லீர் - பாவில்வல்லபுலவர்களே—உறை-மழை—வழங்கும்-(உரியகாலங்களிற்) சொரியப்பெற்ற—காவனலூர் - திருக்காவலூரில் வீற்றிருக்கும்—அரசாள் - நாயகி—ஈன்ற - பெற்ற—

ஒப்புஇல் - நிகரில்லாத—நூலோன் - வேதநூலைத்தந்த கடவுளினுடைய—அடி - பாதங்களை—தாழ்ந்து - வணங்கி—துறை - இடங்கள்தோறும்— வழங்கும் - இயங்கும்—சீர் - (அவனது) புகழென்னும்— எழுத்தே - அக்ஷரத்தையே—அசையில் - அசையாக—தீட்டி - எழுதி—தொடை - தொடுக்கப்பட்டதாகிய—விருத்தம் - விருத்தமென்னும்—கட்டில் - மஞ்சத்திற்கு— அடி - அடிகளாகிய—பந்தம் - கயிற்றை—பூட்டி - தொடுத்து—நறை- (அப்புகழாகிய) வாசனையை—வழங்கும் - தரும்—கலி - கலிப்பாவும்— வெள்ளை - வெண்பாவுமாகிய—சவரம் - வெண்சாமரைகள்—வீச - வீசப்பட—நாளும்-எப்போதும்—அருள் - கிருபைபொருந்திய—பாவை - நங்கையாகிய திருக்காவலூரரசியினுடைய— மகற்கு - சுதனாகியவக்கடவுளுக்கு— ஊசல் - ஊஞ்சலை—ஆட்டிர் - ஆட்டுங்கள்—முறை- அவனுடையகுணங்களை—வழங்கும்-சொல்லும்—மொய்த்த - (அலங்காரங்கள்) கூடிய— மயில் அகவலினோடு - மயிலினது குரல்போல்வதாகிய ஆசிரியப்பாவுடன்—தாழிசை - தாழிசைகளும்—வஞ்சி-வஞ்சிப்பாமுதலியவைகளும்— பாட - பாடப்பட— ஆட்டிர்ஊசல் - ஊஞ்சலாட்டுங்கள் எ - று. ஆல் - அசை.

(பொ-ரை.) சித்திரமுதலருமையான கவிகளைப்பாடவல்லபுலவரே! யுரியகாலங்களிலெல்லாந் தப்பாதுமழைபொழியப்பெற்றதிருக்காவலூரில் வீற்றிருக்கு மோக்ஷராக்கினியீன்றருளிய (வொப்பில்லாத வேதநூலைத்தந்த) கடவுளின்பாதாரவிந்தங்களைப் பணிந் தெங்கும்பரந்த வவனது புகழென்னுமெழுத்தையே யசையாகவெழுதித் தொடுக்கப்படுவதாகிய விருத்தமென்னுங் கட்டிற்கு அடிகளென்னுங் கயிற்றைப்பூட்டி யப்புகழாகிய பரிமளத்தைவீசுங் கலிப்பாவெண்பாவென்னும் வெண்சாமரம் போட வெப்போதுங் கிருபையைக்கொண்ட வத்திருக்காவலூரரசியின் சுதனை வக்கடவுட் கூஞ்சலாட்டுங்கள். அவனுடைய குணங்களைச் சொல்லு மலங்காரம்பொருந்திய வகவற்பா தாழிசை வஞ்சிப்பாமுதலியவற்றையும்பாட வூஞ்சலாட்டுங்க ளென்றவாறு.

I. எழுத்தே யசையாக்கப்பட்டதுபோலச் சீர்தளையடிதொடைகளாக்கப்படுதற் கசைகள்காரணமா யிருத்தல்பற்றிச் "சீரெழுத்தேயசையிற்றீட்டி" என்றபின்னர்ச் சீர்தளைமுதலிய செய்யுளுறுப்பைக்கூறாது "தொடைவிருத்தங்கட்டி" லென்றார். எனவே விருத்தமுதலிய வெல்லாம் புகழென்னு மெழுத்தின்பெருக்க மென்பதும் ஆட்டிரூசலென்பது கவிபாடுமென்பது முணர்த்துகின்றன.

2. விருத்தத்தைக் கட்டிலாக வுருவகஞ்செய்தவர் அடிகளைக் கயிறுகளாகவுருவகஞ் செய்ததென்னை விருத்தங்கட்கெல்லா மடிகள் நான்கேயாதலினந்நான்கையு நான்குகயிறுகளாக்கிக் கொளின் மஞ்சமென வேறில்லையேயெனின்,அற்றன்று: அவ்விருத்தவடிகளாகிய கயிற்றை யென்னாது அடிப்பந்தமென்று வாளாகூறினமையான் அம்மஞ்சமாகிய விருத்தத்தோடு குளகவாற்றலேனு மக்கடவுளின் புகழைக் கூறுதன்மாத்திரத்தா லேனுஞ் சம்பந்தப்படும்

வேறுவிருத்தவடிகளையே கயிறுகக் கூறிஞரெனவறிக. ஒருமுழுவிருத்தங்கட்டில் ஒவ்வொரு முழுவடி யொவ்வொருபந்தமெனனுமையால் ஒன்றும்பலவுமாகிய விருத்தங்களி லொருபங்கைக் கட்டிலாகவு மற்றொருபங்கைக் கயிறுகளாகவுங் கொளினு மமையும்.

3. காற்றைவழங்குஞ் சாமரை யென்றது நறைவழங்குமென்றார், நறையைப்புலப்படுத்தற்குத் துணைக்காரணங் காற்றுதலின். சவரங்களென்பவையெல்லாமொருவகைப் பொருளாதலின் சவரங்களாக வுருவகஞ்செய்தவையுமொருவகைப் பாக்களாவிருக்கவேண்டியிருக்கக் கலிவெள்ளையென விருவகைப்பாக்களைக் கூறியதென்னையோ வெனின், ஏந்திசைவெண்பாச்சீர்க்குங் கலித்தளைச்சீர்க்குமுள்ள வபேதங்களை நோக்கியென்க.

4. மயிலவகல் என்பது அன்மொழித்தொகை.

இச்செய்யுளில் எழுத்தசைசீர்பந்தமடிதொடையென்னுஞ் செய்யுளுறுப்பாறும் வெள்ளை யகவல் கலி வஞ்சி மருட்பாவென்னு மைம்பாவுந் துறை தாழிசை விருத்தமென்னு மூன்றுபாவினங்களுந் தொனித்தலுமன்றித் "தாழிசையால் வஞ்சிபாட" என்பதில் தாழ்ந்த விசையாற்பெண்பாட" என்பது தொனித்தலுங்காண்க. (சுக)

(இதுவுமது.)

ஆட்டியருட்செல்வியெனும் 1 தேவதாயா
மருங்கன்னிநலம்பாடி யாட்டிரூசல்
காட்டியநற்றவவீட்டிற் பொறிகளென்னுங்
கதவடைத்தேயொழுக்கத்தாள் கடுகிப்பூட்டி
யீட்டியதேவருள்விரித்த வுளத்தின்மஞ்ச
மேந்தியவன்பெனுங்கயிறிட் டாட்டிரூசல்
நாட்டியசெல்வத்திணையாக் கவலூரா
ணங்கைதிருப்புகழறைந்தே யாட்டிரூசல்.

(ப - ரை.) ஆட்டி - தலைவி— அருட்செல்வி - அருளாகிய செல்வத்தையுடையவள்—எனும் - என்றுசொல்லப்படும்— தேவதாயாம் - தேவமாதாவாகிய— அருங்கன்னி - அருமையான கன்னியினுடைய— நலம் - உபகாரங்களை—பாடி - பாடுதலைச்செய்து— ஆட்டிர்ஊசல் - ஊஞ்சலாட்டுங்கள்— காட்டிய - காண்பிக்கப்பட்ட— நல் - நல்ல—தவம் - தவமென்னும்—வீட்டில்- இல்லின்கணிருந்து—பொறிகள்என்னும்- (உடலாதிஐம்) பொறிகளென்கிற— கதவு - கபாடங்களை— அடைத்து - சாத்தி— ஒழுக்கம் - (ஞான) வொழுக்கம்என்னும்— தாள் - தாட்பாளை— கடுகி - விரைந்து— பூட்டி - செறித்து— ஈட்டிய - சேர்க்கப்பட்ட— தேஅருள் - தேவகிருபையென்னுந் (துப்பட்டி) — விரித்த - விரிக்கப்பட்ட— உளத்தின்மஞ்சம்- மனமென்னுங் கட்டிற்கு—ஏந்திய - தாங்கிய—அன்புஎனும் - அன்பென்கிற—கயிறு - கயிற்றை—இட்டு - பூட்டி—ஆட்டிர்ஊசல் - ஊஞ்சலாட்டுங்கள்— நாட்டிய- நிலைபெறுத்தப்பட்ட— செல்வத்து - செல்வங்களினாலே— இணையா - நிகரில்லாத— காவலூர் - திருக்காவலூரை— ஆள் - ஆள்கின்ற—நங்கை - மாதரசியினுடை

ய—புகழ் - கீர்த்தியை— அறைந்தே - பேசியே— ஆட்டிரூசல - ஊஞ்சலாட்டுங்கள் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) வானவர்முதல்வி யருட்செல்வியென்று சொல்லப்படுந் தேவமாதாவாகிய வருமைக்கன்னியி னுபகாரங்களைப்பாடி யூஞ்சலாட்டுங்கள். யார்க்குமுணர்த்தும் நலதவமென்னும் வீட்டிலிருந்து மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறியாகிய வதன் கபாடங்களை யடைத்து மெய்ஞ்ஞானமென்னுந் தாட்பாளிட்டுச் சேர்த்த தேவருளென்னுந் துப்பட்டிவிரிக்கப்பட்ட மனமென்னுங் கட்டிலின்க ணன்பென்னுங் கயிற்றைப்பூட்டி யூஞ்சலாட்டுங்கள். கொண்டவழியாத செல்வத்தால் நிகரில்லாத திருக்காவலூரை யாளுநாயகியின் கீர்த்தியைப்பேசி யூஞ்சலாட்டுங்க ளென்றவாறு.

1. கன்னியெனவாளாகூறாது "தேவதாயாமருங்கன்னி" யென்றார்- மேலார்தவத்தாலுந் தேவவரங்களாலும் விளங்கு மற்றக்கன்னிகளைப்போலா துலகெலாமீன்ற வொருவனையீன்றுங் கன்னிமாறுமல் விளங்குமருமையுள்ளாளிவளென்பது தோன்றும்படியெனவறிக. (கூஉ)

(நேரிசைவெண்பா.)

ஊசல்கொண்டாடி யுயிர்வருந்தயாவருமே
பாசங்கொண்டாடுமவாப் பட்டலைவார் - பூசல்கொண்
டார்த்திடமேலோர்புகழு மன்னையாள்காவனலூர்
1நீர்த்தடமே2யாடாநிலைக்கு.

(ப - ரை.) யாவரும்-அனைவரும்—பூசல்கொண்டு - (தம்பாவத்தைக்) கழுவுதல்கொண்டு— ஆர்த்திட - விளங்க— மேலோர் - வானவரால்— புகழும்-துதிக்கப்படும்—அன்னை - தேவமாதாவால்— ஆள் - ஆளப்படும்—காவனலூர் - திருக்காவலூரில்— நீர் - நீரையுடைய— தடம் - தடாகத்தில்— ஆடா-ஸ்நானஞ்செய்யாத—நிலைக்கு - தன்மைக்கு—உயிர்வருந்த- (தம) துயிர்வருந்தும்படி—ஊசல்கொண்டு- (பாவமென்னு) மூஞ்சலைக்கொண்டு— ஆடி- (அதி) லாடி—பாசம் - பிசாசம் - கொண்டாடும் - மெச்சும்—அவா - ஆசையில்—பட்டு - அகப்பட்டு— அலைவார் - வருந்துவார் எ - று. ஏகாரம் இரண்டும்-அசைகள்.

(பொ ரை.) யாவருந் தம்பாவத்தைக்கழுவி விளங்கும்படி சம்மனசுகளாற் றுதிக்கப்படுந் தேவமாதா வாளுந் திருக்காவலூரிற் குணத்தைக்கொண்ட திருச்சபையிலே ஞாநஸ்நாநம்பெறாத பக்ஷத்தில், தமதுயிர்வருந்தும்படி பாவமென்னு மூஞ்சலிலாடிப் பேய்கள்கொண்டாடு மாசையுடையவராய் வருந்துவாரென்றவாறு.

1. இங்கே "நீரென்பது குணம் ஆதலால்" நீர்த்தடமென்பது குணத்தையுடைய திருச்சபை. 2. ஆடாநிலை- ஞானஸ்நான முடியாததன்மை. (கூங)

(தாழிசை.)

நிலையானதிலையென்று நிலையாகநின்று
ணிகராதவருள்கொண்டு துணையாயதிலதேற்
சிலையானமலைநைந்து சிதராடிநலியத்
திரையானகடனின்று திடனாகநிலையா
வலையாதநிலமென்று 1 நடவாய 2 தறிவே
3 லலராரு 4 நிழல்கொண்டு வளர்காவலமரூர்த்
தலையானவனையென்று தமியோருமலையாத்
தயவாகநிலைதந்து 5 திதியாகவெளிதே.

(ப-ரை.) துணை - சகாயத்தையுடைய— ஆய் - தேவமாதா— நிலையான து - ஸ்திரமானதுணை— இலையென்று - (இவ்வுலகத்தில் நமக்கு) இல்லையென்று(இரங்கி)—நிகராத - ஒப்பிடக்கூடாத—அருள்கொண்டு - கருணைகொண்டு—நிலையாக - நிலையாய்— நின்றாள் - (இங்கே) நின்றனள்— அது - அத்தன்மை—இலதேல்- நடந்திலதாயின்— சிலையான- கல்லாகிய— மலை- பருவதமும்— நைந்து-கெட்டு—சிதர்ஆடி- புழுதியாக்கப்பட்டு— நலிய- சரிய—திரை- அலைகள்—ஆன - உண்டாகிய— கடல் - சமுத்திரங்களும்—நின்று - தன்தொழிலைச் செய்யாமல்நின்று— திடனாக - உண்மையாகவே— நிலையா - நிலையாதனவாகும்— அநிலம் - காற்றும்— அலையாது - அசையாது— தமியோரும்- (ஆதரவின்றித்) தனித்தவராகியநாமும்— அலையா - வருந்தாமல்— என்றும்- எப்பொழுதும்—நடவுஆயது - நட்டபயிரானது— ஏல்அலர் - (ஏராளமாகப்) பொருந்தியநீரையும்— அறிவு - மனிதரறிவு— ஆரும்நிழல் - நிலையாகப்பொருந்தியசெல்வத்தையும்— கொண்டு - பெற்று— வளர் - வளர்கின்ற— அமர்- பொலிவுள்ள— காவலூர்த்தலை - திருக்காவலூரில்— ஆன - (நமக்குரியவள்) ஆன—அனையென்று-தாயைப்போல்—தயவாக-தயையாக— நிலை - நிலைபேற்றை—தந்து - ஈந்து— திதி- (அவள்நம்மைக்) காப்பாற்றுதல்— ஆக-நமக்குக் கிடைக்க— எளிது - எளிதாயிருக்கின்றது எ-று. ஏகாரம்- ஈற்றசை.

(பொ - ரை.) சகாயியாகிய தேவமாதா நமக்குத் திரமானதுணை யிவ்வுலகத்திலே யில்லையென்றிரங்கி யொப்பில்லாதவருள்கொண்டு இங்கே நிலையாய்நின்றாள். இவ்வாறு நிலைத்திலளாயிற் கன்மலையுமுடைந்து புழுதியாம்: அலைகளைக்கொண்ட சமுத்திரங்களுமுத்துப்பிறப்பித்தல் முதலிய தந்தொழிலைச்செய்யாமலுங் கரையினிற்காமலும் வேறுபடும்: காற்று மசைவின்றிக்கிடக்கும். இவளிங்கே நிலைத்ததனா லாதரவின்றித்தனித்த நாமும் வருந்தாமல் பயிர்கள்தக்கநீரையு மனிதரறிவு வானுலகச்செல்வத்தையு மெப்போதுங் கொண்டுவளரும் பொலிவுள்ள திருக்காவலூரிலே தாய்போற்றயவா யிவள்நமக்குறுதியைத்தந்து காப்பாற்றுதல் நமக் கெளிதாகக் கிடைத்திருக்கின்றது என்றவாறு.

இது திருக்காவலூர்க் கயலானொருவன் தன்னையொத்தவரோடு கூறுங் கூற்றாகக் கூறப்பட்டது.

1. நடவாயது என்பது 3. அலறென்பதனோடும் 2. அறிவு என்பது 4. நிழல்என்பதனோடும் முடிதலா லிது விங்கே நிரனிறையணிபற்றிவந்ததெனக்கொள்க.

5. "திந்" என்பது விகுதிபுணர்ந்து கெட்டதொழிற்பெயர். (கூச)

(கட்டளைக்கலித்துறை.)

எளியர்க்கிரங்கிக்கதியேறவானோ ரிடும்வடமோ
1 தெளிவற்றதீவினைக் 2 கொய்தெறும் 3 பாசமோ 4 தேவருளாற்
களியன்புயிரைப்பிணிக்குந்தளைகொலோ காவனலூ
ருளி 5 நங்கையங்கையிலேந்துமணிமாலை யொப்பிலதே.

(ப - ரை.) காவனலூர்உளி - திருக்காவலூரி லெழுந்தருளிய— நங்கை- மாதரசியானவள்—அம் - அழகிய—கையில் - (தனது) கரத்தில்—ஏந்து - ஏந்திய—மணிமாலை - ஜபமணிமாலை வடிவாயுள்ளது— எளியர்க்கு - எளியவர்க்காக— வானோர் - வானுலகத்தார்— இரங்கி - இரக்கங்கொண்டு— கதி-மோக்ஷத்திற்கு— ஏற - (அவர்ஏறிச்செல்ல) —இடும் - விடும்— வடமோ - கயிறோ—தெளிவுஅற்ற - தெளிவில்லாத—தீவினை - கொடியசெய்கையாகிய பாவத்தை— கொய் - அறுத்து— தெறும் - அழிக்கும்— பாசமோ - நமனுயுதமோ— தேவருள் - தேவகிருபையுடன்— களி - அதனைமகிழும்— அன்பு - அன்பையுடைய— உயிரை - சீவனை— பிணிக்கும் - கட்டும்— தளையோ - கட்டோ—ஒப்புஇலது - அதுநிகரில்லாதது எ - று. ஆல் கொல் ஏ - அசைகள்.

(பொ-ரை.) திருக்காவலூரிலெழுந்தருளிய மாதரசியானவள் தனது திருக்கரத்தில் வைத்திருக்கு மணிமாலைவடிவமாயுள்ளது எளியவர்க்காக வானோரிரங்கி யவர்மோக்ஷத்திற் கேறிச்செல்லவிடுங்கயிறோ? மனந்தெளியாமையாற் செய்யுந்தீவினையைக்கொய்தழிக்கும் பாசமோ? தேவகிருபையை விரும்பிமகிழுமன்புள்ளவுயிரைத் தேவகிருபையோடு கட்டுங்கட்டோ? அதுநிகரில்லாத தென்றவாறு.

1. "தெளிவற்றதீவினை" என்பதில் அற்றவென்பது பிறபெயரொஞ்சிய பெயரெச்சமாதலின்தெளிவில்லாமையாற் செய்யப்பட்டதீவினையெனக்கொள்க.

2. "கொய்"என்னும்வினைப்பகுதி யிங்கேவினையெச்சப்பொருளில்வந்தது

3. பாசம் என்பது நமனுயுதம்: அதுமனிதரையழித்தற் குதவுதலைப்போல விதுபாவங்களை யழித்தற் குதவுதலா லப்படிக்கூறலாயிற்று.

4. "தேவருளால்" என்பது தேவகிருபையின்கண் என்னும்பொருளில் வருதலால் இதில் உருபுமயங்கிவந்ததெனக்கொளினுமமையும்.

5. நங்கை என்பதை யண்மைவிளியாக்கி "நங்கையங்கையிலேந்து" என்பதற்கு நங்கையே! நினதுதிருக்கரத்திலேந்திய எனப் பொருள்கூறுதலுமொன்று. (கூரு)

(மடக்கு- எழுசீரடியாசிரியச்சந்தவிருத்தம்.)

ஒப்பநிகரிலநூலி யுற்றவரமொருவேலி
யொத்தவளாவில1சீலி கதிசேரச்
செப்பமருளியவேதி சித்தமருளறுசோதி
சித்திவிளைவனநீதி திரைசூழ
வெப்பகையுமொழிவாகை யுத்தரணிநனியோகை
யித்தரணிவிளையீகை யரசாள
வப்பதியர்தொடராவ லிப்பதியர்தொடர்காவ
லப்பதியிலமர் 2 தேவ மகடானே.

(ப-ரை.) அப்பதியர் - வானுலகத்தார்க்குரிய— தொடர் - வாசஸ்தலமாகிய— இப்பதியர் - இவ்வுலகத்தார்— ஆவல் - ஆசையுடன்— தொடர் - தேடுகின்ற— காவல் - திருக்காவலென்னும்— அப்பதியில் - அவ்வூரில்— அரசு ஆள - அரசாட்சிசெய்ய— அமர் - அமர்ந்த— தேவமகள் - தெய்வப்பெண்ணுனவள்— ஒப்பம் - அழகினையுடைய— நிகரில - ஒப்பில்லாத— நூலி - (ஞான) நூலையுணர்த்துபவள்— உற்ற - அடைந்த—வரம் - வரமாகிய—ஒரு - ஒப்பற்ற— வேலி-ஆயுதத்தையுடையவள்— ஒத்த - (தனதுமாட்சிக்) கொத்த—வளாவுஇல - அளவில்லாத— சீலி - (ஞான) வொழுக்கமுடையவள்— கதி- பரகதியை— சேர - (யாவரும்) அடைய— செப்பம் - வழியை— அருளிய - கொடுக்கும்— வேதி - வேதத்தையுடையவள்— சித்தம் - உள்ளத்தினது—மருள்- மயக்கமாகியவிருளை— அறு - அறுக்கும்— சோதி - சூரியன்— சித்தி- ஆநந்தம்— விளை - உண்டாதற்குரிய— வனம் - அழகிய— நீதி - உண்மை— திரை - கடலைப்போல— சூழ் - சூழ்ந்த— அ - அந்த— எப்பகையும் - எவ்வகைப்பட்ட பகையையும்—ஒழி - ஒழித்த—வாகை - வெற்றியையுடைய—யுத்தர் - ஞானப்போரினரது— அணி - வெற்றிமாலை— இ - இந்த—தரணி - பூமியில்— நனி - மிக்க— ஓகை - களிப்பை— விளை - விளைக்கும்— ஈகை - மேகம் எ - று. தான் ஏஅசைகள்.

(பொ - ரை.) வானுலகத்தார் வாசஞ்செய்யுந் தலமா யிவ்வுலகத்தா ராவலோடு தேடப்பெற்ற திருக்காவலூரிலரசாளவந்தமர்ந்த தெய்வப்பெண்ணுனவ ளொப்பற்ற வழகைக்கொண்ட ஞானநூலையுணர்த்துபவள்: தானடைந்த வரமாகுமொப்பற்ற வேலையுடையவள்: தேவமகளென்னுந் தனதுமாட்சிக்கொப்ப வளவில்லாத ஞானவொழுக்கமுடையவள்: யாவரும் பரகதியைச்சேர்தற்கானவழியைக்காட்டும் வேதத்தையுடையவள்: மனமயக்கத்தை யறுக்குஞ்சூரியன்: ஆனந்தம்விளைதற்குரியதோருண்மை: கடல்போற்சூழ்ந்த தம்பகைவரனைவரையும்வென்ற ஞானவீரரணியும் வெற்றிமாலை: பேரின்பத்தை யிவ்வுலகத்தில்விளைக்கு மோர்மேகமென்றவாறு.

1. "சீலி" என்பதற்கு அழகுடையாளெனப் பொருள்கூறுதலுமொன்று.

2. தேவமகள் என்பதற்குத் தேவனுடையகுமாரத்தி யெனினுமமையும்.

(ஆசிரியச்சந்தவிருத்தம்.)

மகளென1வாதிதாயினள் வணைமுடிதாரைசூடினள்
பகலவனருமாடையள் பனிமதிநீவுதாளின
ளகமலரூருதேரின 2 ளருடருகாவலூரின்
னுகமெனயாவுநானிவ ளொழிகிலெ 3 னூழியூழியே.

(ப - ரை.) யாவும் - எல்லாநாள்களும்— ஆதி - முதல்வனாகிய கடவுளுக்கு— மகளென - குமாரத்தியும்— தாயினள் - தாயுமானவளும்— வணை- அணியும்— முடி - கிரீடமாக— தாரை - நக்ஷத்திரங்களை— சூடினள்- அணிந்துகொண்டவளும்— பகலவன் - சூரியனாகிய— ஆரும்- அழகைப்பெற்ற— ஆடையள் - உடையினளும்— பனி - குளிர்ச்சியையுடைய—மதி- சந்திரன்— நீவு - தடவித்தாங்கப்பெற்ற— தாளினள் - பாதங்களையுடையவளும்— அகம் - (நல்ல) மனமாகிய—மலர் - மலரை—ஊரு - (தான்) ஏறும்—தேரினள்- தேராகவுடையவளுமான— அருள் - அருளினால்— தரு - (வரங்களைக்) கொடுக்கும்— காவலூரினள் - திருக்காவலூ ரரசியினுடைய— உகமென - நாள்களேயென்று— நான் - யான்— இவள் - இவளை— ஊழி- ஊழிகாலத்தின்— ஊழி - முடிவிலும்— ஒழிகிலென் - விட்டுநீங்கேன் எ-று. ஏகாரம் ஈற்றசை.

(பொ - ரை.) சர்வேஸ்வரனுக்குமகளுந் தாயுமானவளு முடியாக நக்ஷத்திரங்களை யணிந்தவளுஞ் சூரியனாகிய வுடையை யணிந்தவளுஞ் சந்திரன்றாங்கிய பாதமுடையவளு நல்லமனமாகிய தேரையுடையவளு மாகி வரங்களைப்பொழியுந் திருக்காவலூர்நாயகி யரசாளுங்காலமே யெல்லாக்காலமுமென்று நானிவளையூழிகாலத்தின் முடிவிலும்விட்டு நீங்கேனென்றவாறு.

1. "ஆதி" என்பதாகுபெயர்.

2. "அருள்தரு" வென்பது - காவலூருக்கு விசேடணமன்று: காவலூரையுடையாட்கு விசேடணமெனவறிக.

3. ஊழியூழியே -என்பதில் முன்னுள்ள ஊழிநெடுங்காலம்; அஃது ஒன்றனுண்மையு மின்மையு நிகழத் தானொழியாதிருக்குங்காலம்: அஃதேல், ஊழியே எனப்பிற்கூறியதற்கு - முடிவிலுமெனப்பொருள்கூறிய தென்னையோ வெனில், முடிவில்லாததென்று துணிந்தகாலத்திற்கு முடிவுண்டாயினு மிவளை நானொழியாதகாலத்திற்கு முடிவில்லையென அணிவகையாற் கூறப்பட்டதெனவறிக. இக்கருத்தைப் பின்வருஞ்செய்யுளினுதியினுங் காண்க. (கூஎ)

(பின்முடுகு நேரிசைவெண்பா.)

ஊழியொழியினுநா னுன்று 1 ளொழிவேனோ
சூழியணிகாவனலூர்ச்சுந்தரியே - கேழிழையா

மண்டவிர்ந்தவிண்டளங்கள் வந்தணிந்துகொண்டிறைஞ்சி
யெண்டவிர்ந்த வின்புமிழ்ந்த வென்று.

(ப - ரை.) சூழி - தடாகங்களை—அணி - ஆபரணமாகவணிந்த— காவ ளூர் - திருக்காவலூரி லெழுந்தருளிய—சுந்தரியே - அழகியே—விண் - வானுலகத்திலுள்ள—அவிர்ந்த - விளங்கிய—மண்டு - நெருங்கிய—தளங்கள் - சம்மனசின்கூட்டங்கள்— வந்து - இங்கேவந்து— உன்தாள் - உன்பாதங்களை— கேழ் - ஒளிபொருந்திய—இழையா - சிராபரணங்களாக— அணிந்து கொண்டு - தரித்துக்கொண்டு—இறைஞ்சி - வணங்கி— எண்தவிர்ந்த - அளவில்லாத—இன்பு - இன்பத்தை—உமிழ்ந்தவென்று - காட்டினவென்றுணர்ந்தபின்—ஊழி - ஊழிக்காலம்—ஒழியினும்- ஒழிந்துபோனாலும்— நான்-யான்— ஒழிவேனோ - (உன்பாதங்களை) நீங்குவேனோ. எ - று.

(பொ - ரை.) தடாகங்களை யணியாகக்கொண்ட திருக்காவலூரிலெழுந்தருளிய தேவதாயே!வானுலகத்தில் விளங்கி நெருங்கிய சம்மனசின் கூட்டங்களிங்கேவந் துன்னுடையபாதங்களைச் சிராபரணங்களாகத் தங்கள்சிரசின்மே லணிந்துவணங்கி யளவில்லாத வின்பத்தைக்காட்டினவென்று நானறிந்தபின்ன, ரூழிகாலமே யொழிந்துபோகுமாயினு முன்பாதங்களைவிட்டு நீங்குவேனோ வொருபோதும் நீங்கேனென்றவாறு.

1. "ஒழிவேனோ" என்றதில் ஓகாரமெதிர்மறைப்பொருளில்வந்தது (சூஅ)

(கட்டளைக்கலித்துறை.)

என்றுயர்க்கின்ப மரிதைம்பொறிக்கிரை தேடுவைபின்
கொன்றுயராற்றில வாடுவையென்னெஞ்சே கூப்பியகை
சென்றுயர்காவலூர் நாயகிபோற்றிலை தேடிலைநொந்
துன்றுயர்கூறிலை தன்புகழ்பாடிலை யோதிலையே.

(ப - ரை.) என்நெஞ்சே - என்னுடையமனமே— ஐம்பொறிக்கு - பஞ்சேந்திரியங்கட்கு—இரை - உணவை—தேடுவை - தேடுவாய்—பின் - மேலும்—துயர் - துன்பங்களை—ஆற்றில - ஆற்றாமல்—கொன் - விருதாவில்—வாடுவை - வாடுவாய் (இவைசெய்வாயேயன்றி)— கூப்பிய - (சிரமேற்) குவித்த—கை - கரத்துடன்—சென்று - போய்—உயர் - மேன்மைபொருந்திய—காவலூர்நாயகி - திருக்காவலூரரசியை—போற்றிலை - வணங்குவதில்லை—தேடிலை - தேடுவதில்லை—நொந்து - வருந்தி—உன் - உன்னுடைய—துயர் - துன்பங்களை—கூறிலை -சொல்லிக்கொள்ளுவதில்லை—தன் - அவளது—புகழ்- புகழை—பாடிலை - பாடுவதில்லை—ஓதிலை - துதிப்பதில்லை (யாதலால்)— என்- என்னுடைய—துயர்க்கு - துன்பந்தீர்தற்கு—இன்பம் - ஆநந்தம்—அரிது - இல்லை எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ - ரை.) என்மனமே! நீமெய்வாய்கண்மூக்குச்செவி யென்னு மைம்பொறிகட்கும் பரிசமாதியாகிய விடயமென்னு மிரைதேடுவாய்: பின்னுந் துன்பங்களைத் தணிக்காமல் விருதாவில்வாடுவாய்: சிரசின்

மேற் குவித்தகரத்தோடும் போய்த் திருக்காவலூர்நாயகியை வணங்குவதில்லை: தேடுவதில்லை: உன்னுடைய துன்பங்களைச் சொல்லிக்கொள்வதுமில்லை: அ வள்புகழைப்பாடுவதில்லை: துதிப்பதுமில்லை: யாதலா,லென்றுன்பங்கள் தீர்தற் கானந்தமெனக்குண்டாவதில்லை யென்றவாறு.

1. "என்றுயர்க்கின்பமரிது" என்பது எனது துன்பநீங்க வெனக்கின்பமுண்டாவதில்லை என்னும்பொருளைக்குறிப்பாலுணர்த்தலின் இதுகுறிப்பு. (சுக)

(விருத்தக்கலித்துறை.)

ஓதிமிகுந்தா ளோகைமிகுந்தா ளுருவாக
வாதிபயந்தா ளாவிவியந்தா1ளகிலாளுங்
கோதிலளென்பாள் கோதிலரன்பாள்கொழுங்காவற்
சேதிமமைந்தாள் சேமமடந்தை2தேரேனே.

(ப-ரை.) ஓதி - ஞானம்— மிகுந்தாள் - மிக்கவளும்— ஓகை - ஆநந்தம்—மிகுந்தாள் - மிக்கவளும்—ஆதி - கடவுளை—உருவாக-மனிதவடிவமாக—பயந்தாள் - ஈன்றவளும்—ஆவி - இஸ்பிரித்துசாந்துவி னேவுதலால்—வியந்தாள் - துதிக்கப்பட்டவளும்—அகிலம் - அனைத்தையும்—ஆளும் - ஆட்சிசெய்யும்—கோது - குற்றம்—இலள் - இல்லாதவள்—என்பாள் - என்று சொல்லப்படுபவளும்— கோதுஇலர் - குற்றமில்லாத பெரியோரிடத்தில்— அன்பாள் - பக்ஷமுள்ளவளும்— கொழும் - செழுமைபொருந்திய— காவல் - திருக்காவலூரிலுள்ள—சேதிமம் - ஆலயத்திலெழுந்தருளிய— மைந்தாள் - வலிமையுடையவளுமாகிய— சேமம் - க்ஷேமத்தைத்தரும்—மடந்தை - நங்கையை—தேரேனே— (யான்) தெளியேனே எ-று.

(பொ-ரை.) ஞானத்திற்பூரிக்கப்பட்டவளும் பேரின்பமுடையவளு மருவனனகடவுளை மனிதவுருவமாகப்பெற்றவளு மிஸ்பிரித்து சாந்துவாகிய சர்வேஸ்வரன தேவுதலைக்கொண்ட மஹாத்துமாக்களாற் றுதிக்கப்பட்டவளு முலகமனைத்தையு மாட்சிசெய்யுங் குற்றமில்லாதவரசியென்று சொல்லப்படுபவளும் பாவமில்லாதவரிடத்தே யன்புள்ளவளுந் தேவவரங்களாற் கொண்டவல்லமையுடன் செழியதிருக்காவலூரி லெழுந்தருளியவளுமாய் க்ஷேமத்தைத்தரும் நங்கையை யிப்படிப்பட்டவளென்று நானறிந்துகொள்ளேனே? வென்றவாறு.

1. அகிலம் என்ப திங்கே கடைகுறைந்துவந்தது.

2. "தேரேனே" வென்பதில் ஓகாரம் வினாப்பொருளில்வந்தமையின் நானறிந்துகொள்ளுத லெனக்குச் சித்தியாகாமற் போகுமோ? எனக்கெப்பொழுது சித்திக்கு? மென்பதுகருத்து. (எ0)

(மடக்கு-எழுசீரடி யாசிரியவிருத்தம்.)

தேர்ந்தனையோவநீர்ந்தனைகாவ றிருந்தினைமருந்தினைநிகரன்
பார்ந்தனைமருளி1னீர்ந்தனையருளு மரங்கினையிரங்கினைபினிதிற்

சார்ந்தனைபுகரோ பேர்ந்தனைநிகரோ தவிர்ந்தனையவிர்ந்தனையெனையு
மோர்ந்தனையிலையோதேர்ந்தனையிலையோ2 வுறுப்பினைவெறுப்பினை
[யினிதே.

(ப-ரை.) உறுப்பினை - என்னுயிராயிருக்கின்றாய்— தேர்ந்தனை - நீ (அனை த்தும்) அறிந்தனை— ஒவல் - விலகவேண்டுவதை— தீர்ந்தனை - விலகினை— காவல் - திருக்காவலூரை— திருந்தினை - தேறினை— மருந்தினை - அமிர்தத் தை— நிகர் - ஒத்த— அன்பு - அன்பை— ஆர்ந்தனை - கொண்டிருக்கின்றனை— மருளின் - மயக்கத்தினின்று— ஈர்ந்தனை - பிரிந்தனை— இரங்கினை - (எம்மேல்) இரக்கங்கொண்டனையாகி— அருளும் - எமக்கருள்செய்தற்கான—அரங்கினை - அருட்டுறையை— இனிதில் - இன்பமாக— சார்ந்தனை - அடைந்தனை— புகர் - (ஜன்மபாவக்) குற்றத்தை— பேர்ந்தனை - நீங்கினை— நிகர் - ஒப்பு— தவிர்ந்த னை - ஒழிந்தனையாகி— அவிர்ந்தனை - விளங்கினை— எனையும் - என்னைமாத்தி ரம்— ஓர்ந்தனையிலையோ - (உன்மகனுக) உணர்ந்தாயில்லையோ— தேர்ந்தனை யிலையோ - (எனதுதுன்பத்தை) அறிந்தாயில்லையோ— வெறுப்பினை - (என்னி டத்தே) வெறுப்பையுடையவளாயிருக்கின்றாய்— இனிதே - இதுநல்லதோ எ - று. ஏகாரம்இரண்டும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) என்னுயிராயிருக்கின்றதாயே! நீயெல்லாமுணர்ந்தவ ளாய் விலகவேண்டுவதைவிலகினை: திருக்காவலூரைத்தெரிந்து கொண் டாய்: அமிர்தம்போ லெம்முயிரைத்தரு மன்புகொண்டிருக்கின்றாய்: மய க்கநீங்கியிருக்கின்றாய்: எம்மேலிரங்கி யெமக்கருள்செய்தற் கானவருட் டுறையைச் சேர்ந்தாய்: ஜன்மபாபத்தையொழித்தாய்: ஒப்பற்றவளாய் விளங்கினை. இப்படியிருக்க நீயென்னைமாத்திர முன்மகனென்று தெரிந் துகொள்ளவில்லையோ? அல்லதென்றுன்பங்களை நீயறிந்துகொள்ளவில் லையோ? என்னிடத்தே வெறுப்பையுடையவளா யிருக்கின்றாய் இதுநல் லதோ? வென்றவாறு.

1. ஈர்தல், பிளத்தல்: இங்கே யிலக்கணையாய்வந்தது.

2. உறுப்பென்பது அவயவம்: உயிருமோரவயவமாதலின் உறுப்பினை யென்பதற்கு என்னுயிராயிருக்கின்ற யெனப்பொருள்கூறினும். இச்சொல் முன்னிலைக்குறிப்புவினைமுற்றுலணையும்பெயர். (எக)

(மடக்கு - கட்டளைக்கலிப்பா.)

இனிதணங்கறுதானவனந்தமேயிருபதந்தொழுதானவ1னந்தமே
முனிவர்தாழ்ந்தணிபாதவரத்தமே2முத்திகாட்டுமென்பாதவ3ரத்தமே
தனிநலோர்4பெறுவாவிய5 தஞ்சமேதயவினென்னுளவாவியதஞ்சமே
கனிபிரான்மருவாரணவாழியே காவலூர்த்தயைவாரணவோழியே.

(ப-ரை.) அணங்கு - (இருளாலுண்டாகும்) வருத்தத்தை— இனிது - இ னிதாக— அறு - அறுக்கும்— தானவன் - சந்திரன்— அந்தம் - அழகானது— ஏய் - பொருந்திய— இருபதம் - இரண்டுபாதங்களையும்— தொழு - தொழப்

பெற்ற— தானம் - வானுலகிலுள்ள— வல் - வலிமையாகிய— நந்தமே - சங்கே— முனிவர் - துறந்தோர்— தாழ்ந்து - வணங்கி— அணி- (சிரசின்மேல்) அணிந்துகொள்ளப்பெற்ற— பாதம் - பாதங்களையுடைய—அரத்தமே - பொன்னே— முத்தி - மோக்ஷத்தை— காட்டும் - காண்பிக்கும்— மென் - மென்மையான— பா- (ஒளி) பரவிய— தவர்அத்தமே- தபசிகளதுகண்ணாடியே— தனி - ஒப்பற்ற— நல்லோர்- நல்லவர்— பெறு- அடைதற்கியலும்— வாவியது - தடாகத்தினது— அஞ்சமே - அன்னமே— தயவின் - கிருபையினால்— என் - எனது— உள் - மனத்தை— அவாவிய - விரும்பிய— தஞ்சமே - எனது துணையே— கனி - (நினதுதிருவயிற்றின்) கனியாக— பிரான் - கடவுள்— மருவு - மருவியிருக்கப்பெற்ற— ஆரணம் ஆழியே - வேதக்கடலே— காவலூர் - திருக்காவலூரி லெழுந்தருளிய— தயைவாரண - கிருபைக்கடலே— வாழி - நீவாழிய   எ - று.   ஏகாரம் ஈற்றசை.

(பொ ழி.) இருளாலுண்டாகும் வருத்தத்தைத்தீர்க்குஞ் சந்திரன்வணங்கு மிரண்டு திருவடிகளையுடையதாய் வானுலகிலுள்ள வலிய தோர்சங்கமேவாழி. துறந்தோர்வணங்கித் தம்முடைய சிரசின்மே லணிந்துகொள்ளும் பாதங்களையுடைய பொன்னேவாழி. தவத்தோர்க்கு மோக்ஷவெழிலைக்காட்டு மெல்லியகண்ணாடியேவாழி. ஒப்பற்றநல்லோர்க்குமாத்திரங்கிடைக்கு மன்னமேவாழி. தயவாலென்னுள்ளத்தை விரும்பியதுணையேவாழி. * நினதுதிருவயிற்றின்கனியாகச் சர்வேஸ்வரன் மருவியிருக்குஞ் சத்தியவேதக்கடலேவாழி. திருக்காவலூரிலெழுந்தருளிய கிருபாசமுத்திரமேவாழி எ-று.

2. "முத்திகாட்டுமென்பா" வென்னும்விசேடணத்தின் விசேடியம் 3 அத்தமெனவறிக.

4. பெறு வென்னும்வினைத்தொகை தன்னெச்சமாகிய 5அஞ்சமென்னும்பெயரோடுமுடிந்தது.

6. வாழி- என்பதை 1 நந்தமேயென்பது முதலியவெல்லாவிளிப்பெயரோடுந் தனித்தனிக்கூட்டி முடித்துக்கொள்க, இதுகடைநிலைத்தொழிற்றீவகச்செய்யுளாதலின்.

(இணைக்குறளாசிரியப்பா.)

வாழியவும்பர் வணங்கியவணங்கே
வாழிவானொளியே
வாழிபாருயிரோ
யாதியை1யீன்றனே
நீதியையூன்றினை
2பானொளியணிந்தனை
மீனொளிபுனைந்தனை

* அர்ச். லுக்கா ஞ். அதி. ௪௨ - ம் - வசனம்.

குறைமதிமிதித்தனை
மறைமதிவிதித்தனை
மேதினிகாத்தனை
தீதினைநீத்தனை
கதிக்கதவாயினை
திதிக்கனிவாயினை
வானோர்களித்தனை
யீனோரளித்தனை
தொழுமுளத்துள்ளுறை சோதியை
யழுமுளத்தாதர வோதியை
நீரகத்தம்புய நேரினை
யாரகத்தம்பர நீரினை
வானவர்வாழ்த்த வானமாண்
டீனவர்வாழவிங் கெய்தினை
யாவலூர்வழி யார்திருக்
காவலூரருங் காதலே
யன்புணர்நீயிவ ணமைந்தபின்
பொன்புணருலகொடு பூவுலகொத்ததே.

(ப - ரை.) உம்பர் - வானவரால்— வணங்கிய - வணங்கப்பட்ட— அணங்கே - தெய்வப்பெண்ணே— வாழிய - நீவாழ்க— வான் - வானுலகத்திற்கு— ஒளியே - விளக்கே— வாழி - நீவாழ்க— பார் - பூமியிலுள்ளவர்க்கு— உயிரே - சீவனே— வாழி - நீவாழ்க— ஆதியை - கடவுளை— ஈன்றனை - பெற்றாய்— நீதியை - மெய்ம்மையை— ஊன்றினை - சார்ந்தாய்— பானு- சூரியனாகிய— ஒளி - ஒளியை— அணிந்தனை - உடையாகவணிந்தாய்—மீன்- நக்ஷத்திரமாகிய— ஒளி - ஒளியை— புனைந்தனை - கிரீடமாகவணிந்தாய்—குறை-(கலை) குறைந்த— மதி - சந்திரனை— மிதித்தனை - மிதித்தாய்— மறை-வேதத்தால்— மதி - அறிவை— விதித்தனை- உண்டாக்கினை— மேதினி- பூமியை— காத்தனை - காப்பாற்றினை— தீதினை - குற்றங்களை— நீத்தனை - நீங்கினை— கதி - மோக்ஷவீட்டினது— கதவு - கபாடமாக— ஆயினை - ஆகினை— திதி- காத்தலைச்செய்யும்— கனிவு - இரக்கத்தையுடைய— ஆயினை - தாயாயிருக்கின்றாய்— வானோர் - சம்மனசுகளினது— களித்தனை - ஆநந்தத்தை— ஈனோர் - குறைபாடுள்ளமனிதர்க்கு— அளித்தனை - தந்தாய்— தொழும்- வணங்கும்— உளத்துள் - மனத்தின்கண்— உறை - வசிக்கும்— சோதியை - பிரகாசமாயிருக்கின்றாய்— அழும் - அழுங்கும்—உளத்து - உள்ளத்திற்கு—ஆதரவு - ஆதரவானமொழிகளை—ஓதியை - சொல்பவளாயிருக்கின்றாய்—நீர்அகத்து - நீரினிடத்துள்ள— அம்புயம் - தாமரைமலரை— நேரினை - ஒத்தவளாயிருக்கின்றாய்— ஆர் அகத்து - பூமியினிடத்து— அம்பரம் - வானுலகத்தினது— நீரினை - தன்மையையுடையாய்— வானவர் - சம்மனசுகள்— வாழ்த்த - வாழ்த்

துதல்செய்ய — வானம் - வானுலகத்தை — ஆண்டு - ஆட்சிசெய்து — ஈன வர் - குறைபாடுள்ளமனிதர் — வாழ - வாழும்படி — இங்கு - இவ்விடத்தில் — எய்தினை - வந்தாய் — ஆவல் - ஆசை — ஊர் - செல்லும் — வழி - முறையை — ஆர் - பொருந்திய — திருக்காவலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய — அருங் காதலே - அருமையானஅன்பினையுடையவளே — நீ - நீ — அன்பு - பக்ஷத்தி னால் — உணர் - (எம்மை) நினைந்து — இவண் - இவ்விடத்தில் — அமைந்தபின்- வந்துபொருந்தியபின்னர் — புணர் - (இன்பஞ்) சேர்ந்த — பொன்உலகொடு- வானுலகத்தோடு — பூவுலகு - மண்ணுலகம் - ஒத்தது நிகராராயினது. எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ள்.) வானவரால் வணங்கப்பட்ட தெய்வப்பெண்ணேவா ழி. வானுலகத்திற்கு விளக்கேவாழி. பூமியிலுள்ளவர்க்குயிரோவாழி. கட வுளைப்பெற்றவளே! மெய்மையைச்சார்ந்தவளே! சூரியனையுடையாக வ ணிந்தவளே! நக்ஷத்திரங்களை முடியாகப்புனைந்தவளே! யிளம்பிறையை மிதித்தவளே! சத்யவேதத்தாலறிவையுண்டாக்கினவளே! பூமியிலுள் ளோரைக்காப்பாற்றினவளே! பாவங்களைநீங்கினவளே! மோக்ஷவீட்டி ன் கதவானவளே! எம்மைக்காக்குங் கனிவுள்ளதாயானவளே! சம்மன சுகளுக்குரியவானந்தத்தை மனிதர்க்குத்தந்தவளே! உன்னைவணங்கும னத்தில் வாசஞ்செய்யுஞ் சோதியே! அழுகின்றமனத்தி லாதரவுசொல் பவளே!நீரிலுள்ள தாமரைமலரைபொத்தவளே! பூவுலகத்திலுள்ளமோ க்ஷமே! சம்மனசுகள்வாழ்த்த வானுலகத்தையாண்டு மனிதர்வாழவிங் கே வந்தவளே! ஆசையைக்கொள்ளுதற்கான முறைமைபொருந்திய தி ருக்காவலூரிலெழுந்தருளிய வன்புடையவளே! நீ பக்ஷத்தினலெம்மை நினைந்திங்கேவந்தபின்ன ரிவ்வுலகமும் வானுலகத்தைப்போ லாயினதெ ன்றவாறு.

1. ஈன்றனை என்பதுமுதல் எய்தினையென்பதீறுகக்கிடக்குமுன்னிலைவினை முற்றுங்குறிப்புமுற்றும் போன்றவை யவ்விருவினையாலணையும் பெயர்களெ னவறிக.

2. "பானொளிவனைந்தனை" என்றும்பாட முண்டு - இதுவேண்டின்-பானு வொளியால் அலங்கரிக்கப்பட்டா யென்ப திதன்பொருளெனக்கொள்க.

3. அருங்காதல் என்பது அன்மொழித்தொகை.

4. "உணர்" என்பது இங்கேவினையெச்சப் பொருளில்வந்தது: வினைத் தொகையாகக் கொள்ளினுமமையும். (எரு)

(கட்டளைக்கலித்துறை.)

ஒத்தவடி1வந்த மண்டலத்துள்ளதோ வோரிரதம்
வைத்தமதிமீன் சுடரொன்றொளிவிட மாமரியே
மொய்த்தவின்புற்றென்கண் வாழநான்கண்டனன் மூவணிநி
மெய்த்திறத்தேந்தித்தோர் மேல்வருங்காவலூர் வீதியிலே.

(ப • ரை.) மா - பெருமைபொருந்திய—மரியே - மரியாயே—என் - என்னுடைய—கண் - கண்கள்—மொய்த்த - நெருங்கிய— இன்பு - இன்பத்தை—உற்று—அடைந்து - வாழ—வாழும்படி - ஓர் - ஒரு—இரதம் - தேரானது—வைத்த - தன்னிடத்தில்வைத்திருக்கிற— மதி - சந்திரனும்—மீன் - நக்ஷத்திரங்களும்—சுடர் - சூரியனுடன்—ஒன்று - தமக்குப்பொருந்திய— ஒளி- பிரகாசத்தை— விட - விட்டுக்கொண்டிருக்க— நீ - நீ—மெய்-உன்சரீரத்தினுடைய—திறத்து - கூறுபாட்டில்—மூஅணி- மூன்றணிகளாக—ஏந்தி - (அவற்றைத்) தாங்கி—தேர்மேல் - இரதத்தின்மேல்—வரும் - வரப்பெற்ற—காவலூர் - திருக்காவலூரிலுள்ள—வீதியில் - தெருக்களில்—நான் - யான்—கண்டனன் - கண்டேன்— ஒத்த - (இம்மூன்றும்பகையின்றி) பொத்த— வடிவு - அழகு—அந்தமண்டலத்து - வானமண்டலத்தில்—உள்ளதோ - உண்டோ—எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) மேன்மையைக்கொண்ட மரியாயே! நீயொப்பில்லாததட்பம் பொருந்திய சந்திரனைக்காலணியாகவு நக்ஷத்திரங்களைச் சிரவணியாகவுஞ் சூரியனைமார்பணியாகவு மணிந்து தேர்மேல்வருந் திருக்காவலூர்த்தெருக்களிலே யோரிரதத்தினுள்ளே யச் சூரியனுடனே சந்திரனு நக்ஷத்திரங்களுந் தங் கதிரைவீசிவிளங்குவதை யென்கண்க ளின்பமடைந்து வாழும்படி நான்கண்டேன்: இவ்வாறிம்மூன்று மோரிடத்திலிருந்து பகையின்றிவிளங்கு மழகு வானமண்டலத்திலுண்டோ? வென்றவாறு.

1 "அந்த" வென்றமையால் "மண்டல" மென்றது - வானமண்டலத்தை யென்ப துதாரவணியாற்பெற்றும்.

"ஒற்றையாழியந்தேரவ" னென்னுஞ் சூரியனையொழித் தொழிந்தசந்திரநக்ஷத்திரங்கள் தேரிலிருப்பதுஞ் சூரியனது பிரகாசத்தின்முன்னர்ச் சந்திரநக்ஷத்திரங்களின்பிரகாசந் தோன்றுதலும் வியப்பென்பதுதோன்ற "மொய்த்தவின்புற்றென்கண்வாழ" வெனவும் "ஒத்தவடிவு" எனவுங் கூறினரொனவறிக. (எச)

(மடக்கு - தாழிசை.)

வீதிமந்திரநூலியே யாதிதந்திரவேலியே
வென்றிதந்தமடங்கலே நன்றிதந்தவடங்கலே
நீதிசுந்தரகோலியே கோதி1லந்தரசீலியே
நிந்தைநீங்குமனந்தமே யெந்தையீங்கருளந்தமே
பாதியிந்தணிபாதியே சோதி2வந்தணிசோதியே
பங்கநீத்தலர்3கஞ்சமே பங்கநீத்தமர்தஞ்சமே
யோதிலம்பரஞானமே 4 யேதிலும்பரமானமே
யோவலீ5ரொனதன்பளேகாவலூரேரசென்பளே.

(ப-ரை.) காவலூர் - திருக்காவலூர்க்கு— அரசுஎன்பள் - அரசியென்று சொல்லப்படுபவள்— வீதி - ஒழுங்கையுடைய— மந்திரம் - வேதமாகிய—

நூலி - நூலையுணர்த்துபவள்— ஆதி - பழமையாகிய— தந்திரம் - தந்திரத்தைத்தடுத்தற்கு—வேலி - மதில்— வென்றி - வெற்றியை— தந்த - (நமக்கு) அருளிய— மடங்கல் - சிங்கமாகியகடவுள்— நன்றி - நன்மையாக— தந்த - நமக்குக்கொடுத்த— அடங்கல் - எல்லா (நன்மைப்பொருளு) மானவள்—நீதி - நடுநிலைமையையுடைய— சுந்தரம் - அழகிய— கோலி - செங்கோலையுடையவள்—கோதுஇல் - குற்றமில்லாத—அந்தரம் - வானுலகத்திற்குரிய—சீலி - ஒழுக்கமுடையவள்— நிந்தை - இகழ்ச்சி— நீங்கும் - விலகிய— அனந்தம் - பொன்— எந்தை - எமதுதந்தையாகியகடவுளை— ஈங்கு - இவ்விடத்தில்—அருள் - பெற்ற— அந்தம் - அழகு—பாதியிந்து - அர்த்தசந்திரனை — அணி - (பாதுகமாக) வணிந்த— பாதி - பாதத்தையுடையவள்— சோதி- நக்ஷத்திரங்கள்—வந்து - வர— அணி - (அவற்றைமுடியாக) வணிந்த—சோதி - சூரியன்— பங்கம் - சேற்றை— நீத்து - நீங்கி— அலர் - மலர்ந்த— கஞ்சம் - தாமரைமலர்— பங்கம் - பாவத்தை— நீத்து - நீங்கி— அமர் - அமர்ந்த—தஞ்சம் - துணை— ஓதில் - சொல்லுமிடத்து— அம் - அழகிய—பரம்- மோக்ஷத்திற்குரிய— ஞானம் - அறிவு— ஏதில் - குற்றமில்லாத— உம்பரம்- வானுலகினது— மானம் - பெருமை— ஓவல் - (நான்) வருந்துதலை— ஈர்- அறுக்கும்—எனது - என்னுடைய— அன்பள் - அன்புடையாள் எ - று. ஏகாரங்கள் ஈற்றசைகள்.

(பொ-ரை.) திருக்காவலூரரசியென்பவ,ளொழுங்காகிய வேதநூலையுணர்த்துபவள்: பழமையான தந்திரத்தைத் தடுத்தற்கான மதில்: வெற்றியை நமக்குத்தந்த சிங்கமாகிய கடவுள் நன்மையாக நமக்குத்தந்தவெல்லாநன்மைப் பொருளுமானவள்: நீதிச்செங்கோலுடையவள்: குற்றமில்லாத வானுலகத்திற்குரிய வொழுக்கமுடையவள்: இகழ்ச்சியில்லாத ஸ்வர்ணம்: எங்கள்தந்தையாகிய சர்வேஸ்வரனை இவ்வுலகத்தி லொருமனிதனகப்பெற்ற வழகு: பாதிநிலாவை யணிந்த பாதத்தாள்: நக்ஷத்திரங்களைமுடியாயணிந்த சூரியன்: சேற்றைநீங்கிமலர்ந்த தாமரைமலர்: பாவத்தைநீங்கி யமர்ந்த துணை:விளங்கு மோக்ஷத்திற்குரிய ஞானம்: மேன்மை யளவை யாவற்றிற்கு மேலாமளவு: என்வருத்தத்தைத் தீர்க்கு மன்புடையாள் என்றவாறு.

1. அந்தரம் 3, கஞ்சம் 6. அரசு என்பவை ஆகுபெயர்கள்.

2. வந்து என்பது வினையெச்சத்திரிபு.

4. "ஏதிலும்பரமானம்" என்பதில் - ஏதம்என்பது, கடைக்குறை விகாரமும்- உம்பரம் என்பது விரித்தல்விகாரமும் பெற்றுவந்தன. வானுலகத்திற்கு இவ்வாசிரியர் உம்பரமென்னு மொழியையுப யோகித்தலைத் - தேம்பாவணிக் காட்சிப்படலம் - சயஉ - ம் - பாட்டில் - "உம்பரமாள் தனிக்கோலானேவுந் தன்மைத்து" என்பதானறிக. இதை- ஏதில் உம்பர் அம் மானம் - எனப்பிரித்துக் குற்றமற்றவானவர்களினழகியபெருமை எனப் பொருள்கொளினும் அமையும்.

5. "வினதடியா" ரென்பதுபோல விங்கே அதுவுருபு உயர்திணைப்பெய ரோற்றுவந்ததெனவறிக. அவ்வாறன்றி யப் பெயரின்பகுதியைநோக்கி வந்த தெனக்கொளினு மமையும். (௭௫)

(நேரிசைவெண்பா.)

என்பவக்கான்யாறு நீந்திபெரியாசைத்
துன்பச்சுரங்கடந்துவாழேமோ - வன்1 பிலதா
யென்றுணர்ந்தாய்நெஞ்சே யியைகாவலூரன்னை
மூன்றுணராவாழ்நாண்முகத்து.

(ப - ரை.) நெஞ்சே - மனமே— இயை - (இவ்வுலகில்வந்து நமக்கு வேண்டியவைகளைக்கொடுக்க) இயைந்த— காவலூர்அன்னை - திருக்காவலூ ரம்மன்— முன் - நமக்கெதிரில்— துணரா - மலர்போல— வாழ் - வாழ்கின் ற— நாள்முகத்து - இந்நாளில்— பவம் - பாவமாகிய— கான்யாறு - கான் யாற்றை—நீந்தி - நீந்திக்கடந்து— ஆசை - அவாவாகிய— துன்பம் - துன்ப த்தைத் தருகின்ற— எரி - நெருப்பைவிடும்— சுரம் - பாலைவனத்தை— கடந் து - தாண்டி— அன்பு - இவ்வன்னையின்அன்பானது— இல்லதாய்- வீடாக— வாழேமோ - (அதில்) வாழமாட்டேமோ—என்று - என்றுகருதி—உணர்ந்தா ய் - நீவாடினை— என் - இதென்னபேதைமை. எ - று.

(பொ - ரை.) நெஞ்சே! நமக்குவேண்டியவைகளையெல்லாங் கொ டுக்க மனங்கொண்டிங்கேவந்த திருக்காவலூரம்மன் நமக்குமுன்னே ம லர்போல்வாழாநின்ற விக்காலத்திற் பாவமாகிய கான்யாற்றை நீந்திக் கடந்து ஆசையாகியதுன்பத்தையு நெருப்பையுந்தரும் பாலைவனத்தை த்தாண்டி யிவ்வன்னையி னன்பாகியவீட்டில் வாழமாட்டேமோவென்று கருதி நீவாட்டங்கொண்டாய். இதென்னபேதைமை? யென்றவாறு.

1. இல்லதுஎன்பதில் அதுவென்பது பகுதிப்பொருள்விகுதி. (௭௬)

(தாழிசை.)

நாண்முகத்துநறவுலாவி நளினமீதி1லனமுலாவி
நடனமாடநயநநாகர் நயநயத்தகாவலூர்
2பாண்முகத்துமுரலவீணை 3 பார்முகத்துவளரவோதை
பாய்முகத்துவிளையவோகை 4பார்முகத்துமிகரிலா
5நூண்முகத்துநிமிருமாடை சுடர்முகட்டிறுவசமாட்
வடிதுதித்தசுரர்கள்பாட நரர்களித்துநாடமீ[illegible]
6பூண்முகத்துமுடிவணங்கு பூமுகத்தவடியணங்கு
பூதலத்திலணுகியாளும் 7 பொன்னகைத்தகோயிலே.

(ப - ரை.) முகத்தில் - தம்மிடத்தில்— நறவு - தேன்— உலாவு - உலா வப்பெற்ற— நாள் - அவ்வந்நாளில்மலரும்— இ - இத்தன்மையான— நளின மீதில் - தாமரைமலரின்மேல்— அன்னம் - அம்ஸபக்ஷிகள்— உலாவி- மெல்ல

நடந்து—நடனமாட - நிருத்தஞ்செய்ய— நயனம் - (கண்ட) கண்கள்— நாகர் - வானுலகத்தாரைப்போல— நயம்நயத்த - இன்பமிகுதற்கேதுவாகிய— காவலூர் - திருக்காவலூரானது— மீன் - நக்ஷத்திரங்களாகிய— பூண்முகத்து - அணியையுடைய— முடி - சென்னியையும்— வணங்கு - (யாவராலும்) வணங்கப்படத்தக்க— பூமுகத்த - தாமரைமலரையொத்த— அடி - பாதங்களையுமுடைய— அணங்கு - தெய்வப்பெண்ணாகிய தேவமாதா— பாண்முகத்து - இசைப்பாட்டுப்போல— முரல் - ஒலிக்கின்ற— அ - அந்த— வீணை - வீணையினின்றும்— பாமுகத்து - பாட்டினின்றும்— வளர் - அதிகரிக்கின்ற— அழைதை - அவ்வொலியானது— பாய் - செல்லும்— முகத்து - இடங்களில்— ஓகை - மகிழ்ச்சி— விளைய - உண்டாகவும்— பார்முகத்து - பூமியில்— நிகரிலா - ஒப்பில்லாமல்— தூண்முகத்து - தம்பத்தில்— நிமிரும் - உயர்ந்த— ஆடை - சீலைக்கொடிகள்— சுடர் - சூரியனுலாவும் —முகட்டில் - ஆகாயவுச்சியில்— துவசம் - (தன்) விருதுக்கொடியைப்போல— ஆட - அசையவும்— அடி - (தன்) பாதங்களை— துதித்த - வழுத்திய — சுரர்கள் - வானவர்கள்— பாட - பாடவும்— நரர் - மனிதர்— களித்து - மகிழ்ந்து— நாட - தேடிவரவும்— பூதலத்தில் - பூமியினிடத்தில்— அணுகி - சேர்ந்து— ஆளும் - (நம்மை) யாளுதற்கிடமாகிய— பொன் - பொருட்செல்வத்தை— நகைத்த - இகழும்— கோயில் - ஆலயமாயிருக்கின்றது எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) தேனுலாவு புதுமலர்ச்சித்தாமரைமலர்மே லன்னங்களுலாவி நடனஞ்செய்யப்பார்த்தகண்கள் வானவரைப்போ லதிகவின்பத்தையடையும்படி யுயர்ந்த திருக்காவலூரானது, நக்ஷத்திரவணியைத் தரித்த சென்னியையும் யாவராலும் வணங்கப்படுந் தாமரைமலர்போன்ற பாதங்களையுமுடைய தெய்வப்பெண்ணாகிய தேவமாதாவானவள்- இசைப்பாட்டுப்போலொலிக்கும் வீணையினின்றும் பாட்டுகளினின்றும் வளருமோசைபாயு மிடங்கடோறு மகிழ்ச்சியுண்டாகவும் பூமியினிடத்தொப்பில்லாமல் தம்பத்திலுயர்த்தப்பட்ட சீலைக்கொடிகள் சூரியனுலாவுமாகாய முகட்டிற் றன் விருதுக்கொடிபோ லாடவும் தன்பாதங்களைத் துதித்தவானவர்பாடவு மனிதர்மகிழ்ச்சியாய்த் தேடிவரவும் பூமியில்வந்து நம்மை யாளுதற்கிடமாய்ப் பொருட்செல்வத்தை யிகழுங் கோயிலாயிருக்கின்றதென்றவாறு.

1. "அன்ன" மென்பதிங்கே தொகுத்தல்விகாரம் பெற்றுவந்தது.

2. 3. 4. 5. 6. முகம்என்பவை பகுதிப்பொருள்விகுதிகள்: இலக்கணக்கொத்துஒழிபியல் - ௩௦ - ம் - சூத்திரத்திற்காண்க.

7. பொன்னென்பது அதன்செல்வத்தை யுணர்த்தலாற் கருவியாகுபெயர். (௭௭)

(மடக்கு - எண்சீரடியாசிரியவிருத்தம்.)

கோயிலன்புடையா டாயிலேன்புடையாள்
கூன்மதியடியாள் சோண்மலிமுடியாள்

வா 1 யினைத்துடைப்பா - ஞெயினைத்துடைப்பாள்
வருந்தினர்களிப்பாண் மருந்துநேரளிப்பாள்
பேயடக்கடலாண் 2 மீயடக்கடலாள்
பெரும்புவனத்தே 3 யரும்புவனத்தாள்
தீயுளத்தகல்வா டீயுளத்தகலா
டேவவூர்வணங்குங் காவலூரணங்கே.

(ப-ரை.) தேவவூர் - தேவலோகத்தாரால்— வணங்கும் - வணங்கப்படும்— காவலூரணங்கு- திருக்காவலூர்த் தெய்வப்பெண்ணனவள்— கோயில்- தேவாலயம்— தாயில் - ஈன்றாளினும்— அன்பு - அன்பை— உடையாள் - உடையவள்— இன்பு - இன்பம்— உடையாள் - கெடாதவள்— கூன் - வளைவாகிய— மதி - சந்திரனையுடைய— அடியாள் - பாதங்களையுடையவள்— கோள் - நக்ஷத்திரங்கள்—மலி - நிறைந்த—முடியாள்-சென்னியையுடையவள்— வாய் - வாய்ந்த— இனை - வருந்துதலை— துடைப்பாள் - ஒழிப்பவள்— நோய் - வியாதியையும்— இனைத்து - இப்படிப்பட்டதையும்— உடைப்பாள்- கெடுப்பவள்— வருந்தினர் - நொந்தவர்க்கு— களிப்பாள் - மகிழ்ச்சியாயிருப்பவள்— மருந்துநேர் - அமிர்தத்தைப்போல— அளிப்பாள் - (உயிரைக்) காப்பவள்— பேய் - பிசாசத்தை— அடக்கு - அடக்கிய— அடலாள் - வல்லபத்தையுடையாள்— மீ - மேலுலகத்தை— அடு - அடுக்கும்— அ - அந்த— கடலாள் - சமுத்திரமானவள்— பெரும் - பெரிய— புவனத்து - பூமியில்— அரும்பு - நூதனமாகத்தோன்றிய— வனத்தாள் - அழகினள்— தீ - பொல்லாத— உளத்து - உள்ளத்தினின்று— அகல்வாள் - நீங்குபவள்— தூய் - பரிசுத்தமான— உளத்து - மனத்தினின்று— அகலாள் - நீங்காதவள் எ - று. ஏகாரம் இரண்டும் - ஈற்றசைகள்.

(பொ-ரை.) வானுலகத்தாரால் வணங்கப்படுந் திருக்காவலூரணங்கானவள் எப்படிப்பட்டவளென்னிற், கடவுள்வீற்றிருக்கு மாலயமானவள்: பெற்றதாயினு மன்புள்ளவள்: பேரின்ப மழியாதவள்: பிறையைமிதித்தபாதத்தாள்:நக்ஷத்திரங்கள்நிறைந்த சிரசாள்:நேரிட்டவருத்தத்தையொழிப்பவள்:வியாதியினையு மிப்படிப்பட்டதான துன்பத்தையும் போக்குபவள்: நொந்தவர்க்கு மகிழ்ச்சியாயிருப்பவள்:பிசாசையடக்கிய வலியுள்ளவள்: மேலுலகத்தை யடுத்த நன்மைக்கடலானவள்: பெரியபூமியிலே யழகியாயுள்ளவள்: பொல்லாதமனத்தை நீங்குபவள்: நல்லவுள்ளத்தைவிட்டு நீங்காதவள். என்றவாறு.

1. இனை என்பது முதனிலைத்தொழிற்பெயர்.
2. "மீ" என்பதுஇடவாகுபெயர்.
3. அரும்புஎன்னும் வினைத்தொகை, பண்பாகுபெயர். (எஅ)

(கட்டளைக் கலித்துறை.)

1 அணங்காலந்தூயமு தாகுமணங்கே யனைத்துயிர்க்கு
மணங் 2 காலத்தேன்3 காலுங் காவலைகாவலூர்வங்கெழுந்தா

ளிணங்காத வெவ்வினை யாற்றவித்தேவ விருட்பொழில்செய்
யுணங்காநிழல்வனத் தூழியேகாய்வ ருளங்கெடவே.

(ப-ரை.) இணங்கா - இணங்கிவராத— வெவ்வினை - தீவினைகளையும்— அனைத்துயிர்க்கும் - உயிர்களுக்கெல்லாம்— ஆற்ற - தணிக்கும்படி—அணங்கே- தெய்வப்பெண்ணாகிய தேவதாய்தானே— மணம் - வாசனையை— கால் - வீசும்— அத்தேன் - அப்படிப்பட்டதேனை—காலும் - பொழிகின்ற— கா- சோலைகள்— வளை - சூழ்ந்த— காவலூர் - திருக்காவலூரில்— வந்துஎழுந்தாள்- வந்தெழுந்தருளினாள்— தேவ - தெய்வத்தன்மைபொருந்திய— இருள்- இருண்ட— இ - இந்த— பொழில் - சோலைகள்— செய் - செய்யும்—உணங்கா- (தன்னையடைவார்) துன்பப்படாத—நிழல் - நிழலைக்கொண்ட—வனத்து-கானகத்தில்— ஊழி - நெடுநாளாக— உளம் - (உங்கள்) மனம்— கெட - கேட்டையடைய—காய்வர் - வருந்துவோரே—அணங்கு - கொல்லும்— ஆலம்- விஷமும்— தூய் - தூய்மையாகிய— அமுதுஆகும் - அமுத (மாயினியுங்களுக்கு) முடியும் எ - று. ஏகாரம் இரண்டும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) தெய்வப்பெண்ணாகிய தேவதாய்தானே மனிதர்க்கெல்லாங் கொடியபாவங்களையொழிக்க வாசம்வீசுந்தேனைப் பொழியுஞ்சோலைசூழ்ந்த திருக்காவலூரில் வந்தெழுந்தருளினாள். தெய்வத்தன்மை பொருந்தி விருக்ஷவடர்த்தியாலிருண்ட விச்சோலையினது (தன்னையடைந்தோர்துன்பத்தைத்தீர்க்கு) நிழலைக்கொண்ட கானகத்திலே நெடுநாளாய் மனங்கெட்டு வருந்துவோரே! யினியுங்கட்குக் கொல்லும்விஷமும் பரிசுத்தவமிர்தமாகும்என்றவாறு.

1. "அணங்காலந் தூயமுதாகு" மென்பது ஒருவருங்களுக்குத் தீமை செய்தாலு மது நன்மையாகவேமுடியு மினியுங்கட்குக் கேடில்லையென்பதைக் குறிப்பாலுணர்த்திநின்ற தாதலின் - இது குறிப்பெச்சம்.

2. கால் என்பது பண்பாகுபெயர். 3. காலுமென்பதுமது. (எக)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

கெடவோவெஞ்சா தழவோதஞ்சங் கிளர்தாட்கஞ்சம்புனையாய்நெஞ்சே
சுடவிஞ்சியவஞ் சக 1 வெஞ்சுரமார் துயரற்றினிதீ கதிபெற்றெழநாம்
படமாங்கதிருங் குழலூடுடுவும் பதமார்மதியும் பதமேற்றவளுத்
தடமிட்டுவிளக் குபக்காவனலூர்த் தலமேவினண்2மேலினமேவரசாள்.

(ப - ரை.) நெஞ்சே - மனமே— மேல் - வானுலகிலுள்ள— இனம்- சம்மனசின்கூட்டங்களும்— மேவு - விரும்பிய— அரசாள் - அரசியானவள்— சுட - சுடுதற்கு— விஞ்சிய - (அக்குணம்) மிகுந்த— வஞ்சகம்- சூத்திரத்தையுடைய— வெஞ்சுரம் - வெவ்விதாகிய பாலைநிலத்தையொத்த நரகத்தில்— ஆர் - பொருந்திய— துயர் - துன்பங்களை— நாம் - நாம்—அற்று - நீங்கி— இனிது - இன்பமுள்ளதாக— ஈ - (தான்) கொடுக்கும்— கதி- மோக்ஷத்தை— பெற்று - அடைந்து— எழ - (அதிலே) செல்லும்படியாக— காவனலூர் - தி

ருக்காவலூராகிய— தலம் - இடத்தில்— படமாம்- தனதுபோர்வையாகிய— கதிரும் - சூரியனும்— குழலூடு - குழலின்கணுள்ள— உடுவும் - நக்ஷத்திரங் களும்— பதம் - பாதத்தில்— ஆர் - தங்கிய— மதியும் - சந்திரனும்— பதம்- அழகையும்— ஏற்ற - தகுதியாகிய— அரு - நீங்காத— தடம் - பெருமையை யும்— இட்டு - தந்து— விளக்குப - விளக்க— மேவினள் - சேர்ந்தனள் (அ ப்படியிருக்க) — கெடவோ- நாம்கெடுதற்கோ— எஞ்சாது- குறையாமல்— அழவோ - அழுதற்கோ— தஞ்சம் - (நமக்குத்) துணையாக— கிளர் - விளங் கும்— தாள்கஞ்சம் - (அவ்விராக்கினியினுடைய) பாதாரவிந்தங்களை— புனை யாய் - நீயணிந்துகொள்ளவில்லை - று.

(பொ - ரை.) மனமே!வானுலகிலுள்ள சம்மனசின்கூட்டங்களும் விரும்பிவணங்கு மிராக்கினியானவள் கொடிய பாலைநிலத்தையொத்த நரகவேதனையை நாம்நீங்கித் தானினிதாகக்கொடுக்கு மோக்ஷத்தை ய டைந்துவாழத் திருக்காவலூரிடத்திற் றனதுபோர்வையாகியசூரியனுங் கூந்தலிலிருக்கு நக்ஷத்திரங்களும் பாதத்திற்றங்கிய சந்திரனு மழகை யுந் தக்கபெருமையையுந்தந்துவிளக்கச் சேர்ந்தனள். அப்படியிருக்க நா ம் கெடுதற்கோ வல்ல திடைவிடாமலழுதற்கோ நமக்குத்துணையாய் வி ளங்கு மவ்விராக்கினியின் பாதாரவிந்தங்களை நீ யணிந்துகொள்ளுகிற தில்லை?என்றவாறு.

1. வெஞ்சுரம் என்பது அன்மொழித்தொகை.

2. மேல் என்பது ஆகுபெயர். (அ0)

(கட்டளைக்கலித்துறை.)

மேவித்தயையன்பெ னேர்பூட்டிவேதநூல் வித்துவிதைத்
தாவியைவாட்டு மவாக்களைகட்டி யடைக்கலஞ் 1 சூழ்
தாவியவேலி 2 யாய் நல்வினைபூத்துமீன் றார்முடியாள்
காவனலூரிற்செய் பைங்கூழ்கள்பேரின்பங் காய்த்திடுமே.

(ப - ரை.) மீன் - நக்ஷத்திரங்களாகிய— தார் - புட்பங்களாலலங்கரிக் கப்பட்ட—முடியாள் - முடியையுடைய தேவமாதா— அடைக்கலம்- (தான் தரும்) அடைக்கலமே—சூழ் - சூழ்ந்து—தாவிய - பரந்த—வேலியாய் - வே லியாக—தயை - (தன்னுடைய) கிருபையும்—அன்பு - அன்பும்—என் - என் கின்ற— ஏர் - கலப்பைகளை— மேவி - விரும்பி—பூட்டி - பூட்டியுழுது—வே தநூல் - சத்தியமறைநூலாகிய—வித்து - விதைகளை— விதைத்து - வித்தி— ஆவியை - பிராணனை— வாட்டும் - வருத்தும்— அவா - ஆசையாகிய—களை- களைகளை— கட்டி - கடிந்து— காவனலூரில் - திருக்காவலூரில்— செய்- செய்த— பைங்கூழ்கள் - பயிர்கள்— நல்வினை - புண்ணியத்தை— பூத்து- புட்பித்து—பேரின்பம் - ஆநந்தத்தை—காய்த்திடும் - காய்க்கும் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ரை.) நக்ஷத்திரங்களாகிய புட்பங்களா லலங்கரிக்கப்பட்ட முடியையுடைய தேவமாதா- தான்தருமடைக்கலமே சூழவடர்ந்தவேலியாயிருக்கத் தன்கிருபையு மன்புமென்னுங்கலப்பைகளை விருப்பமாய்ப் பூட்டியுழுது சத்தியவேதநூலாகிய விதைகளைவிதைத்துப் பிராணனை வருத்து மாசையாகிய களைகளைப்போக்கித் திருக்காவலூரிற்செய்த பயிர்கள் புண்ணியத்தைப் பூத்துப் பேரின்பத்தை காய்க்கின்றன. எ - று.

1. சூழ்- என்பது- பகுதியாகியவினையெச்சம்.

2. "ஆய்" என்பது- வினையெச்சத்திரிபு. (அக)

(பாண் - பன்னிரண்டுசீரடியாசிரியவிருத்தம்.)

இடும்புகழேபடப்பாடற் கரும்பொருளேதேடியபாண் மகளேகேளா
யெலாமுரைகொண்டாக்கினனே மழைத்திரள்கொண் டழித்தனனே [கடனீர்மூழ்கிப்
படும்பகற்றேர்நிறுத்தினனேயேழடிபின்னிழுத்தனனேபடியேகாணப்
படர்புணரிபிரித்தனனே யலைநிலைமேனடந்தனனே பூங்காவொப்பச்
சுடும்படர்திக்குளிர்த்தனனே பகலுமிரவாக்கினனே தொன்னோய்நீக் [கித்
துகைத்திறந்தாரெழுப்பினனே மலைநடுங்கப்பிளந்தனனே யினையபாடி
நெடும்புகழார்நாயகிதேன் றருங்காவலூர்வதிந்த நயமாதீன்ற
நிமலனிவன்விளையாடும் படியிதுதானெவ்வுலகுங்கனியமாதோ.

(பத-ரை.) இடும் - (இன்பத்தைத்) தரும்— புகழே - புகழ்ச்சியே— பட- (உனக்கு) உண்டாகும்படி— பாடற்கு - பாட்டிசைத்தற்கு— அரும்பொருளே - அருமையானபொருளையே— தேடிய - தேடின— பாண்மகளே - பாடுவாளே— கேளாய் - கேள்— நாயகி - இராக்கினியாகிய— தேன் - தேனை— தரும் - கொடுக்கும்— காவலூர் - திருக்காவலூரில்— வதிந்த - தங்கிய— நயம் - பேரின்பத்தைத்தரும்— மாது - பெண்— ஈன்ற - பெற்ற— நிமலன்- அமலனானகடவுள்— உரைகொண்டு - சொல்லைக்கொண்டு— எல்லாம் - அனைத்தையும்— ஆக்கினன் - சிருட்டித்தனன்— மழை - மழையினது— திரள்கொண்டு - கூட்டத்தைக்கொண்டு— அழித்தனன்- (பூமியிலிருந்தவற்றை) யழித்தான்— கடல் - (மேற்றிசைக்) கடலினது— நீர் - ஜலத்தில்— மூழ்கி - முழுகி— படும் - அத்தமிக்கவிருக்கும்— பகல்- சூரியனது— தேர்- இரதத்தை— நிறுத்தினன் - நிற்கச்செய்தான்— ஏழ்அடி - ஏழுஅடியளவுக்கு— பின் - பிறகே— இழுத்தனன் - (அதை) யிழுத்தான்—படர் - பரவிய— புணரி - சமுத்திரத்தை— அடி - (அதன்) அடியாகியதரை— காண - தோன்றும்படி— பிரித்தனன் - பிரித்தான்— அலை - கடலாகிய— நிலைமேல்- இடத்தின்மேல்— நடந்தனன் - நடந்தான்— சுடும்- சுடுகின்ற— படர் - பரவிய— தீ- நெருப்பை— பூ - புட்பங்களையுடைய— காவொப்ப - சோலையைப்போல— குளிர்த்தனன் - குளிரச்செய்தான்— பகலும் - பகற்காலத்தையும்— இரவு-

இராவைப்போல— ஆக்கினன் - (இருளச்) செய்தான்— தொல் - பழமையாயுள்ள— நோய் - பலவியாதிகளை— நீக்கி - (பலர்க்கு) நீக்கினதுமன்றி— துகைத்து - வருத்தப்பட்டு— இறந்தார் - மரித்தவரை— எழுப்பினன் - உயிருடனெழுப்பினுன்— நடுங்க - நடுக்கங்கொள்ள— மலை - பருவதத்தை— பிளந்தனன் - பிளந்தான்— எவ்வுலகும் - எந்தஉலகத்தாரும்— கனிய - (இன்பத்தின்) முதிர— இவன் - இக்கடவுள்— விளையாடும் - விளையாட்டுச்செய்யும்—படி - தன்மை— இதுதான் - இப்படிப்பட்டதே— இனைய - இப்படிப்பட்டவைகளை— பாடி - நீபாடி—நெடும்புகழ் - மிகுபுகழை— ஆர்-பொருந்து எ - று. பத்தேகாரங்களும் - தான்-மாது - ஓ - என்பவைகளும், அசைகள்.

(பொ-ரை.) இன்பத்தைத்தரும் புகழேதோன்றப் பாடுதற் கருமையானபொருளையே தேடிக்கொண்டிருக்கும் பாண்மகளே!கேள் இராக்கினியாய்த் திருக்காவலூரிற் றங்கிய பேரின்பநங்கை யீன்றருளிய நிர்மல சர்வேஸ்வரன் வாக்காலனைத்தையு முண்டாக்கினுன்: மழையாற் பூமியிலிருந்தவற்றை யழித்தான்: மேற்கடலின்மூழ்கி யத்தமிக்கவிருந்த சூரியனைச் சோசுவனுக்காக வானத்தில் நிறுத்தினுன் : எசேக்கியாவென்னுமரசனுக்காக வதனை யேழடி பிறகேயிழுத்தான் : யூதர்க்காகத் தரைகாணும்படி சமுத்திரத்தைப் பிரித்தான் : இராத்திரியில் நான்காஞ்சாமத்திற் கடல்மேனடந்தான் : சுடுநெருப்புச்சூளை மூன்று யூதர்க்குப் பூஞ்சோலைபோற் குளிர்ந்திருக்கச்செய்தான்: எசித்துதேசத்தாரை வருத்துதற்காகப் பகலையு மிரவைப்போ லிருளச்செய்தான் * நாட்பட்ட வியாதிகளைப் பலர்க்குத்தீர்த்தான்: வருத்தப்பட்டிறந்த பலரை யுயிரோடெழுப்பினுன்: மலைநடுங்கும்படி யதனைப்பிளந்தான்: எவ்வுலகத்தாரு மின்ப மிகும்படி யிக்கடவுள் விளையாடுந்தன்மை யிப்படிப்பட்டதேயாகும். நீயிப்படிப்பட்டவைகளைப் பாடி மிக்க புகழை யடைக என்றவாறு.

1. எல்லாம்என்பது இங்கேதொகுத்தல் விகாரம்பெற்று வந்தது. (அஉ)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

கனிமாலைசினையேந்தத் தீந்தேனேந்துங்
காவலூராவலூர்ந்தணுகிப்1போற்றும்
பனிமாலை 2 யேந்திரவி கதிர்செய்மாலைப்
பற்றிரண்டாள் பற்றினர் 3வாழ் நாளிற்றுகத்
துனிமாலைதோன்றியுயிர்க் 4 கந்தி 5 மாலை
தோன்றுமுன்றுதிமாலை கொண்டுபைம்பொ
னனிமாலைதிருக்கோயி லிட்த்தாட்டேவ
நங்கைதிருவங்கைதரு மாலை 6 சூடீர்.

---

* அர்ச். மத்தேயுசுவிசேஷம்-அ௯ம்-அதி. உ, ங, ரு, சு, எ, அ, கூ, கo, கக, கஉ; கங, கச, கரு, கசு, கஎ - ம் - வசனங்களிலும் மற்றவிடங்களிலுங்காண்க

(ப-ரை.) பற்றுஇரண்டு- (அகப்பற்றுபுறப்பற்றென்னும்) இருபற்றினால்— ஆள் - ஆளப்படுகிற—பற்றினர் - (மூன்)முசையையுடையோரே—வாழ்நாள்- உங்களுடையஆயுட்காலம்—இற்றுஆக - முடிந்தாக—துனி - துன்பத்தைச்செய்யும்— மாலை - வியாதி— தோன்றி - உண்டாகி—உயிர்க்கு - (உங்களுடைய) பிராணனுக்கு— அந்தி - சாயுங்காலமும்— மாலை - இராக்காலமும்— தோன்றுமுன் - தோன்றுதற்குமுன்னே— ஆவல - ஆசையை— ஊர்ந்து - (நீவிர்) செலுத்தி— சினை - மரக்கிளைகள்— கனி - பழங்களினுடைய— மாலை - ஒழுங்கை— ஏந்த - தாங்க— தீ - மதுரம்பொருந்திய— தேன் - (அக்கனிகளது) தேனை— ஏந்தும் - தாங்கிய— காவலூர் - திருக்காவலூரை— அணுகி - நெருங்கி— பனி - குளிர்ச்சியாகிய— மாலை - குணத்தை— ஏந்தி - தாங்கி— ரவி- சூரியனைப்போல— கதிர் - கிரணங்களை— செய் - செய்கின்ற— மாலை - மேகமானவளை— போற்றும் - வணங்குக— துதி - தோத்திரமாகிய— மாலை - மாலையை— கொண்டு- (நீவிர்காவிற்) கொண்டு—ஆள்- (நம்மை)யாள்கின்ற— தேவநங்கை - அத்தேவமாதானவள்— நனி - மிகுதியாகிய — பை - பசுமை பொருந்திய—பொன்மாலை - ஸ்வர்ணமாலைகளையுடைய—திரு - செல்வம்பொருந்திய— கோயிலிடத்து - கோயிலில்— திரு - சிறப்புப்பொருந்திய— அம்- அழகிய—கை - தன்கையால்—தரும் - கொடுக்கும்—மாலை - ஜபமாலையை— சூடீர் - தரித்துக்கொள்ளுங்கள் எ-று.

(பொ-ரை.) அகப்பற்று புறப்பற்றென்னு மிருபற்றினு லாளப்படுமூன்முசையுடையோரே! யுங்கள்வாழ்நாள்முடியத் துன்பத்தைச்செய்யும்வியாதியுண்டா யுங்களுயிர்க்கு மாலைக்காலமு மிராக்காலமும் வருதற்குமுன்னே நீவி ராசைகொண்டு (சோலைகளிலுள்ள) மரக்கிளைகளெல்லா மொழுங்காகிய கனிமாலைகளைத்தாங்க வவற்றினின்றொழுகுந் தேனைத்தாங்கிய திருக்காவலூரைச்சேர்ந்து குளிர்ச்சியைப்பெற்றுச் சூரியனைப்போலவிளங்கு மேகமானவளை வணங்குங்கள். நம்மையாள்கின்ற வத்தேவப்பெண்ணானவள் மிக்கபசும்பொன்மாலை விளங்கிச் செல்வம் பொருந்திய தன்கோயிலிலே தன்கையாற் கொடுக்குஞ் செபமாலையைத்துதித்துச் சூடிக்கொள்ளுங்கள் என்றவாறு.

1. உம் விகுதியை யுயர்திணைப்பன்மையேவற்கட்கொள்ளுதல் புதியன புகுதல் "சோறிடுந் தண்ணீரும்வாரும்" என்பதனானுங்கொள்க.

2. "ரவ்விற்கம்முதலாமுக்குறிலும்" "மொழிமுதலாகிமுன்வருமே" என்றவிதிப்படி இரவியென்னுமல் - ரவியென்றார் "ரவிகுல" வென்று சிந்தாமணியிற் கூறியவாறெனவறிக. ஏந்திரவியென்பதை ஏந்து இரவியெனப்பிரித்து வினைத்தொகையும் இடைப்பிறவரற்பெயருமாகக் கொள்ளுதலுமொன்று.

3. சேவகாலத்தை நாள் என்றதனு லதன்முடிவை 4. அந்தியாகவும் 5. மாலையாகவுங் கூறினரெனவறிக.

6. ஈர்விகுதி ஏவற்பன்மையில் வருதலை "ஏவற்பன்மைக் கீரீர் மின்மி னீர்" என்னுந் தொன்னூல்விளக்கச் சூத்திரவிதியாற்காண்க. (அரு)

(மடக்கு-அறுசீரடி யாசிரியவிருத்தம்.)

சூடிமலர்வீழ்நீர்க்கயலே துள்ளுங்காவலூர்க்கயலே
நேடியுறைசீர்க்கலிப்புணரி னேராவுறைநீர்க்கலிப் 1 புணரி
யாடியவிர்மீன்பூண்டாளை யண்டிமதியைப்பூண்டாளை
நாடிக்காண்கின்முகந்திருப்பீர் நையாநாளுமுகந்திருப்பீர்.

(ப - ரை.) உணரின் - நாம் யோசிக்குமிடத்து— சூடி - சீலையினிடத்து விழும்— மலர் - புட்பங்களைப்போல— வீழ் - விரும்புகின்ற— நீர் - நீரினிடத்து— கயல் - சேற்கெண்டைகள்— துள்ளும் - குதித்துவிழப்பெற்ற— காவலூர்க்கு - திருக்காவலூர்க்கு— அயல் - அருகிடத்தை - நேடி - தேடி—உறை - சஞ்சரிக்கப்பெறும்— சீர் - செல்வத்தினது— கலிப்பு - மிகுதியை— உறை - உறையென்னும்— நீர் - உவர்நீராயுடைய— கலி - ஒலியைக்கொண்ட— புணரி - கடல்களின்பெருக்கங்களும்— நேரா - நிகராதன— ஆடி - அசைந்து— அவிர் - விளங்குகின்ற— மீன் - நக்ஷத்திரங்களை— பூண்டாளை - அணிந்ததிருக்காவலூர் நாயகியை— அண்டி - நெருங்கி— மதியை - சந்திரனை— பூண் - பூண்ட— தாளை - (அவள்) பாதங்களை—நாடி - விரும்பி—காண்கின் - கண்டால்— முகம் - (உங்கள்) முகத்தை— திருப்பீர் - திருப்பமாட்டீர்கள்—நையா - கெடாமல்— நாளும் - எப்பொழுதும்— உகந்துஇருப்பீர் - களித்திருப்பீர்கள் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ - ரை.) நாம்யோசித்துப்பார்த்தால் தானணிந்தசீலையில் மலர்கள்விழுவதுபோலத் தன்னைச்சூழ்ந்தநீரிற் சேற்கெண்டைகள் துள்ளிவிழப்பெற்ற திருக்காவலூர்க் கருகானவிடத்திற் சஞ்சரிக்கப்பெறுஞ் செல்வமிகுதிக் கிவ்வுலகிலுள்ள நீர்க்கடல்களின்பெருக்கங்கள் நேராகாதன. அப்படிப்பட்ட மேன்மையையுடைய திருக்காவலூரி லெழுந்தருளியவளாய் விளங்கு நக்ஷத்திரங்களை முடியாயணிந்த நாயகியைச் சார்ந்து சந்திரனைமிதித்த வவள்பாதங்களை விரும்பிக்கண்டா லுங்கள்முகங்களை யிப்பாற்றிருப்ப மாட்டீர்கள்: கெடாமலெப்போது மகிழ்ந்திருப்பீர்களென்றவாறு.

1 புணரியென்பது ஆகுபெயர். (அச)

(நேரிசைவெண்பா.)

இருந்தேத்தல்செய்கேனே மூகை 1 சூழேங்கிவ்
வருந்தேன்போல் வந்துவருந் தேனே - வருந்தேவ
காவலூர்கோதைகட் கானேகைப்பற்றவென்
னாவிக்கோர் தேன்றுளியேயாங்கு.

(ப - ரை.) கானே - சோலையே— சூழ் - (இங்கே) சூழ்ந்திருக்கின்ற— ஏங்கு - ஒலிக்கின்ற— இ - இந்த— அரும் - அருமையான—தேன்போல - வ

ண்டுகளைப்போல—மூகை - ஊமை(யாகிய நான்)— வரும் - (இவ்வுலகத்தில்) வந்த— காவலூர் - திருக்காவலூரிலுள்ள— தேவ - தெய்வத்தன்மைபொருந்திய— கோதைகண் - மாலையினிடத்து— இருந்து - தங்கி— ஏத்தல்செய்கேனோ - (அதனைத்) துதியேனோ—என் - எனது—ஆவிக்கு-பிராணநிமித்தமாக—ஆங்கு - அவ்விடத்தில்— வந்து - வந்து— கைப்பு - வெறுப்பு— அற்ற - நீங்கிய—தேன் - தேனினது— ஓர்துளியே - ஒருதுளியையமாத்திரமே—அருந்தேனோ - உண்ணேனோ எ - று.

(பொ-ரை.) சோலையே! இங்குன்னைச் சூழ்ந்து பாடிக்கொண்டிருக்கு நல்லவண்டுகளைப்போல வூமையாகிய நான் வானுலகிலிருந் திவ்வுலகில்வந்த திருக்காவலூர்த் தெய்வமாலையினிடத்துத்தங்கி யதனைத் துதித்துப் பாடமாட்டேனோ? எனது பிராண னுய்யும்பொருட் டங்கேவந் தம்மாலைபொழியுந் தெவிட்டாத தேனி லோர்துளியையேனு முண்ணமாட்டேனோ? என்றவாறு.

I. சூழ் - ஏங்கு - என்னும் வினைத்தொகைகள் தேனென்னுந் தம்மெச்சப்பெயரோடு முடிந்தன. இவற்றுட் சூழ் என்பதை வரிப்புனைபந்து என்பதில் வரி என்பதைப்போல இறந்தகாலவினையெச்சமாகக் கொளி னுமமையும்.(அரு)

(மடக்கு - வஞ்சிவிருத்தம்.)

1 ஆங்கமலத் தேங்கமல மாய்நிலாத்
தாங்கவிரு பாங்கவிரு தா2ளெழீஇ
நீங்கவலை யாங்கவலை நீசவென்
றீங்குவகை நீங்குவகை சேர்ந்ததே.

(ப-ரை.) ஆங்கு - (திருக்காவலூராகிய) வவ்விடத்து—ஆய்-தேவமாதாவினுடைய— நிலா - சந்திரன்— தாங்கு - ஏந்தப்பெற்ற— அவிரு - விளங்குகின்ற— பாங்க - அழகையுடைய— அமலம் - பரிசுத்தமாகிய— தேம் - வாசனைபொருந்திய— கமலம் - தாமரைமலரையொத்த— இருதாள் - இரண்டுபாதங்களும்— எழீஇ - எழுந்தருளி— அலை - கடலைப்போல— ஆம் - (மிக்க) தாகிய— கவலை - துன்பகள்— நீங்க - (என்னை) நீங்க— நீசம் - ஈனம் பொருந்திய— என் - என்னுடைய— தீங்கு - பாவத்தினது— வகை - கூறுபாடுகள்— நீங்கு - நீங்கிய— உவகை - மகிழ்ச்சி— சேர்ந்தது - என்னைஅடுத்தது எ - று.

(பொ-ரை.) சந்திரன்தாங்கப்பெற்று விளங்கு மழகினை யுடையனவாகிய பரிசுத்தவாசம்வீசுந் தாமரை மலரையொத்த தேவமாதாவி னிரண்டுபாதங்களும் திருக்காவலூரி லெழுந்தருளியதினாற் கடல்போன் மிகுந்த துன்பங்களென்னைநீங்க வீனம்பொருந்திய வென்பாவங்களின் வகைகள் நீங்கிய மகிழ்ச்சி யென்னையடுத்தது என்றவாறு.

1. இப்பாட்டில் ஆங்கென்றது உதாரவணிமுகத்தாற் திருக்காவலூரைச்சுட்டிநின்றது. ஊரைப்பெயராகக்கொண்ட அர்ராதிமுதலியவைகளிலோ

ரோவிடத்தே யூர்ப்பெயரின்றிப் பாட்டுரைத்தலுண்டு: அது "சாரங்கஞ்சங்கரி கட்கிச்சித்தேய்ந்தகைச்சங்கரனார், சாரங்கஞ் சங்கரிதாஞ்சக்கரங்கை யிற் ருங்கினன்சேய், சாரங்கஞ் சங்கரி யாநண்ணினர்க்கந்தத்தந்திரத்தா, சாரங்கஞ் சங்கரி தேயெனச்செய்நின் சரண்டந்ததே" யென்ற திருச்செந்திலந்தாதி எ - வது. பாட்டிற்காண்க. அவ்வாறேயிவ்வஞ்சி விருத்தமும் ஊர்ப்பெயரின்றி வந்ததெனக்கொளினுமமையும்.

2. எழீஇ என்றது குற்றெழுத்தளபெடை யென்னு மிலக்கணத்தமைந்த இறந்தகாலவினை யெச்சம். இலக்கணக்கொத்து ஒழிபியல் - ௬- ம்- சூத்திரத்தினும் தொன்னூல்விளக்கம் - ௱ய்கூ - ம் - சூத்திரவுரையினுங் காண்க. (அகூ)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

சேர்ந்தார்மதிபூண் 1 சேர்ந்தாளவளேசேர்ந்தாளெனவேசேர்காவனலூ
ரார்ந்தார்சுரருமார்ந்தார்நரரு மந்தாதியவென் றந்2தாடொழவே
தேர்ந்தாரெவருந்தீர்ந்தார்துயருந்3தேன்றுரொழுகுந்தேன்றுரணியை
நேர்ந்தார்மகிழாநின்றுரினிதே நேர்ந்தார்மூழ்கிநீந்தார்நெடிதே.

(ப-ரை.) மதி - நிலாவானது— பூண் - அணியாக— சேரும் - சேரப்பெற்ற— தாளவள் - பாதங்களையுடைய தேவதாய்— சேர்ந்தாளென - வந்து சேர்ந்தனளென்று— சேர்ந்தார்-அவளுறவினராகியவடியார்கள்—சேர்-சேரப்பெற்ற—காவனலூர்-திருக்காவலூரில்—அந்தாதியஎன்று - கடவுளையுடையவளேயென்று—அம்-அழகிய—தாள்-அவளுடைபாதங்களை—தொழ - தொழுதற்கு— சுரரும் - வானவரும்— ஆர்ந்தார் - வந்துநிறைந்தார்கள்— நரரும்-மனிதரும்— ஆர்ந்தார் - வந்துநிறைந்தார்கள்— தேர்ந்தார் - அவளைத்தெரிந்தவராகிய— எவரும் - யாவரும்— துயரும் - தம்முடைய துன்பங்களையும்— தீர்ந்தார் - நீங்கினூர்கள்— தார் - மலர்களினின்று— தேன் - கள்ளானது— ஒழுகும் - வடியும்— தேன் - வாசனையையுடைய— தார் - மாலையையும்—அணியை - காலணியையும்— நேர்ந்தார் - ஒத்தவராய்— மகிழாநின்றுர் - களிக்கின்றுர்கள்— நேர்ந்தார் - அவளுடையஅன்பர்— இனிது - இன்ப (க்கட) லில்— மூழ்கி - முழுகி— நெடிது - ஊழிவரையிலும்— நீந்தார் - நீந்திக்கரைகாணுர் எ - று. ஏகாரங்கள் ஐந்தும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) நிலாவான தணியாகச் சேரப்பெற்ற பாதங்களையுடைய தேவதாய் வந்துசேர்ந்தனளென் றவளடியார்கள் வந்து சேரப்பெற்ற திருக்காவலூரில் வானவரு மனிதருங் கடவுளைப்பெற்ற தாயேயென் றவளழகிய பாதங்களைத்தொழுதற்கு வந்துநிறைந்தார்கள். அவளைத்தெரிந்த யாவரும் துன்பநீங்கி யவள்பாதங்களுக்குத் தேனொழுகும் வாசப்பூமாலையயுங் காலணிகளையு மொத்தவராகி மகிழ்கின்றுர்கள். அவளுடைய வன்பரான்வ ரின்பக்கடலின் மூழ்கி யூழியுள்ளவளவு மதனைநீந்திக் கரைகாணுரென்றவாறு.

1. சேரும் - என்பதில் உகரம், விகாரத்தாற்றொக்கது.

2. இப்பாட்டில் "தாள்தொழவே தேர்ந்தார்" என்றதனல்3. "தேன்ரு ரொழுகுந் தேன்குரணியை" என்றது அவள்திருப்பாதங்களிலுள்ள மாலையையும் மதியணியையுமென்பது பெற்ரும். மாலையையு மதியணியையும் வானவரு மனிதருமொத்துத் தோன்றலாவது அவைபோல அவள்திருப்பாதங்களின் மேலுங்கீழுமாக அவர்வாயுஞ்சிரமுந்தங்கி விளங்கலெனவறிக. (அஎ)

(பதின்மூன்றுசீரடி யாசிரியச்சந்தவிருத்தம்.)

நெடிதுலைப்பனதுயரயர்வறவற நிலைபயப்பனவருடகவிருடரு
நிசிமறுப்பனபழியழி 1 வொழிதர வாயெலாங்
கடியுதைப்பனவிழையநசையசை கடலடைப்பனவமரரும்விழைவன
2கதிதிறப்பனநிகரிலநல3முல காரவே
துடிதுவைப்பவு மிசைபெறுபுகழெழு தொனிதொனிபபவு முடிவில
தொழுபவர்-துதியொலிப்பவுமுகிலினுமொலியெழு காவலூர்
4படியனைத்திலுமெழ 5நனியருளியை பரிவடைக்கலமெனவிவணெழு
வன-பனிமுகத்தமுதொளிவிரிமதியெழுபாதமே.

(ப-ரை.) துடி - குறிஞ்சிப்பறைமுதலியன—துவைப்பவும் - ஒலிக்கப்படுவனவற்ருலும்—இசை - பாட்டிசைகள்—பெறு - பெற்ற—புகழ் - புகழ்ச்சியையுடைய—எழு - ஏழாகிய—தொனி - சுரவொலிகள்— தொனிப்பவும் - ஒலிக்கப்படுவனவற்ருலும்—முடிவு - இறுதி—இல - இல்லாமல்— தொழுபவர்-வணங்குபவரினுடைய— துதி - தோத்திரங்கள்— ஒலிப்பவும் - ஒலிக்கப்படுவனவற்ருலும்— முகிலினும் - மேகவொலியினும்— ஒலி - பேரொலி—எழு - கிளர்கின்ற—காவலூர் - இத்திருக்காவலூரானது—படிஅனைத்தினும்-பூமிகளெல்லாவற்றினும்—எழ - மேற்படும்படி—நனி - மிக்க—அருள் - கிருபையோடு—இயை - இசைந்த—பரிவு - அன்பினைச்செய்கின்ற— அடைக்கலம்என - உங்கள்அடைக்கலமெங்கட் குண்டாருகவென் றனைவருஞ்சொல்லும்படி—இவண்-இவ்விடத்தில்—எழுவன-எழுந்தருளுவனவாகிய— பனி - குளிர்ச்சியாகிய—முகத்து - முகத்தினல்—அமுது - அமிர்தமாகிய— ஒளி - கிரணங்களை—விரி-பரப்புகின்ற—மதி - சந்திரன்மேல்— எழு - எழுந்தருளிய— பாதம் - (தேவமாதாவின்) பாதங்கள்—நெடிது - நெடுநாளாய்— உலைப்பன - வருத்துவனவாகிய—துயர் - துன்பங்களும்—அயர்வு- மயக்கமும்—அற - ஒழிய—அறம்-தருமத்தினது—நிலை - முறைமையை—பயப்பன - கொடுப்பவை—அருள் - கிருபையானது—தக - பொருந்த—இருள் - அஞ்ஞானவிருளை— தரு - கொடுக்கும்—நிசி - இராவை— மறுப்பன - நீக்குபவை— வாய்எலாம் - இடங்கள்தோறும்—பழி - பாவப்பழியும்—அழிவு - கேடும்—ஒழிதர - ஒழிய—கடி - பிசாசத்தை—உதைப்பன - உதைப்பவை—இவறிய - விரும்பிய—நசை - ஆசையாகிய—அசை - அலையும்—கடல்-சமுத்திரத்தை—அடைப்பன- தடுப்பவை—அமரரும் - வானவராலும்—விழைவன- விரும்பப்பட்டவை—உலகு-பூலோகத்தார்—நிகரில - ஒப்பில்லாத—நலம் - பேரின்பத்தை— ஆர - அனுபவிக்கும்படி— கதி - மோக்ஷத்தின் கபாடத்தை— திறப்பன - திறப்பவை— எ - று. ஏகாரம் இரண்டும், ஈற்றசைகள்.

(பொ-ள்.) குறிஞ்சிப்பறைமுதலிய வொலிக்கப்படுகின்றமையா லும் பாட்டிசைபெற்ற சப்தசுரங்கள் ஒலிக்கப்பெற்றமையாலும் இடைவிடாமற் றெழுபவரினுடைய தோத்திர வொலிக ளொலிக்கப்படுகின்றமையாலும் மேகவொலியினும் பேரொலி யெழுகின்ற வித்திருக்காவலூரானது பூமிகளெல்லாவற்றினு மேன்மை யடையும்படி மிக்க கருணையுமன்புமுள்ள வுமதடைக்கலமெங்களுக்குண்டாகுக வென்றனைவருஞ்சொல்ல விங்கே யெழுந்தருளியனவும் குளிர்ந்த முகத்தாலமுதகிரணங்களைப்பரப்புஞ் சந்திரன்மேலெழுந்தருளினவுமான (தேவமாதாவின்) பாதங்களானவை நெடுநாளாய் வருத்துந் துன்பமு மயக்கமுநீங்கத் தருமத்தின் முறைமையைக்கொடுப்பவை: கிருபைதங்கும்படி யஞ்ஞானவிருளைக்கொண்ட விராவை நீக்குபவை; யெவ்விடத்தும் பாவப்பழியுங் கெடுதியுந்தீரப் பிசாசத்தை யுதைப்பவை: ஆசையென்னுங் கடலை யடைப்பவை: வானவராலும் விரும்பித் துதிக்கப்பட்டவை: இவ்வுலகத்தா ரொப்பில்லாத பேரின்பத்தை யனுபவிக்க மோக்ஷத்தின் கபாடத்தைத் திறப்பவை யென்றவாறு.

1. ஒழிதர என்பதை யொருமொழிபோலக்கொள்க.

2. கதி 3. உலகு என்பவை ஆகுபெயர்கள்.

4. "அனைத்திலு" மென்றதனுற் "படி" யென்பது "எழுபுவிவாழ்கன்னியரில்" என்பதிற் "புவி" என்பதைப்போலத் தீபகண்டங்களைக்குறித்து நின்றதெனக்கொள்க.

5. "நனியருளியை பரிவடைக்கலமெனவிவணெழுமிவள் பனிமுகத்தமுதொளிவிரி மதியெழுபாதமே" யென்றும் பாடமுண்டு: இதுவேண்டின், மிக்க கருணையோ டியைந்தவன்பினைச் செய்கின்ற (வுன்) னடைக்கல (மெமக்குண்டாகுக) வென் (றனைவருஞ்) சொல்லும்படி யிங்கேயெழுந்தருளியவித் தேவதாயின் குளிர்ந்த முகத்தா லமுதகிரணங்களைப் பரப்புஞ் சந்திரன்மேலெழுந்தருளினபாதங்கள்: எனப்பொருளுரைத்துக்கொள்க. (அஅ)

(முதலோடிடையு மிடையோடுகடையுமடங்கிய)

தாழிசை.

மதியெழுந்தபாதமே 1 மதிகடந்தவேதமே
2 மருண்மறந்தநீதமே 3 யருள்சிறந்தசீதமே
துதியெழுந்தசீலியே விதிவிரிந்தமாலியே
துணையெழுந்தசூலியே திணையமைந்தவேலியே
கதியரும்புகமலமே நிதி 4 யரும்புமமலமே
கடவுடந்தபதவியிங் கிடவுயர்ந்தவுதவியாய்
நதிவழங்குகாவலூர்ப் பதிவழங்குகாவலே
நன்னையாகமுன்னையா ளென்னையாளுமன்னையே.

(ப-ரை.) மதி - புத்தியினதுகோசரத்தை— கடந்த - தாண்டிய— வேதமே - ஆரணமே— மருள் - பிசாசத்தால்—மறந்த - மறக்கப்பட்ட—நீதமே-நீதியே—அருள்-கிருபையினது காரியமாகியநன்மை—சிறந்த - மிகுந்த—சீதமே - மேகமே— துதி - தோத்திரம்— எழுந்த - எழப்பெற்ற— சீலியே-ஞானவொழுக்கத்தை யுடையவளே— விதி - வேதாகமமுறைகள்— விரிந்த - விரியப்பெற்ற— மாலியே - சூரியனே—துணை - (உலகத்திற்குச்) சகாயமாக— எழுந்த - எழுந்தருளிய— சூலியே - கருப்பத்தையுடையவளே— திணை - (மனு) குல (மாகியபயிர்க்கு)—அமைந்த - பொருந்திய—வேலியே-வேலியே—கதி - மோக்ஷமானது— அரும்பு - முகைக்கப்பெற்ற— கமலமே - தாமரைக்கொடியே—நிதி - ஞானபொக்ஷமானது— அரும்பும் - தோன்றும்— அமலமே - பரிசுத்தமே— கடவுள் - சுவாமியால்— தந்த - (உன்மூலமாகச்) சொடுக்கப்பட்ட— பதவி - பேரின்பச்செல்வத்தை— ஈங்கு - இவ்வுலகத்தில்— இட - (எமக்குத்) தர— உயர்ந்த - மேலான— உதவியாய் - துணையாகி— நதி - காவிரியாறு— வழங்கு - செல்லப்பெற்ற— காவலூர் - திருக்காவலூரென்னும்—பதி - ஸ்தலத்தில்— வழங்கு - இயங்குகின்ற— காவலே - காப்பே—அன்னையே - தாயே— நன்னை - உன்னுபகாரம்—ஆக - எனக்குக்கிடைக்க—முன்னை - பழைய— ஆள் - அடிமையாகிய— என்னை - என்றனை—மதிசந்திரன்மேல்— எழுந்த - எழுந்தருளிய— பாதமே - (உன்னுடைய) பாதங்களே— ஆளும் - ஆள்வன எ-று.

(பொ-ரை.) புத்தியினது கோசரத்தைக்கடந்த வேதமே! பிசாசினல்மறக்கப்பட்ட நீதியே! மிக்க நன்மையைப்பொழியுமேகமே! துதிக்கப்படு ஞானவொழுக்கத்தை யுடையாளே! வேதாகமவிதிகள் விளங்கிய சூரியனே! உலகத்திற்குபகாரஞ் செய்ய வெழுந்த சூலுடையாளே!மனுகுலமாகிய பயிரைக்காக்க வமைந்தவேலியே! மோக்ஷமாகிய வரும்பைத்தருந் தாமரைக்கொடியே! ஞானபொக்ஷமானது தோன்றும்பரிசுத்தமே! உன்னைவேண்டுதலாற் கடவுள் தரும்பேரின்பச்செல்வத்தை யிங்கே!யெமக்குத் தருதற் கோர் துணையாய்க் காவிரியாறுசெல்லுந் திருக்காவலூரிற்சஞ்சரித் தெம்மைக் காப்பவளே!தாயே!உன்பழவடியனாகிய வென்னைச் சந்திரன்மேலெழுந்த வுன் றிருவடிகளே யாண்டுகொள்ளுமென்றவாறு.

1. வேதமேயென்று வாளாகூறாது "மதிகடந்த" வென்னும் விசேடணங்கூட்டிக்கூறினார், பிறவேதங்களைப்போல மனிதராற் சமைக்கப்பட்டது மவரறிவிற்குக் கோசரப்பட்டதுமன்றி யொப்பற்ற கடவுளாற்றரப்பட்டு விளங்குவது சத்தியவேதமென்பதறிவித்தற்கெனவுணர்க.

2. "மறந்த" வென்றதனால்மருளென்றதுபிசாசத்தையென்பதுபெற்றாம் பிசாசுமறத்தலாவது தேவமாதாபூமியிற் பிறந்திருந்தகாலத்தி லிவளைவெல்ல முயன்ற பிசாச மிது சாத்தியப்படாதென்றுகருதி யத்தொழிலைவிடல்.

3. அருள் என்பது கருவியாகுபெயர். 4. அரும்புதல் பண்பாகுபெயர். ()

(நேரிசைவெண்பா.)

அன்னையேநீயல்லா லன்புற்றென்னோயறிந்தீங்
கென்னையேயார்யா ரினிக்காப்பார்-தொன்னோய்
பெருக்காவறீரப் பெருமருந்தாநீயா
டிருக்காவலூர்1விளையுந் தேன்

(பதவுரை.) அன்னையே - தாயே—தொல் - பழமையாகிய—நோய் - பிணியானது—பெருக்கு - பெருகுவிக்கின்ற—ஆவல் - அவா (வாகியநோய்)—தீர - ஒழிய—பெருமருந்தா - பெரியமருந்தாக—நீயாள் - நீயாளாநின்ற—திருக்காவலூர் - திருக்காவலூரில்— தேன் - தேன்— விளையும் - உண்டாகின்றது (ஆதலால்)—நீயல்லால் - நீயன்றி— ஆர் - பூமியிலுள்ள— யார் - எவர்— இனி - இனிமேல்—ஈங்கு - இவ்விடத்தில்—என் - என்னுடைய— நோய்-பிணியை—அறிந்து - தெரிந்து—அன்புஉற்று - அன்புகொண்டு— என்னை-என்றனை—காப்பார் - காப்பாற்றுவார் எ - று.

(பொ-ரை.) தாயே! பழமையாகிய பாவப்பிணியானது மிகுவிக்கின்ற அவாவென்னும்நோய்தீரப் பெரிய மருந்தாக (நீயாளுந்திருக்காவலூரிலே) தேன்விளைகின்றது ஆதலால் - நீயல்லாமல் இவ்வுலகிலுள்ள யாவர் இனியிங்கே என்பிணியையறிந்து அன்பா யென்னைக் காப்பாற்றுவார் என்றவாறு.

இச்செய்யுளில்- "தொன்னோய்" என்றது ஆதிமனிதர்செய்த பாவத்தை எனவும் - "தொன்னோய் பெருக்காவல்" என்றது அதனாலுண்டாகுஞ் சென்ம பாவ கன்மபாவங்களைஎனவும்- "பெருமருந்தா" "விளையுந்தேன்" என்றது அப்பாவங்களைப்போக்கும் ஞானஸ்நாநம் தேவநற்கருணைமுதலிய தேவதிரவியாநுமானங்களைஎனவும் கொள்க. ஆவலைத்தீர்க்குமருந்து தேனேயாயினும் அது திருக்காவலூரில் விளைதற்கு அவளது கருணையோடுகூடிய ஆளுகையே காரணமாதலால் "அன்னையே நீயல்லா லன்புற்றென்னோயறிந்தீங் - கென்னையேயார்யா ரினிக்காப்பார்" என்றாரெனவறிக.

1. "விளையும்" என்பதையும் "தேன்" என்பதையும் பன்மைவினைமுற்றாகவும் பன்மைப்பெயராகவுங் கொளினும் அமையும். (கo)

(பன்னிரண்டுசீரடியாசிரியவிருத்தம்.)

தேன்வீற்றிருக்கும்பனிநறும்பூஞ் சினைக்காநிழற்றுங்காவனலூர்த்
திருவீற்றிருக்கும் பொற்கோயிற் றீம்பாற்கதிர்க்கூன்மதிக்குறட்டே
மீன்வீற்றிருக்குமணங்கநலாள் விரிவாய்த்தொளிவாய்விதானத்துள்
விண்வீற்றிருக்குந்தளந்தொழுது விரும்பிச்செய்யும் பணிகேட்ப
வான்வீற்றிருக்கு ஞாயிறுபோல் வையமெங்கு1மருணீக்கி
2வாழ்வீற்றிருக்கு முகிற்கையால் வளையாநயன்பெய்வானரசா

டான்வீற்றிருக்குமென்மனமே தழைப்பநோக்கவேண்டியவ
ட்யைவீற்றிருக்குந் திருவடியென் றலையவேயென் றலையவே.

(ப-ரை.) தேன் - வண்டுகளானவை— வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்— பனி - குளிர்ச்சியையுடைய— நறு - வாசனையைக்கொண்ட— பூ- மலர்களைப்பெற்ற— சினை - கிளைகளையுடைய— கா - சோலைகள்— நிழற்றும்- நிழலைச்செய்யப்பெற்ற— காவனலூர் - திருக்காவலூரில்— திரு - செல்வங்கள்— வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்— பொன் - அழகிய— கோயில் - ஆலயத்தில்— தீ - மதுரம்பொருந்திய— பால் - அமிர்தமாகிய— கதிர் - கிரணங்களையுடைய— கூன் - வளைவுள்ள— மதி - சந்திரனாகிய— குறட்டு - வேதிகையின்மேல்— ஒளி - நக்ஷத்திரங்களே— வாய் - அமைந்த—விரி-பரந்த—வாய்த்து - வாயதான—விதானத்துள்-படங்கினுள்—விண்-வானுலகில்— வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்—தளம்- (சம்மனசு) சேனைகள்—தொழுது - வணங்கி—விரும்பி - ஆசைகொண்டு—செய்யும் - (தாம்) செய்யவேண்டிய—பணி - வேலைகளை—கேட்ப - கேட்க—மீன்-விடியனக்ஷத்திரம்போல— வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்—அணங்க - அழகையுடைய—நலாள்-நங்கையும்—வான் - ஆகாயத்தில்—வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்— ஞாயிறுபோல் - சூரியனிருளைநீக்குதலைப்போல—வையம்எங்கும் - பூமியினெவ்விடத்திலும்—மருள் - மனமயக்கத்தை—நீக்கி - விலக்கி—வாழ்-(யாவர்) வாழ்வும்— வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்— முகில் - மேகத்தையொத்த— கையால் - கரத்தால்— வரையா - அளவிடக்கூடாத— நயன் - நன்மையை— பெய் - பொழியும்— வான்அரசாள் - மோக்ஷராக்கினியும்— தான் - தான்— வீற்றிருக்கும் - வீறுபெற்றிருக்கும்— என்மனம் - எனதிருதயமானது— தழைப்ப - (வரங்களால்) தழைக்கும்படி— நோக்க - (என்னைக்) காக்க—வேண்டியவள் - விரும்பியவளுமான தேவமாதாவினுடைய— தயை - கிருபை—வீற்றிருக்கும் - விளக்கம்பெற்றிருக்கும்—திரு - அழகிய— அடி - பாதங்கள்—என் - எனது—தலையவே - சிரசினிடத்தனவேயாம்—என் தலையவே - எனது சிரசினிடத்தனவேயாம் எ - று. "குறட்டே" "மனமே" என்பவைகளின் ஏகாரமிரண்டும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) வானுலகில் விளங்குஞ் சம்மனசின் கூட்டங்கள் வந்துவணங்கி யாசையோடு தாஞ்செய்யவேண்டிய வேலைகளென்னவென்று கேட்கும்படி வண்டுகள்தங்கி வாசம்பொழியும் பூங்கிளைகளைக்கொண்டசோலைகளால் நிழல்செய்யப்பட்ட திருக்காவலூரிற் செல்வங்குடிகொண்டிருக்குந் திருக்கோயிலிலே மதுரமான வமிர்தகிரணங்களைவிரிக்கு மிளஞ்சந்திரனாகிய மேடையின்மேல் நக்ஷத்திரங்களாகிய பரந்த விதானத்தினுள் விடியனக்ஷத்திரம்போல வீற்றிருக்கு மழகிய நங்கையும் ஆகாசத்தில் விளங்குஞ் சூரியனிருளை நீக்குதலைப்போலப் பூமியெங்கு மனமயக்கத்தைநீக்கி யாவர்வாழ்வும் விளங்கப்பெற்றனவாய் மேகத்தைப்போலக் கைம்மாறுகருதாது கொடுக்குங் கையா லளவிடப்படாத நன்மை

யைப்பொழிவு மோக்ஷராக்கினியும் தான்வீற்றிருக்கு மென்மனமானது தேவவரங்களாலே தழைக்கும்படி யென்னைக்காக்க விரும்பியவளுமான தேவமாதாவின் கிருபைதங்கிய திருவடிக ளென்சிரசிலேயேயுள்ளன வென்சிரசிலேயே யுள்ளனவென்றவாறு.

1. மருள்நீக்கி என்பதற்குப் பேய்களைவிலக்கி எனப்பொருள் கூறுதலுமொன்று.

2. வாழ்என்பது முதனிலைத்தொழிற்பெயர் "வாழ்வீற்றிருக்கு முகிற்கையால்" என்றார் யாவர்வாழ்வு மித்தேவதாயின் கரத்திலிருந்து கொடுக்கப்படுகின்றதென்பது தோன்றவெனவறிக. (கூக)

(குறம் - எண்சீரடியாசிரியவிருத்தம்.)

என்றலையெண்ணெயொ 1 டம்மைபழங்கலையீந்
தென்குறமன்பொடு 2 கேளீர்காவனலூர்
3. மின்றலையாடரு மாலையொ4 டுத்தரியம்
வேட்டனர் 5 வேட்டலர் 6 விட்டறவிட்டுயர்தாய்
தன்றலைமீனொடு பூணிருவான்சுடருந்
தாமணிவாரிரு ளுள்ளணியாத்தெளிவார்
துன்றலையம்புவி யாண்டபினம்புலிபோற்
றோன்றினர்வானரசாளுவர்வேதமிதே.

(ப - ரை.) அம்மை - அம்மா— என் - எனது— தலை - தலைக்கு— எண்ணெயொடு - யெண்ணெயுடனே— பழங்கலை - பழஞ்சீலையும்— ஈந்து - தந்து— என்- என்னுடைய— குறம்- குறத்தை—அன்பொடு- பிரியத்துடனே— கேளீர் - கேளும்— காவனலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய— மின்தலையாள் - பெண்ணிற்சிறந்தவள்—தரும் - கொடுக்கும்— மாலையொடு - ஜபமாலையுடனே— உத்தரீயம் - உத்தரீயத்தையும்— வேட்டனர் - விரும்பினவராகிய— வேள்தலர் - மண்ணுலகத்தார்— வீட்டு - விடவேண்டியவற்றை— அற - முற்றாக— விட்டு - விட்டுநீங்கி— உயர் - உயர்ந்த— தாய் - அவ்வன்னையினது—தலை - சிரசிலுள்ள— மீனொடு - நக்ஷத்திரங்களோடு—பூண்- (அவள்தன் மார்பிலும்பாதத்திலு)மணிந்த—வான் - ஆகாயத்தில்விளங்கும்—இருசுடரும்- சூரியசந்திரர்களையும்— அணிவார் - அணிபவரைப்போல— இருள் - அந்தகாரத்தை— உள் - மனத்தில்— அணியா - பூணமல்— தெளிவார் - தெளிவடைவாராகி - துன்றுஅலை— நெருங்கியஅலைகளையுடைய - அம்— நீர்சூழ்ந்த - புவி— பூமியை - ஆண்டபின் - ஆண்டிருந்தபின்— வான் - வானுலகத்தில்— அம்புலிபோல் - சந்திரனைப்போல— தோன்றினர் - முளைத்தவராகி— அரசாளுவர் - அங்கேயரசாட்சிசெய்வர்— இது - இஃது— வேதமே - ஆரணமேயாகும் எ - று. தன் தாம் அசைகள்.

(பொ-ரை.) அம்மே!யென்னுடைய தலைக்கெண்ணெயுங் கட்டப்பழஞ்சீலையுந் தந்து நான்சொல்லுங் குறத்தை யன்பாய்க்கேளும். திருக்

காவலூரி லெழுந்தருளிய மாதரசியானவள் கொடுக்குஞ் செபமாலையை யு முத்தரீயத்தையும்விரும்பியணிந்த மனிதர் வேதத்தில் விலக்கப்பட்ட வனைத்தையும் விலகி மேலானவவ்வன்னையின் சிரசிலுள்ள நக்ஷத்திரங் களையும் அவள் தன் மார்பிலும் பாதத்திலு மணிந்த சூரியசந்திரர்களையு மணிபவரைப்போல மனத்திருளின்றித் தெளிந்து கடல்சூழ்ந்த பூமியை யாண்டபின்னர்ச் சந்திரனைப்போல வானுலகத்தில் விளங்கி யரசாட்சி செய்வார். இதுவேதமே யென்றவாறு.

1. இங்கே "அம்மை" யென்னுமொருமைவிளி 2."கேளீர்"என்னும்பன்மை வினையோடு மயங்கிவந்தது உயர்வினாலாதலின் அக்காரணவழுவமைதி.

3. "மின்றலையாள்" என்பதில் உயர்வுமுதலிய காரணமின்றிப் "பெண் ணிற்சிறந்தாள்" "மாதரசி" "ஏவலினைஞர் தாய்வயிறுகரிப்ப" என்பவற்றில் பெண், மாது, தாய் என்பவற்றைப்போலப் பன்மைப்பாலைத் தழுவிவருதலி ன் இயல்புவழுவமைதி.

4. உத்தரீய மென்னு மொழி இங்கே குறுக்கல் விகாரம்பெற்று வந்தது.

5. "வேட்டலர்" என்பதில் வேள் என்பதற்குப் பொருள் மண் ஆதலா னும் தலர் என்பதற்குப்பொருள் தலத்திலுள்ளவராதலானும் - வேட்டலரெ ன்றதற்குப்பொருள் மண்ணுலகத்தாரென்றும்.

6. வீடு என்பது நெடிற்றொடர்க்குற்றுகரமொழியாதலின் டவ்வொற்று வேற்றுமைக்கண் இரட்டிவந்தது. (கஉ)

(இடைமடக்குத்தாழிசை. அல்லது - தரவுகொச்சகக்கலிப்பா.)

வேதவிளக்கெனவந்தாள் விரதவிளக்கெனநின்றாள்
சீதமுகிற்கிணையீந்தா டிருவினிகற்கிணைதந்தா
ளோதமெனக்கரையில்லா ளுயிரினெனக்கருணல்லாள்
காதலூரக்கதி 1 யானுள் காவலூரப்பதியாளே.

(ப-ரை.) ஓதமென - கடலைப்போல— கரையில்லாள் - (தான்கொண்ட புகழுக்) கெல்லையில்லாதவளும்— உயிரின் - பிராணனைப்பார்க்கிலும்— என க்கு - எனக்கு— அருள் - தரும்— நல்லாள் - (எல்லா) நன்மையையுமுடைய வளும்— காதல் - (எனது) ஆசை— ஊர - தன்னிடத்திற்செல்ல— கதிஆனு ள் - மோக்ஷமானவளுமான— காவலூர் - திருக்காவலூரென்னும்—அ - அந் த— பதியாள் - ஸ்தலத்தையுடையவள்— வேதம் - சத்யவேதத்தினது— வி ளக்குஎன - ஒளிஇவளென்னும்படி— வந்தாள் - இங்கேவந்தனள்— விரதம்- தவத்தால்விளங்கும்—விளக்கு என - தீபத்தைப்போல—நின்றாள் - நின்றன ள்— சீதம் - குளிர்ச்சியையுடைய— முகிற்கு - மேகத்திற்கு—இணை - நேரா க— ஈந்தாள் - வரங்களைத்தந்தனள்—திருவின்-பேரின்பச்செல்வத்தினது— இகற்கு - வலிமைக்கு— இணை - தன்னிச்சையை— தந்தாள் - கொடுத்தன ள் எ று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ள.) கடல்போலமட்டுப்படாத புகழையுடையவளும் என்னுயிரினு மெனக்கெல்லாநன்மையையுந் தருபவளும் என்னுசைசெல்லும் பாகதியானவளுமான திருக்காவலூர்நாயகி, யிவள் சத்தியவேதத்திறனிளியென்னும்படி யிங்கேவந்தனள்: (நெய்யாலன்றித்) தவத்தால் விளங்கு மொரு விளக்கைப்போல நின்றனள்: மேகத்தைப்போல வரங்களைப் பொழிந்தனள்: பேரின்பச்செல்வம் பூமியில் வலிபெற்றோங்க விரும்பினளென்றவாறு.

1. ஆறு ளென்பது வினையாலணையும்பெயர். (கஙு)

(மதங்கி-தரவுகொச்சகக்கலிப்பா. அல்லது - கலிவிருத்தம்.)

1பதியுகிர்வெம் பருந்தெடுப்பப் பசுங்கிள்ளைபதைத்தழைப்ப
வதியருள்கொண்டுதவிய 2 தே வனமாளுந்திருக்காவற்
றுதியருளொண்குயில்பாடத் துணையாடுமெயிலல்லான்
மதிமருண்மற்றொருமதங்கி மருவாதிங்கெழுந்தகையே.

(ப - ள.) பதி - அழுந்தும்—உகிர் - நகங்களை யுடைய—வெம் - வெவ்விய—பருந்து - பருந்தானது—எடுப்ப-எடுக்க—பசுங்கிள்ளை-(அவ்வெடுக்கப்பட்ட) பசியகிளியானது—பதைத்து - துடித்து—அழைப்ப-(மரியேயென்று) விளிக்க—அதி - அதிகமான— அருள்கொண்டு - கருணைகொண்டு— உதவிய-(அதற்) குதவிசெய்த— தேஅனம்-தெய்வத்தன்மை பொருந்திய அன்னத்தையொத்த தேவமாதா—திருக்காவல்-(இந்தத்) திருக்காவலூரை— ஆளும்-ஆளுகின்றாள் (ஆதலால்) —துதிஅருள் - (அவளுடைய)புகழ்ச்சியையும் கருணையையும்— ஒண்குயில் - ஒள்ளியகுயில்கள்— பாட - பாட— துணை - (தந்) துணையோடு—ஆடும் - ஆடுகின்ற—மயிலல்லால் - மஞ்ஞைகளேயல்லாமல்— மதிமருள் - அறிவுமயங்கிய—மற்றொருமதங்கி - வேறோர்மதங்கியானவள்—இங்கு-இவ்விடத்து— மருவாது - சேராமல்— தகை - (அவளது) தயை— எழும் - மிகும் எ - று. ஏகாரம் ஈற்றசை.

(பொ-ள.) அழுந்தும் நகங்களைக்கொண்ட கொடியதோர்பருந்து வந் தொருகிளிப்பிள்ளையைத் தூக்கிக்கொண்டபோ தது பதைத்து மரியே யென்று தன்னைக்கூப்பிட் வுடனே மிக்கவருள்கொண் டதற் குதவியாய்க்காத்த தெய்வீக வன்னம்போன்ற தேவமாதா இந்தத்திருக்காவலூரை யாள்கின்றுளாதலால் அவளுடைய புகழ்ச்சியையுங் கருணையையுங் குயில்கள்பாடத் தம்முடைய துணையோடாடு மயில்களல்லாமல் அறிவு மயங்கிய மற்றொருமதங்கி பாடவுமாடவு மிங்கேநெருங்காம லவளது தயைமிகுந்திருக்கின்றது என்றவாறு.

1. பருந்தெடுத்தகிளி, மரியே யென்றதையுந்-தேவமாதாவதனைக்காத்ததையுந்—தேவமாதாபிள்ளைத்தமிழ் - வாரானைப்பருவம்—உ - வது. பாட்டில்-"மின்னூர்கரத்தேந்திச் செறிந்தமொழி மாமரியெனச்— செப்புதலரிப்பற

வை தனைவனப்பறவையினை சென்று கொடுபோகாமலே—பூங்கிளிதனக்குயி ரளித்தநற்கருணைபரி பூரணக்கொடிவருகவே" என்பதினுங்காண்க.

2. தேவணம் எபன்து, அன்மொழித்தொகை. (கச)

(அறுசீரடி யாசிரியவிருத்தம்.)

எழுந்தடிகீழ்க்குழவிமதி1யமுதிறைப்பக்2குழலணிமீனிமைத்துப்3 பூ
ப்பச்] [ட்டிக்
4 செழுந்திருவின்மார்பிலணி செங்கதிரினொளிதியங்கச் செங்கைநீ
கழுந்தகைவான் வீட்டழகுகாட்டுதற்கே காவனலூர்க்5கனிச்சென்
றாளோ] [ள்
வழுந்தொளிவாய்க் கெழுந்துளிவார் கமலத்தாளமலத்தா ளரும்பாநல்லா

(ப - ரை.) அழுந்து - (தாம்) அழுந்தப்பெற்ற— ஒளிவாய் - சந்திரன் மேல்— செழும் - (இனிமை) நிறைந்த— துளி - (தேன்) துளிகளை— வார் - பெய்கின்ற—கமலம் - தாமரைமலர்போன்ற— தாள் - பாதங்களையுடைய— அமலத்தாள் - விமலியும்—அரும் - அருமையான—பா - பாவினும்—நல்லாள்- இன்பத்தைத்தருபவளுமான தேவமாதா—கழும்-நிறைந்த—தகை மேன்மை யையுடைய—வான்வீட்டு - மோக்ஷவீட்டினது—அழகு - அழகை—காட்டுதற் கே - காண்பித்தற்காகவே— எழுந்து - (வானுலகத்தைவிட்) டெழுந்து— அடி - தன்னுடையபாதங்களுக்கு—கீழ் - அடியிலுள்ள—குழவிமதி - பிள்ளைச் சந்திரன்—அமுது - அமிர்தகிரணத்தை—இறைப்ப - ஊற்றவும்—குழல்-கூந் தலில்—அணி - அணிந்த— மீன் - நக்ஷத்திரங்கள்— இமைத்து - விளங்கி— பூப்ப - மலரவும்— செழும் - மாட்சிமைகொண்ட— திரு - செல்வமாகிய— வில் - பிரகாசத்தைத்தரும்—மார்பில் - உரத்தினிடத்து—அணி - அணிந்த— செங்கதிரின் - சூரியனுடைய—ஒளி - கிரணங்கள்—தியங்க - அசையவும்— செம் - செம்மையையுடைய— கைநீட்டி - கரங்களைநீட்டி— காவனலூர் - தி ருக்காவலூரில்—கனி - இரங்கி—சென்றாளோ - போயினளோ எ - று.

(பொ-ரை.) சந்திரன்மேலழுந்தித் தேன்றுளிகளைப் பொழியுந் தா மரைமலரையொத்த பாதங்களையுடைய விமலியு மினியபாவினு மின்பஞ் செய்பவளுமான தேவமாதாவானவள் மேன்மைபொருந்திய மோக்ஷ வீட்டழகைக்காட்டுதற்காகவே வானுலகத்தை விட்டெழுந்து தன் திருக் கரத்தை நீட்டித் தன்பாதங்களின்கீ ழிளஞ்சந்திர னமுதகிரணங்களை யி றைக்கவும் கூந்தலில் முடியாகவணிந்த நக்ஷத்திரங்கள் விளங்கிமலர வு மாட்சிமைகொண்ட திருக்கதிர்வீசு மார்பிலணிந்த சூரியனுடைய கிரணங்க ளசையவுந் திருக்காவலூரில் மனமிரங்கிவந்தாளோ? வென்ற வாறு.

1. சந்திரனுடைய கிரணங்களை யமுதகிரணங்களென்பவாதலின் "அமு திறைப்ப" வென்றார்.

2. "குழலணி" யென்றமையாற் 3. பூப்பவென்பதற்கு "மலர" வெனவும் இவ்வன்னையின் மனமானது பேரின்பச்செல்வங்களைக் கருதிவிளங்கலானும் மனமானது யாவர்க்கு மார்பினுள்ளிருத்த லியல்பாதலானும் 4. "செழுந்திருவின்மார்பு" என்றதற்கு மாட்சிமைகொண்ட செல்வமாகிய பிரகாசத்தைத் தரும் உரம் எனவுங்கூறினுமெனவறிக.

5. கனி என்றது வினையெச்சப்பொருளில்வந்த முதனிலைத்தனிவினை. இலக்கணக்கொத்து வினையியல் - உ-வது. சூத்திரத்திற்காண்க. (கூ௫)

(தூது - கட்டளைக்கலித்துறை.)

அரும்பாமுகைத்தேவ கன்னிதவ 1 மறி யாதனவோ
விரும்பாமணத்தூ துரைகூறவுற்றாய் வியப்பனகேள்
2 டிரும்பாமுகைசேர் கனியொப்பக் 3 கன்னியாய்த் தேவமைந்தற்
றரும்பான்மை கூறுந்தூ தாயினேன்காவலூர்த்தாயிழைக்கே.

(ப - ரை.) அரு - அருமையான— உம்பா - உம்பனே— முகை - மொக்குளையொத்த— தேவ - தெய்வத்தன்மைபொருந்திய— கன்னி - கன்னியினுடைய— தவம் - விரதங்கள்— அறியாதனவோ-(உன்னா)லறியப்படாதனவல்லவே— விரும்பா - அவள்விரும்பியிராத— மணம் - விவாகத்திற்கு— தூது உரை - தூதமொழியை— கூற - (அவளிடத்திற்) சொல்ல—உற்றாய் - (நீதூதனாகப்) பொருந்தினை— வியப்பன - வியக்கப்படுவனவற்றை—கேள் - (சொல்லுவேன்) கேளாய்— காவலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய— தாய் - தாயாகிய— இழைக்கே - அந்தத்தேவாபரணத்திற்கே—திரும்பா - (தன்னியல்பு) மாறாத— முகை - மொக்குளினோடு— சேர் - சேர்ந்த— கனியொப்ப - கனியைப்போல— கன்னியாய் - கன்னியாகவேயிருந்து— தேவமைந்தன் - தேவசுதனை—தரும் - (புருடனுதவியில்லாமல்) பெறும்—பான்மை - தன்மையை—கூறும் - சொல்லும்—தூதுஆயினேன் - தூதனாகினேன் (யான்.) எ-று.

(பொ-ரை.) அரியவானவனே! பூவரும்பையொத்த தேவகன்னியின் தவங்கள் நீயறிந்தவைதாமே. அவள்விரும்பியிராத விவாகத்திற் கவளை யியைவித்தற்கானதூதுசொல்லும்படி தூதனாயினை நீ. இவ்வதிசயத்தைக்கேள்! திருக்காவலூரிலெழுந்தருளியதாயுந் தேவாபரணமுமாகிய வளவட்கே தன்னியல்புமாறாத பூவரும்போடுகலந்தகனியைப்போலக் கன்னியாகவேயிருந்து தேவசுதனைப்பெறுந்தன்மையைச் சொல்லுந்தூதனாகினேன்யா னென்றவாறு.

இச்செய்யுள் திருக்காவலூர்நாயகி தேவகர்ப்பங் கொள்ளுதற்கான விசேஷத்தை யவட்குக்கொண்டுவந்த தேவதூதனாகிய காபிரியேலானவ ரவளது திருக்கல்யாணத் தூதனாகிய மற்றொருவானவனைநோக்கி யுரைத்ததாகக் கூறப்பட்டது.

1. "அறியாதனவோ" என்பதில்ஓகார மெதிர்மறைப்பொருளில்வந்தது.

2. தேவமைந்தனைப்பெறும்பான்மையாற் கன்னிமையழியாதவளு மவளிடத் தவதரித்த திருக்குமாரனுந் தன்னியல்புமாருத வரும்பினேடுசேர்ந்த கனிபோலத் தோன்றலால்"திரும்பாமுகைசேர் கனியொப்ப வென்றவர்" 3. கன்னியாய்த்தேவமைந்தற் றரும்பான்மை" என்றார். இக்கலம்பக முதற்பாவினுறுப்பாகிய வம்போதரங்கத்திற் கெழுதிய விசேடவுரையைக்காண்க. (கசு)

(மடக்கு - எண்சீரடியாசிரியவிருத்தம்.)

இழைவளர்கோயிலுழைவளர்தாயி லின்புடைக்கிழத்திவென்புடைநி [ழற்றி
யுழைதிரிகாவின்மழைதிரிகாவ லூருழிசேர்ந்தாள்சூருழிதீர்ந்தாள்
1 வழைநிழலகத்தென்பிழையழலகற்ற வான்வரம்பொழியுந் தான்வரம்பொழிவாள் [வியுண்விழியே.
2கழைபொழிவாயாள்மழைபொழிகையாள்3 காவியுண்விழி4யென் ஞ

(ப - ை.) இழை - (தனக்கு) ஆபரணமாக—வளர்-(தனதுகருப்பத்தில்) வளர்ந்த—கோ - அரசனுகியகடவுளினது— இல்உழை - ஆலயத்தின்கண்—வளர் - வளர்ந்த— தாயில் - அன்னையினும்— இன்பு - இன்பத்தை— உடை-(நம்முடையசொல்லாதிகளில்) உடைய— கிழத்தி - தலைவியும்—உழை - மான்கள்— திரி - திரிகின்ற— காவில் - சோலையில்— மழை - மேகங்கள்—வென்புடை - (அம்மான்களின்)முதுகிடத்து—நிழற்றி - நிழலைத்தந்து—திரி - திரியப்பெற்ற—காவலூருழி - திருக்காவலூரில்— சேர்ந்தாள்-சேர்ந்தவளும்—சூர் - துன்பமாகிய—உழி - இடத்தை—தீர்ந்தாள் - நீங்கினவளும்— வழை-சுரபுன்னையினது—நிழல் - நிழலையுடைய— அகத்து - அத்திருக்காவலூரினிடத்து— என் - என்னுடைய— பிழை - குற்றமாகிய— அழல் - நெருப்பை—அகற்ற - தீர்க்க— வான் - மேன்மையினது— வரம்பு - எல்லையை— ஒழியும் - நீங்கிய— தான் - தானே — வரம் - வரங்களை— பொழிவாள் - சொரிபவளும்—கழை-கருப்பஞ்சாற்றைப்போல— பொழி - (இனிமையைப்) பொழியும்—வாயாள் - சொல்லையுடையவளும்— மழை - மேகஞ்சொரிதலைப்போல—பொழி - (வரக்கதிரைச்) சொரியும்—கையாள் - கரத்தையுடையவளுமாகிய தேவமாதாவினுடைய—காவி- நீலோற்பலமலரினது தன்மையை—உண்-உண்ட— விழி - கண்கள்— என் - எனது —ஆவி - உயிரை— உண் - உண்ணும்—விழியே - விழிகளேயாகும் எ - று.

(பொ-ை.) தனக்கோ ராபரணமாகத் தன்கருப்பத்தில் வளர்ந்த கடவுளி னலயத்தில் வளர்ந்தவளும் நம்முடைய சொல்முதலியவற்றிற் றயினுமின்பத்தைக்கொள்ளு நாயகியும் மான்களுலாவுஞ் சோலையில் மேகங்க ளவற்றின்முதுகில் நிழலைத்தந்துலாவப்பெற்ற திருக்காவலூரைச் சேர்ந்தவளும் பாவத்துன்பத்தை நீங்கினவளும் சுரபுன்னைவிருக்ஷங்களின்நிழலையுடைய வத்திருக்காவலூரிலென்னுடைய பாவநெருப்பையொழிக்க மேன்மையினளவைக் கடந்த தானே வரங்களைப் பொழிபவளுங்

கருப்பஞ்சாற்றைப்போ லினிமையைப்பொழியுஞ் சொல்லையுடையவளு மழைபோல் வரக்கதிரைச் சொரியுங் கையையுடையவளுமான தேவ மாதாவினுடைய நீலோற்பலமலரினது தன்மையைக்கொண்ட கண்க ளென்னுயிரையுண்ணுங் கண்களென்றவாறு.

1. வழைநிழலென்பதற்குச் சுரபுன்னைவிருக்ஷங்களையுஞ் செல்வங்களை யுமெனப்பொருள்கூறினுமமையும்.

2. "கழை" யென்பதும் 3. "காவி" யென்பதும் பொருளாகுபெயர்கள்.

4. என்னுவியையுண்ணும்விழியென்பதற்கு என்னுவியானது தம்மையே பற்றி நிற்றற்கேதுவான .விழிகளென்பது கருத்து. என்னுவியுண்விழியென் பதற்கு - (என்னுவியிடைவிடாம லவ்விழிகளைத் தன்னிடத்திலுடைய தென் னுங்கருத்துத்தோன்ற) என்னுவியாலுண்ணப்படும் விழிகளெனப் பொருள் கூறினுமிழுக்காது. (கஎ)

(வலைச்சி - மடக்கு- அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

விழிக்கயலோ குழிக்கயலோ விலைச்சிலைவான் வலைச்சியரோ விற்ப வுற்றீர், பிழிக்கயலாம் 1 பொழிக்கயலாம் பெருக்காவற்றிருக்காவற்பெயர் கொண்மூதூர், வழிக்கயலுள் 2 ளுழிக்கயலுண் குருகியலையருகி 3 யலை மதியாதுற்றீர், பழிக்கய 4 லாம் விழிக்கயலாஞ் சோர்வற்று ரவர்சேர்வர் 5 பணித்தடத்தே.

(ப - ரை.) வான் - பெருமையையுடைய—வலைச்சியரோ-மீன்வாணிச்சிய ரோ—விழி - கண்களாகிய—கயலோ -சேற்கெண்டைகளையோ— குழி - குளத் திலிருக்கும்—கயலோ - சேற்கெண்டைகளையோ—விலை - விற்குதலாகிய— சிலை-ஒலியால்—விற்ப - விற்க— உற்றீர் - இங்குவந்தீர்— கயல்உண் -சேல்மீனை யுண்ணும்—குருகு - பக்ஷியானது—பிழிக்கு - தேனுக்கு—அயல்ஆம் - இடமா கிய—பொழிற்கு - பூஞ்சோலைக்கு—அயல்ஆம்- இடமாகிய—பெருக்கு - மிகு தியாகிய— ஆவல் - ஆசையைத்தருகின்ற— திருக்காவல் - திருக்காவலென் னும்—பெயர் - பெயரினை—கொள் - கொண்ட—மூது - பழமையான—ஊர்- ஊரினது—வழி - (இப்) பாதையை—கயல்-சேல்மீனிமித்தமாக—உள்உழி- கருதுமிடத்தும்—இயலை - (நல்ல) தன்மையை— அருகி - சேர்ந்து— அலை - தான்பசியால்வருந்துதலை— மதியாது - பெரிதாகநினையாது.— பண் - பாட் டிசையினையுடைய— இத்தடத்து - இவ்வழியில்— விழிக்கயல்-கண்ணுகியகய லினின்று—ஆம் - நீர்—சோர்வு - விழுதலை—அற்று - நீங்கி—ஆர் - தங்கும்— அவர் - அத்தன்மையினர்—சேர்வர் - சேருவர்—உற்று - உம்மையடைந்து— ஈர் - (உயிரை) அறுக்கின்ற— பழிக்கு - பாவப்பழிக்கு— அயல்ஆம் - அன் னியமாகுங்கள் எ - று. ஏகாரம் - ஈற்றசை.

(பொ - ரை.) மேன்மையைக்கொண்ட வலைச்சியரோ ! கண்ணுகிய கயலையோ குளத்திலுள்ள கயலையோ இங்கேவிற்கும்படி விலைகூறிவந் தீர்கள்? சேல்மீனையுண்ணும் பறவையானது தேனிருக்குஞ்சோலைகட்

கிடமாய் மிக்கவாசையை விளைக்குந் திருக்காவலென்னும் பெயரினையுடைய விம்மூதூரின்வழியைச் சேல்மீனினிமித்தமாகக் கருதும்போதும் நல்லகுணத்தைக்கொண்டதாகித் தன்பசித்துன்பத்தைப் பெரிதாயெண்ணுது. கண்ணீர்விடுதற் கேதுவானதுன்ப நீங்கியிருப்பவர்தாம். பாட்டினிசையைக்கொண்ட் விவ்வழியின்கட்சேர்வார்கள். உம்மைச் சேர்ந் துயிரையறுக்கும் பாவத்தை நீங்குங்களென்றவாறு.

1. பொழில் - என்பதில்— லகரமெய்யும் 2. உழியும் என்பதில் சிறப்பும்மையும் 5. பண்ணித்தடத்தே என்பதில் ணகரமெய்யும் விகாரத்தாற் ரெக்கன.

3. இங்கே அலையென்பது "கெடுவாகவையாதுலகம்" "அங்காமுயற்சி" என்பவற்றில் கெடு அங்கா என்பவைபோலவந்த முதனிலைத் தொழிற்பெயர்.

4. ஆம்என்பது "சோறிடுந்தண்ணீரும்வாரும்" என்பதில் இடும் வாரும் என்பவைபோல்வந்த ஏவற்பன்மைமுற்றுதலின் "முற்றே லுயிருமுயிர்மெய்யுமேகலுமுளவே" என்றவிதிப்படி இடையுயிர்மெய்யேகவந்தது. (கஅ)

(எழுசீரடியாசிரியச்சந்தவிருத்தம்.)

தடமலிதருவுயர் 1 தருமலர்தருமதுநறவுமிழ் 2 நிழலுமிழ்காவலூ
ரிடமலிவருநய 3 மருள்பொருளிறையறை மறைபொறை தயையியையீ
[கை4யாய்
விடமலிவினைமலி மிகையற மிகைமலி நசையறவசையிறநோயெலாம்
படமலிதயையினள்பரவியபரிவினள் பரமனையருளினள் பாடினேன்.

(ப - ரை.) தடம்-வழிகடோறும்—மலிதரு-நிறைந்த—உயர்-உயர்ந்த—தரு-விருக்ஷங்கள்—மலர் - (அவ்விருக்ஷங்களிலுள்ள) மலர்கள்—தரு - பொழியும்—மது - தேனுல்—நறவு - வாசனையை—உமிழ் - தரும்— நிழல் - நிழலை—உமிழ் - தரப்பெற்ற—காவலூரிடம் - திருக்காவலூரினிடத்து—மலிவு-மிகுதியாகிய—அரு - அருமையான—நயம் - இன்பமும்—அருள் - தயையும்—பொருள் - வாய்மையும்—இறை-மேன்மையும்—அறை - சொல்லப்படும் மறை - வேதமும்— பொறை - பொறுமையும்— தயை - கருணையினுல்— இயை - பொருந்திய—ஈகை - (உத்தம) தானங்களும்—ஆய் - உண்டாகவும்—விடம் - நஞ்சைபோல— மலி - நிறைந்த— வினை - தீவினையால்— மலி - பெருகிய— மிகை - கேடு— அற - நீங்கவும்—மிகை - மிகுதியாக—மலி - பெருகிய—நசை - ஆசை— அற - ஒழியவும்—வசை-பலகுற்றங்களும்—இற- அறவும்— நோயெலாம் - துன்பங்கள்யாவும்—பட - கெடவும்— மலி - பெருகிய— தயையினள் - கிருபையைக்கொண்டவளும்—பரவிய - பரந்த—பரிவினள் - அன்பினையுடையவளும்— பரமனை - கடவுளை— அருளினள் - ஈன்றவளுமான திருக்காவலூர் நாயகியை— பாடினேன் - பாடித்துதித்தேன் எ - று.

(பொ-ா.) வழிகளிலெல்லா நிறைந்துயர்ந்த விருக்ஷங்கள் (தம் மலர்கள் பொழியுந்தேனுல்) வாசனைவீசுநிழலைத்தருந் திருக்காவலூரினிடத்தே யருமையான பேரின்பமுங் கருணையும் வாய்மையும் பெருமையுஞ் சொல்லப்படும் வேதமும் பொறுமையுந் தயையினு லியைந்த வுத்தமதானங்களு முண்டாகி விஷம்போற்பெருகிய பாவத்தால்நிறைந்த கேடும் பெருகியவவாவும் பலகுற்றங்களு மற்றெல்லாத்துன்பங்களு மறும்படி மிகுதியாகக் கருணையைக்கொண்டவளுந் மன்புடையாளுந் தேவனைப்பெற்றவளுமான திருக்காவலூர்நாயகியைப் பாடித்துதித்தேன் என்றவாறு.

I. "தரு" வென்பதை 2. "நிழலுமி" ழென்பதனேடுகூட்டிமுடிக்குக.

3. "அருள்பொரு ளிறையறைமறை" என்பதற்கிவ்வாறு பொருள்கொள்வதன்றியு மிரட்டுறமொழிதலென்னு முத்தியால் அருள்வேதமென்றுஞ் சத்திவேதமென்று மாட்சியாகச் சொல்லப்படும் வேதமுமெனவும் பொருள்கொள்க.

4. ஆய் என்பது வினையெச்சத்திரிபு. (கூக)

(நேரிசைவெண்பா.)

பாடிப்புகழ்ந்து படர்காவலூர்நங்கை
நாடிவணங்குநரரெல்லாங் - Iகேடிலரோ
மண்ணவருண்மாசிலராய் வாழ்ந்திவண்மற்றெப்பிலராய்
விண்ணவருள்வீற்றிருந்தொப்பார்.

(ப-ா.) படர் - (மேலோராற்) கருதப்படும்— காவலூர் - திருக்காவலூரிலெழுந்தருளிய— நங்கை - மாதரசியை—பாடி புகழ்ந்து - பாடித்துதித்து— நாடி - விரும்பி— வணங்கு - அஞ்சலிக்கின்ற— நரர் எல்லாம் - மானிடரெல்லாரும்— மண்ணவருள் - பூமியிலுள்ளவர்க் குள்ளே— மாசுஇலராய் - குற்றமில்லாதவர்களாய்—வாழ்ந்து - வாழ்வடைந்து—இவண்- இவ்வுலகத்தில்— மற்று - வேறுபொருளால்— ஒப்புஇலராய் - ஒப்பிடப்படாதவர்களாய்—விண்ணவருள் - வானவருள்— வீற்றிருந்து - வீறுபெற்றிருந்து—ஒப்பார் - அவ்விண்ணவரைநிகர்வார்கள் (ஆதலால்)—கேடுஇலரோ - (அவர்கள்) கெடுதலில்லாதவர்களேயாம் எ - று.

(பொ-ா.) மேலோரால் நினைக்கப்படுந் திருக்காவலூர் நங்கையைப் பாடித்துதித் தாசையோடு வணங்கு மனிதரெல்லாம் மனிதர்க்குள்ளே குற்றமில்லாதவர்களாய்வாழ்ந் திவ்வுலகத்தி னிகரில்லாதவர்களாய் வானவருட் பெருமைபெற்றிருந்து அவரைநிகர்வ ராதலா லவரழிவில்லாதவ ரென்றவாறு.

I. ஏகாரம் - தேற்றப்பொருளில் வந்தது. (ஈ,

## மாணுக்கன்கூறிய சிறப்புப்பாயிரம்

(அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

இருள்வீற்றிருக்கு நிழற்பூங்கா விடைபூண்காவலூரகத்தே
பொருள்வீற்றிருக்குந் திருக்கோயிற் பொன்னுசனத்திற்பொலிந்தாளு
1 மருள்வீற்றிருக்கு மணிமார்பி னணங்கைப்பாடியடிபணிந்தான்
றெருள்வீற்றிருக்கு மெய்ச்சுருதி தெளிக்கும்வீரமாமுனியே.

(ப-ரை.) தெருள்-அறிவு—வீற்றிருக்கும் - விளங்கியிருக்கப்பெற்ற—மெய்ச்சுருதி-சத்தியவேதத்தை—தெளிக்கும் - தெரிக்கும்—வீரமாமுனி- வீரமாமுனிவரென்னுந் தைரியநாதஸ்வாமிகள்—இருள்-இருளானது—வீற்றிருக்கும்-பெருமைபெற் றிருக்கப்பெற்ற— நிழல் - நிழலைச்செய்யும்— பூங்கா - பூஞ்சோலைகளை— இடை - தன்னிடத்தில்— பூண் – அணிந்த— காவலூரகத்து - திருக்காவலூரில்— பொருள் - (உரியபலநற்) பொருள்களும்— வீற்றிருக்கும் - விளங்கியிருக்கும்— திரு - செல்வம்பொருந்திய— கோயில் - ஆலயத்தில்— பொன் - பொன்னுலாகிய— ஆசனத்தில் - சிங்காசனத்தில்— பொலிந்து - எழுந்தருளி— ஆளும் - அரசுசெய்யும்— அருள் - கருணை— வீற்றிருக்கும் - விளங்கியிருக்கப்பெற்ற— அணி - அழகிய— மார்பின் - நெஞ்சினையுடைய— அணங்கை - தெய்வப்பெண்ணை— பாடி - கலம்பகத்தாற்பாடித்துதித்து— அடி - அவள்பாதத்தை— பணிந்தான் - வணங்கினுர் எ - று. ஏகாரம் இரண்டும் ஈற்றசைகள்.

(பொ-ரை.) புலமையாற் சிறந்து சத்யவேதத்தை யுணர்த்தும் வீரமாமுனிவரென்னுங் காரணப்பெயரையுடைய தைரியநாதஸ்வாமிகள் நிழலைச்செய்யு மிருண்ட பூஞ்சோலைகளை யணிந்த திருக்காவலூரி-லுரிய பலநற்பொருளும் விளங்குஞ் செல்வம்பொருந்திய தேவாலயத்திற் பொன்னுலாகிய பத்திராசனத்தி லெழுந்தருளி யரசுசெய்கின்றவளாகிய வருள் விளங்குநெஞ்சினையுடைய தேவமாதைக் கலம்பகத்தாற் பாடித்துதித்துப் பாதாரவிந்தங்களை வணங்கினுர்கள் என்றவாறு.

1. மனமானது மார்பினுள்ளிருத்தலால் "அருள்வீற்றிருக்கு மணிமார்பினணங்கை" யென்ருர்: தேம்பாவணிக்காட்சிப் படலத்தில் ௩௭ - வது பாட்டில் "மணிக்கலத்தூடமுதேந்து மருண்மொய்மார்போன்" என்பதிற்காண்க.

**திருக்காவலூர்க்கலம்பகம்**
**உரையுடன்.**
**முற்றிற்று.**

---

## விளம்பரம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| சாத்து கவியில் } கஉ | உச | வேத | தேவ |
| | ,, | மேன்மை | தெள்ளி |
| நூலில் - உ | ச | வரனுல | வானுல |
| ,, | ௩0 | உண்ணு | உண்ணும் |
| எ | க௩ | பொருளும் | பொதுளும் |
| கூ | க௩ | யரும்ப | அரும்ப |
| கஉ | க | மூவுவகு | மூவுலகு |
| உஉ | ௩க | னூறு | நூறு |
| உச | கஎ | உயோரு | யோரு |
| ௩0 | உ0 | மூயங்க | முயங்க |
| ௩௩ | உ0 | வராலுத் | வராலுந் |
| ௩எ | எ | அடைந்தான் | அடைந்தாள் |
| ௩கூ | அ | மகிழ்வே | மகிழ்வனவே |
| சஎ | ௩0 | காரண | காரிய |
| சகூ | கரு | காவா | காவ |
| ரு0 | கஎ | நானே | நாளே |
| ருக | கஅ | ஒருங்கு | ஒருங்கு |
| ருரு | ரு | மோக்ஷ | மோக்ஷ |
| ருஅ | உ௩ | காலூரை | காவலூரை |
| ருகூ | உஅ | ஒரு | ஒரு |
| ,, | ௩உ | ஒரு | ஒரு |
| சுஉ | ௩௩ | ஒரு | ஒரு |
| சு௩ | ௩௩ | வைலை | வைகலை |
| சுசு | ௩ச | ஒலி | ஒலி |
| சுஅ | உச | ஓர் | ஓர் |
| எக | உசு | தாரோளோர் | தாரார்ளோர் |
| எரு | எ | சம்பரதம் | சம்ப்ரதம் |
| எசு | எ | ஓர் | ஓர் |
| எஎ | உசு | நீருற்று | நீரூற்று |
| அச | ௩ச | யாதவி | யாதலி |
| கூக | உகூ | காலலூ | காவலூ |
| கூஉ | ௩ | அபவள் | அவ்வள் |
| கூ௩ | கக | ஓப்பு | ஒப்பு |
| ,, | க௩ | ஓர்ந்தனே | ஓர்ந்தனே |
| ,, | உச | இதுந | இதுநல் |
| கூசு | கஉ | வுளே | வுளேப் |
| ,, | உ௩ | ரில்வுலக | ரிவ்வுலக |
| க00 | ௩௩ | ௩ഠ | ௩0 |
| க0௩ | கரு | சேர்ந்தளள் | சேர்ந்தனள் |
| கக0 | உ | ரொரழுகுந் | ரொழுகுந் |
| ககஉ | உ௩ | யரளே | யாளே |
| ,, | உசு | !யொ | யெ |
| ககஎ | ச | விள் | விளங் |
| ககஅ | அ | சென்லர் | சென் |
| ,, | க0 | நல் | நல்லர் |